# திருவருள்
# THIRUVARUL

ஆசிரியர்
கவிஞர் புலவர் சித்தாந்தரத்தினம்
சோமசுந்தரப் பெருமாள்
கர்நாடக மாநிலம்

இந்நூல் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் பொருளுதவியின் துணையோடு வெளிவந்து உங்கள் கைகளில் தவழ்கிறது

வெளியீடு
ஸ்ரீ அருணகிரிப் பதிப்பகம்
பேட்டை மெயின் ரோடு,அர்க்கல்கூடு-573 102
கர்நாடக மாநிலம்

முதல் பதிப்பு : 2007 FIRST EDITION 2007


THIS BOOK IS RELEASED WITH THE FINANCIAL ASSISTANCE OF THIRUMALA THIRUPATHI DEVASTHANAMS. THIRUPATHI

விலை : ரூபாய் 50-00

DISTRIBUTORS.:SOMASUNDARAM CHARITABLE TRUST. ARKALGUD. KARNATAKA.
விற்பனை உரிமை: சோமசுந்தரம் அறக்கட்டளை அமைப்பு(பதிவு) பேட்டை மெயின்ரோடு,அர்க்கல்கூடு ஹாசன் மாவட்டம்.கர்நாடக மாநிலம்.

அச்சிட்டோர் :-

Cell : 98842 98206 Ph : 65184286

**C.V.S.P. OFFSET PRESS**

77, (Old No.28), Jani Jan Khan Road,
Royapettah, Chennai - 600 014.

# காணிக்கை

அருளால் பிறந்து அவனை அறிந்து அன்பு
பெருகிடும் பக்தியால் உருகியே நிற்பவர் தமக்கு
தருவான் தலைவனும் தலை சிறந்த முக்தியை
வருநிதி யெனவேதான் வாஞ்சையாய் பெருவீர் நீவிர்
பெருகிடும் வினைகளும் பேர் சொல்லும் மலங்கள்
வருகின்ற காலக் கணக்கில் காட்டும் மறுபிறவியென
பருகிடும் பேரின்பம் பகலவன் ஒளிபோல் பரவிட
சுருக்கமாய் சொல்லி சுதந்திரமாய் சிந்திக்க உம்மை
நெருக்கமாய் ஆக்கினேன் நினைவிலே நிர்க்கும்படி
பொருப்புடன் வாழ்த்தி வணங்குதல் புரிந்திடும் பணி
அருகுபோல் துளிர்த்து ஆல்போல் தழைத்து நீவிர்
மருவிலா பயனினை கயிலை மலையான் நல்கிட
திருவருள் நூலிதனை அவன் திருப்பாதத்தில் சூட்டி
குருவருளும் திருவருளும் தேடியும்மை வந்திடவே
அருள்கொண்டு அவ்வனை ஆராதித்து அடிபணிந்து
திருவருள் நூல்தனை தெரிந்து படைத்திட்டேனே.
அருமையென ஆதரித்தால் அதுவே ஆனந்தமாகும்
கருணையில் சிறந்தவர் நீவிர் எனக் கண்டு கருதி
உருக்கமாய் கைகுவித்து உங்கள்முன் வணங்கி
பெருக்கிடும் அன்பினை பேதையும் வேண்டினேன்
இருத்தினேன் இதயத்தில் எல்லாரும் வாழ்கவென
பருதிபோல் கடமை யாற்றி பாரினில் வாழ்கவே.

தங்கள் அன்புத் தொண்டன்

**சிவத்திரு சோமசுந்தரப் பெருமாள்**

கர்நாடக மாநிலம்

# உள்ளுறை

மானிடப்பிறவி என்பது புனிதமானது பெருவதற்கு அரி தானது என்பது உங்களுக்குத்தெரியும்.அரிது அரிது மானிடராய் பிறத்தல் அரிது என்று ஔவையாரும் கூறி சென்றுள்ளது தங்களுக்குத் தெரியும்.ஏழு வகையான பிறவிகள் 84 லட்சம் யோனி பேதங்கள் என்பது சாத்திரக் கணக்கு எப்படியோ பிறந்தோம் இருந்தோம் போவோம் என்று வாழ்ந்து முடிப்பது சிறப்பாகாது.ஒவ்வொருவரும் மகான்கள் கூறியபடி இனிப்பிற்வாமை வாய்க்காமல் வாழ்வதே சிறப்பாகும்.
"பிறப்பென்னும் பேதமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு "( திருக்குறள் )
இங்கே பேதமை என்பதுதான் அறியாமை..அறியாமை தான் ஆணவத்தைக் கொடுக்கும்.ஆணவமலம்தான் பிறப் பதற்கு அடிக்கோல் நாட்டும்.அப்புறம் அதுவே வளர்ந்து பெரிதாகி யுகங்கள்தோறும் தொடரும் தொடர்நோய் என் பது பலருக்குத் தெரியாது.உடலுக்கு வருவது நோய்கள் அதுபோல் உயிர்க்கு வருவது பிறவிகள்.ஒருநோய்போ னால் அடுத்த நோய் எப்படி பற்றுகிறதோ அதுபோல் ஒரு பிறவிபோய் அடுத்த பிறவியும் உயிர்களப் பற்றும்.

வங்கியிருப்பு இருந்தால் செலவுக்கு பணம்கிடைக்கும். இருப்பு இல்லாவிட்டால் செலவுக்கு எப்படி பணம் கிடை க்கும்.அதுபோல் இருப்பு என்று வர்ணிக்கப்படுகின்ற புண் ணிய-பாவங்கள் என்னும் பொருள்கள் இல்லாவிட்டால் உயிர்க்கு மீண்டும் பிறவி வாய்க்காது.அது எதுபோல் என் றால் வங்கிக்கணக்கு இருப்பு இல்லாத நிலை. BANK BALANCE- 0 என்று ஆவது.இந்த இருப்புக்குப் பெயர் ஆகாமியம்.இடையில் வந்து சேர்வது சஞ்சிதம் என்பது. இந்த இரண்டிலும் இருந்து எடுத்துச் செலவழிப்பது பிராரத்துவம் என்று சொல்லப்படும்.அப்படிச் செலவு செய் தாலும் தீர்ந்து போகாமல் மிச்சம் இருக்குமேயானால்

அதுவும் அடுத்த பிறவிக்கு வழிவகுக்கும்.இப்படி மாறி மாறி பிறந்து கொண்டே இருப்பதுவா சிறப்பு என்று யோசித்துப்பாருங்கள்.முள்செடியை வேரோடு பிடுங்கி எறிவதுபோல் பிறவி என்னும் முள்செடியை அடியோடு பிடுங்கி எறியவேண்டும்.செடி ஆழமாகவும்,பருமனாகவும் பலமுள்ளதாகவும் இருந்தால் பிடுங்கி எறிவதற்கு ஒருவர் உதவி நாடுவோம் அல்லவா அதுபோல் பிறப்பை களை வதற்கும் ஒருவரை துணையாக நாடவேண்டும்.அந்த துணைவர்தான் இறைவன்.அவர் தரும் திருவருள் என் னும் கருவியின் துணை கொண்டு அடியோடு தோண்டி முள்செடியை(பிறவியை) பறித்து எறிய வேண்டும்.

பிறப்பறுக்கும் பிஞ்ஞகன் தன் பெய்கழல்கள் வெல்க என்று சிவபெருமானது திருவடியைப்பற்றி பேசப்படு கிறது.பிறவிப்பிணி என்னும் நோயை நீக்கவல்ல வைத் தியர் சிவபெருமானேயன்றி வேறு யாரும் ஆகமாட்டார் கள்.அதுமட்டுமல்ல மாயப்பிறப்பறுக்கும் மன்னன் அடி போற்றி என்று மணிவாசகப் பெருந்தகை கூறுகிறார். பிறவிகளை எல்லாம் வேரோடு அறுத்தெறிபவர் இறை வன்தான்,அவர் ஊட்டும் திருவருள்தான்.வாழ்க்கையிலே ஒருவர்க்கொருவர் துணையாவது இயற்கை.வாழ்க்கையின் ஒவ்வொருபடிகளிலும் எட்டு எடுத்து வைக்கும்போது வெற்றி பெருவதற்க்கு.மண்ணுலக வாழ்க்கைக்கு துணை எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவசியம் இவ்வாழ்வு முடிந்தபின்பு வாய்க்கும் விண்ணுலக வாழ்வுக்கு ஒரு துணைக்கோடல் அவசியம்தானே.

அப்படித் தோன்றாத் துணையாவான் பரம்பொருள். தோன்றாத் துணையாவான் தன் அடியோங்களுக்கே என்று திருமுறைகள் செப்புகிறது.அப்படி எப்போதும் நமக்கு துணையாய் வருவது இறைவனது திருவருளே யாகும்..அவ்விறைவனது திருவருளை எப்படிப் பற்றுவது பயன்பெறுவது,அவன் பார்வையில் படும் வண்ணம் நம்

மை தயார்படுத்திக் கொள்வது,பக்குவம் அடைவது என்னும் இப்படிப்பட்ட கேள்விகளுக்கு விடையளிப்பது திருவருள் என்னும் இந்நூல். இந்நூலினை **திருக்கயிலாய பரம்பரை திருவாவடுதுறைஆதீனம் இருபத்து மூன்றாவது குருமகா சந்நிதானம் சீர் வளர் சீர் சிவப்பிரகாச பண்டாரச்சந்நிதி** அவர் களது பொன்னார் திருவடிகளில் சூட்டி காணிக்கை யாக்கி இதனை உங்கள் முன் வைக்கின்றேன்.இதில் பல உத்திகளும் விளக்கப்பட்டுள்ளது.எல்லோரும் வேண்டும் அத்திருவருளை நீங்களும் அடைய வேண்டும் அதற்க்கு எளியேனது இந்நூல் வழிகாட்டும் என்று நம்பி விடை பெறுகின்றேன்.தங்களது ஊக்கமும் ஆக்கமுமே அடியேனுக்கு இதுபோல் இனி வருங்காலங்களிலும் நல்ல படைப்புகளை உங்கள் முன் படைக்க உதவும் என்று நம்புகின்றேன்.

" வாழ்க வளமுடன் வாழ்க நலமுடன் "

தங்கள் அன்புத்தொண்டன்

சிவத்திரு

சோமசுந்தரப் பெருமாள்

கர்நாடக மாநிலம்

முனைவர்; துரை.பட்டாபிராமன்
பேராசிரியர் & தலைவர்
தமிழியல் துறை
முதன்மையர்-இந்திய மொழிப்புலம்
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
" தமிழகம் "
243,மூன்றாவது
தென்குறுக்குச்சாலை
மாரியப்பா நகர்
அண்ணாமலைநகர்
தொலைபேசி; 04144-239129 செல்; 9345769445
நாள்: 12-09-2006

# பாராட்டுரை

கர்நாடக மாநிலத்தைச் சார்ந்த சைவ சித்தாந்த நன்மணி கவிஞர் சோமசுந்தரப் பெருமாள் அவர்களை,அவர்களின் எழுத்துக்கள் வாயிலாக அறியும் வாய்ப்பு கிடைத்தது. இறைவன் திருவருளால் தமிழ்ப்பணி செய்யும் இவரின் செயல் தமிழுலகம் நன்கறிந்த ஒன்று எனலாம்.ஆதீனங் களோடும் சிவனடியார்களோடும் நெருங்கிய தொடர்புடை யவராக விளங்கும் சோமசுந்தரப் பெருமாள் அவர்கள் தமிழையும் சைவத்தையும் இருகண்ணாகப் போற்றும் இயல்புடையவர்.

திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகளிடத்து நெருங் கிப்பழகும் வாய்ப்பினைப் பெற்றவர்.இயற்கையாய் வந்த இந்து மதம் முதலாக இனி வரவிருக்கின்ற திருவருள் வரை இவரின் படைப்புகள் அனைத்தும் பதி,பசு,பாசம் எனும் உண்மைகளை விளக்கும் அடிப்படை நூல்கள் ஆகத் திகழ்கின்றன.சமயம் சார்ந்த எளிய மக்கள் பரம் பொருளின் சீர்மைகளை நன்கு உணர்ந்து கொள்ளும் நோக்கில் இவரால் வடிவமைக்கப் பெற்ற நூலாகத் திருவருள் திகழ்கின்றது.

திருவருள் என்பது நூலில் இடம்பெற்றுள்ள முதற்கட் ரை எனலாம்.இந்நூலின் கண் "கதம்பம்" என இறுதியில் அமைந்த பதிமூன்றாவது கட்டுரை காணப்படுகிறது இப் படைப்பின் தன்மையை இவர் சொல்லும் பாங்கு பாராட்

டத்தக்கது.ஞான நூல்களை ஓதல்,ஓதுவித்தல்,நற்
பொருளைக்கேட்டல் கேட்பித்தல் இறைவன் திருவருளை
சிந்தித்தல் எனும் நிலையிலேயே இவரின் தொண்டு
தொடர்கிறது எனலாம்.வாக்கு மனம் காயம் புத்தி
சித்தம் அகங்காரம் எனும் அனைத்தையும் சுட்டிக்
காட்டும் இந்நூலாசிரியர் இறைவனது இருப்பிடம் நமது
உள்ளம் தான் என்பதை அடிப்படைக் காரணிகளோடு
விளக்குகின்றார். "உள்ளம் பெருங் கோயில்"ஊனுடம்பே
ஆலயம் எனும் திருமூலரின் தத்துவங்களை உள்வாங்கிக்
கொண்டு எப்படியெல்லாம் நம்முடைய ஐம்புலன்கள்
உயிருக்குக் கேடு விளைவிக்கின்றன எனும் உண்மையை
நூலாசிரியர் விளக்கியுள்ள திறம் சிந்திக்கத் தக்கது.திரு
வாசகம் கந்தரலங்காரம் சிவப்பிரகாசம் திவ்வியப்பிரபந்தம்
திருமுறை ஆகியவற்றின் துணையோடு திருவருட்பயனை
எடுத்துக்காட்டும் இவரின் தன்மை பாராட்டுக்குரியது.

உயிர்கள் பாச ஞானம் பசு ஞானம் பதிஞானம் ஆகிய
வற்றின் உண்மைகளை அறிந்து உணரும்போதுதான்
திருவருள் நமக்குத் துணையாகும்.திருவருள் நமக்குத்
துணையானால் குருவருள் தானே வந்து சேரும் என்ற
சித்தாந்த உண்மையை ஆசிரியர் தெளிவாக விளக்கியுள்
ளார்.இறைவனது திருவருளை முயன்று பெருவதற்க்கு
மந்திரங்கள் தான் உயிருக்கு துணை செய்கின்றன.நம
சிவாயப் பதிகம் இவ்வுண்மையை விளக்கும்.இம்மை இன்
பத்தையும் மறுமையின்பத்தையும் முறையே பெறுவதற்கு
நமசிவாய சிவாயநம என்பதும் துணை செய்யும்.இன்பம்
என்பது எல்லா உயிர்க்கும் தானமர்ந்து வரும் என்பது
தொல்காப்பியம்.உள்ளத்தின் ஒருமைப்பாட்டின்
உணர்வே இன்பத்தை மீட்டுத்தர இயலும்.

மும்மலங்களின் இயல்புகளைப் பதி பசு பாசங்களோடு
இணைத்துப் பார்க்கும் இவரின் பட்டறிவு பாராட்டத்தக்
கது.உயிர்களோடு இரண்டறக் கலந்து இருக்கின்ற மலங்

களின் இயல்பு தொன்மையானது.நெல்லில் உமி போல வும் செம்பினில் களிம்பு போலவும் உயிர்களைப்பற்றி நிற்கின்ற மலம் இறைவனது அருள் வீழ்ச்சியினால்தான் பரிபக்குவம் அடையமுடியும்.இந்நிகழ்வினைச் சித்தாந்தி கள் மலபரிபாகம் என்பர்.இறைவனது இவ்வருள் வீழ்ச்சி யைச் சத்திநிபாதம் எனக் குறிப்பிடுவர்

இறைவனது திருவடிப்பேற்றினை அடையவொட்டாமல் தடை செய்கின்ற ஆணவம் முதலாகிய மலங்களைத் தூய்மைப்படுத்துவதற்கு இறையருள் துணை நிற்கும். உயிர்க்குற்றங்கள் நீங்கிய தூய்மையான அடியார்களின் திருவேடத்தினை வணங்கித் தொழும் மரபு இன்றும் பின்பற்றப்படுகிறது.

நூலாசிரியர் சிறந்த ஆன்மீகப் பற்றுடையவர்.தேவாரம் திருமுறை முதலான இலக்கியங்களில் பயிர்ச்சியுடை யவர்.நாடறிந்த பொழிவாளர்.மக்கள் மனத்தில் உயிரின் உன்மைகளைப் புரியவைப்பதே இவரின் படைப்பு நோக் கமாகத் திகழ்கின்றது.

இறையருள் இவருக்கு வாழ்வில் அனைத்து நலன்களை யும் கூட்டுவிப்பதாக.

ஒப்பம்
துரை. பட்டாபிராமன்
12-09-2006

BHARATHIDASAN UNIVERSITY
DEPARTMENT OF TAMIL STUDIES

Dr.Radha chellappan
Professor & Head
Date :13-09-2006

Palkalaiperur
Tiruchirapalli.620 024
Tamil Nadu. India.

## மதிப்புரை

'திருவருள்' என்னும் நூலை ஆக்கியிருக்கின்ற ஆசிரியர் திரு.பெ.சோமசுந்தரப் பெருமாள் அவர்கள் பணி நிமித்தமாக தமிழகத்தின் விருதுநகரில் இருந்து கர்நாடகம் சென்றவர்.பொதுத்துறை நிறுவனத்தில் பணியாற்றிக் கொண்டு இறையையும் தேடுகின்ற ஆசிரியர் சைவ சமய பணிகளும் சமுதாயப் பணிகளும் சீரிய முறையில் செய்து கொண்டிருக்கின்றார் என்பது பெருமைக்குரிய செய்தியாகும்.

நூலாசிரியர் திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் முதல் பல பெரியோர்களைக் குருவாகப் பெற்றவர்.சென்னைப்பல்கலைக்கழகத்தில் தமிழ்ப்புலவர் பட்டம் பெற்றதோடு திருவாவடுதுறை ஆதீனத்தில் முறையாக சைவ சித்தாந்தம் பயின்று சித்தாந்த ரத்தினம் பட்டம் பெற்றவர் என்பது குறிப்பிடத்தக்கது.இதற்க்கு முன் இவர் பல நூல்களை ஆக்கி வெளியிட்டுள்ளார்.அதில் இயற்கையாய் வந்த இந்து மதம் என்னும் நூல் திருப்பதி திருக்கோயில் நிதியுதவியோடு வெளிவந்து ஆசிரியருக்குப் பெருமை சேர்த்தது.அதனைத் தொடர்ந்து பல நூல்களை இலவசப் பதிப்பாக வெளியிட்டு மக்களுக்கு வழங்கியதுடன் கர்நாடக மாநிலத்தில் தமிழர்கள் வசிக்கும் பகுதிகளுக்கு எல்லாம் நேரடியாகச் சென்று இலவசமாக சைவசித்தாந்த வகுப்பு நடத்துவதும் பாராட்டி மகிழ்வதற்குரியது.

இவர் தற்சமயம் ஆக்கியுள்ள 'திருவருள்' என்னும் நூல் திருவருள் முதல் கதம்பம் வரையிலான பதிமூன்று கட்டு

ரைகளை உள்ளடக்கியுள்ளது..மானுடப்பிறவி பெற்ற ஒவ்வொருவரும் இறைவனின் திருவருளைப் பெறுவது அவசியமாகும்.இறைவனின் அருளை எவ்வாறு பெறுவது என்னும் முறையினை நூலாசிரியர் எடுத்துரைத்துள்ளார். இறைவன் இவ்வாறுதான் இருப்பான் என்று எண்ண இயலாது. என்பர் திருநாவுக்கரசர்.அவருடைய வழிமுறையைப் பின்பற்றி படிப்பவர்கள் இறைவன் இருக் கும் நிலையைப் பாங்கான முறையில் கண்டு தெளிவதற் காக ஆசிரியர் காட்டியிருக்கும் கணக்கு விளக்கங்கள் மிகவும் புதுமையானதாகும்.பசுவாகிய மனிதர்கள் பாச வினைகளிலிருந்து நீங்கி பதியாகிய இறைவனைக் கண்டு தெளிதல் அவசியம் என்பதைத் தெளிவாக்கியுள்ளார்.

அரசனுடைய ஆட்சிமுறை பற்றிய செய்திகளைக் கூறு வது தசாங்கம்.இதனைப்போன்று இறைவனுடைய அருளாட்சியையும் தசாங்கம் எனப்படும் பத்துவிதமான கோட்பாடுகளை நெஞ்சுவிடு தூது, திருக்களிற்றுப்படியார் சிவப்பிரகாசம் திருவருட்பயன் ஆகிய நூல்களின் வழி எடுத்துக்காட்டி உரைக்கும் விதம் நெகிழ வைக்கின்றது. உண்மையான இன்பம் என்பது நாம் இறைவனைப் பற்றித் தெரிந்து கொள்ளுதலும் அவனோடு கலக்க முற்படுதலுமாகும் என்பதை விளக்கியுள்ள நயம் பாராட் டுக்குரியதாகும்..அன்பினால் இறைவனை அடையலாம் என்பது சைவத்தின் குறியீடாகும்..ஆனால் எதிர்காலத் தில் வாய்க்க இருக்கும் பிறவிகள் எத்தகையதாக இருக்க வேண்டும் என்பதையும் ஆசிரியர் நூலில் விளக்கியுள்ள விதம் பாராட்டற்குரியது.

இறைவனுடைய அருட்காட்சி நிலைபேறுடைய உறவு அமைகின்ற விதம் மலபரிபாகம் மானுடப்பிறவியின் பயன் போன்றவற்றை ஆசிரியர் விளக்கியுள்ளார்.பிற உயிர்களிடம் காட்ட வேண்டிய கருணை மனப் பாண்மை பற்றியும் இறைவனின் திருநாமத்தைச் சிந்

தித்துத் திருவடிப்பேறு அடைதலையும் எளிமையுற விளக்குகின்றார்.

ஆசிரியரின் சீரிய முயற்சியில் உருவான இப்படைப்பு மானுடர்களை இறைவன்பால் ஈர்க்கும் அரிய நூலாகும் நூலாசிரியரின் படைப்புப் பணியும் சமுதாயப்பணியும் ஆன்மீகப் பணியும் சிறக்க வாழ்த்துக்கள்.

ஒப்பம்
டாக்டர்: ராதா செல்லப்பன்
தமிழ்த்துறை
பாரதிதாசன் பல்கலைக்கழகம்
திருச்சிராப்பள்ளி

மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
தமிழியல் புலம்

பேராசிரியர் மு.மணிவேல்
தலைவர் & ஒருங்கிணைப்பாளர்

## அணிந்துரை

'திருவருள்' நூலாசிரியர் திரு.சோமசுந்தரப் பெருமாள் அவர்கள் காமராசர் மாவட்டம் விருதுநகரில் பிறந்து வளர்ந்து பிழைப்புக்காகக் கர்நாடகம் பெங்களூரில் குடியேரியவர்.பொறியியல் துறையில் பணியாற்றியதோடு தமிழறிவு பெறவேண்டி சென்னைப் பல்கலைக்கழகத்தில் புலவர் பட்டம் பெற்றவர்."இரை தேடுவதோடு இறையும் தேடு" என்பதற்க்கிணங்க பக்தி நெறியில் ஈடுபட்டுப் பல சாதனைகள் படைத்ததுடன் திருமுருக கிருபானந்தவாரி யார் சுவாமிகள் ஈறாகப் பல குருமார்களைக் குருவாக ஏற்றவர்.முறைப்படி திருவாவடுதுறை ஆதீனத்தில் சைவ சித்தாந்தம் பயின்று ' சித்தாந்த ரத்தினம் ' ப்ட்டம் பெற்றதுடன் சைவசமய தீக்கைகள் பெற்றவர்.இவர் இது வரை சுமார் 15 க்கும் மேற்பட்ட நூல்கள் எழுதி வெளி யிட்டுள்ளார்.இதில் இலவச வெளியீடுகள் அதிகம்.

தற்போது கர்நாடக மாநிலத்தில் சைவசமயப் பணியும் சமுதாயப்பணியும் செவ்வனே ஆற்றிவரும் இவர் தற் போது எழுதியுள்ள 'திருவருள்' என்னும் நூல் மானிட ராய்ப் பிறந்த ஒவ்வொருவரும் ( பசுக்கள் ) தம்மைப் பிணித்துள்ள கட்டுக்களிலிருந்து விடுபட்டுத் தெளிவு பெற்று ( மலபரிபாகம் ) நம்மையெல்லாம் காத்து அரு ளும் எப்போதும் நம்முடனேயே கலந்துள்ள இறைவனை ( பதி ) அடைந்து பேரானந்தப் பெறுவாழ்வு அடைய வேண்டும் என்ற குறிக்கோளோடு ( சத்திநிபாதம் ) ஆக்

கியுள்ள விதம் பாராட்டத்தக்கதாக அமைந்துள்ளது. ஒவ்வொருவரும் இறைவனைக் காணவேண்டும் என்று படிப்பவரை ஈர்க்கும் விதம் நல்ல பாணி என்று சொல்ல வேண்டும்.திருவருள் முதல் கதம்பம் வரை இவர் தீட்டி யுள்ள பதின்மூன்று கட்டுரைகளும் மிகச் சிறப்பாகவே உள்ளன.சைவத்தைப் பற்றியோ இறைவனைப் பற்றியோ தெரியாதவர்கள் கூட ஓரளவு தெரிந்து தத்தம் வாழ்விலே நல்ல நெறிகளைக் கைக்கொள்வதற்க்கு இந்நூல் சிறந்த பயனளிக்கும்.

இறைத்தத்துவத்தைப் புலப்படுத்தும் வகையில் இவர் விளக்கியுள்ள கணிதவியல் புதுமையாக உள்ளது.அன்பு செலுத்தி இறைவனைக் காணலாம் என்பது மகான்கள் காட்டியுள்ள வழி.இத்துடன் இடையறா சிந்தனை,சிந்த னையை ஊட்டும் தொண்டு, தொண்டு சிறக்க எளிதா கும் பக்தி வயப்பட்ட ஞானம் ஆகியவற்றை நாம் அடை வது எப்படி? என்ற கேள்விகளுக்கு விடையாக எழுதப் பெற்றுள்ள படைப்புத்தான் திருவருள் என்னும் இந்நூல் என்று கூறிக்கொள்வதில் பெருமையடைகிறேன்.சாத்திரம் வழிகாட்டி( Theary )தோத்திரம் வழிமுறை ( Practical ) இரண்டும் சேரும் போதுதான் படைப்புத் தோன்றும் ( Product ) அப்படைப்புதான் பிறவி பெற்ற ஒவ்வொரு வரும் தேடி நாடி ஓடும் முக்தி அல்லது திருவடிப்பேறு என்று தத்துவத்தால் பேசப்படும்.( Grace )இதனை ஆசிரியர் விளக்கியுள்ள திறம் நளினமாகவும் எளிதில் எல்லாரும் புரிந்துகொள்ளும் வகையிலும் உள்ளது.

இதற்க்கு முன்பு ஆசிரியர் பலநூல்கள் எழுதி வெளியிட் டிருந்தாலும் இப்படைப்பு அவரது அனுபவ அறிவாலும் இறை அருளினாலும் மட்டும் எழுந்திட்டநம்மை நமக்கு காட்டும் காலக்கண்ணாடி போல் திகழ்கிறது என்பது பெருமைக்குரியதாகும். கர்நாடக மாநிலத்தில் தமிழ்த் தொண்டு சமயத்தொண்டு (திருப்பணிகள் ) சமுதாயத்

தொண்டு ( நலிவுற்றோருக்கு உதவுதல் )பக்திச் சொற்
பொழிவுகள் என்று இப்படிப் பலவாக ஈடுபட்டுள்ள கவி
ஞர் புலவர் சோமசுந்தரப் பெருமாள் அவர்கள் ஒரு
சிறந்த எழுத்தாளர் என்பதை இந்நூல் உறுதிப்பட
உரைக்கிறது என்பதில் ஐயமே இல்லை.இவர் திருப்பதி
சப்தகிரியிலும் தொடர்ந்து கட்டுரை எழுதுகிறார் என்பது
சிறப்பாகும்.இப்படிப்பட்ட ஆசிரியர் சோமசுந்தரப் பெரு
மாள் அவர்கள் நமது பெருந்தலைவர் காமராசரின் ஊர்
என்பதை நினைத்து இரும்பூதெய்தி இவர் இதுபோல்
படைப்புகள் பல படைக்க இறையருள் கூட்டட்டும்
என்று எல்லாம் வல்ல பரம்பொருளைச் சிந்திக்கிறேன்
வாழ்க வாழ்க

இவண்
மு.மணிவேல்

# திருவருள்

அளப்பறிய பிறவிகளுள் ஆய்ந்து வரும் பிறவியே மானிட பிறவி.அரிதான மானிடப்பிறவி பெறுவதும் ஆண்டவன் கருணையும் அவன் அருளே என்பது சான்றோர்கள் உய்த்துணர்ந்த அனுபவ அறிவு என்பதைக் காட்டிச்சென் றுள்ளார்கள்.பிறவி பெற்ற ஆன்மாக்களாகிய மானிடர்கள் எப்போதும் அரற்றுவது இறையருள் வேண்டித்தானே.. அவன் அருள் ஒன்று பெற்றுவிட்டால் அடையும் பயன் அளவிறந்தது அல்லவா.அதனால் அடையும் ஆனந்தமும் அளவுக்கோலுக்குள் அடங்குமோ.இறையருள் இப்பிறவிப் பிணிக்கு அரிய மருந்து.இறவாமைவேண்டுவோர் பிற வாமை வேண்டுவர்.பிறவாமை பெறுவதற்க்கு அருள் என் னும் அமுது அடைந்திடல் வேண்டும்.

"கிடந்த கிழவியை கிள்ளி எழுப்பி
உடந்தை உடனே நின்று உந்தீபற
உன்னையே கடந்தது என்று உந்தீபற ( திருவுந்தியார் )

தொடக்கமில் காலந்தொட்டு திருவருள் உயிர்களுடன் மறைந்து நிற்கிறது.உயிர்கள் ஆணவமலப்பற்று கொண்டு இருப்பதால் திருவருள் வெளிப்படாமல் இருக்கிறது.மலப் பற்று என்பது தன் முனைப்புடன் இருப்பதாகும்.கருவி கரணங்களோடு கூடிநிற்கும் உயிர் எனது என்னும் புறப் பற்றினை அறுப்பதற்க்குத் திருவருள் பற்று ஒன்றே வழி யாகும்.

" பற்றை அறுப்பது ஓர் பற்றினைப் பற்றில் அப்
பற்றை அறுப்பர் என்று உந்தீபற
பாவிக்க வாரார் என்று உந்தீபற "( திருவுந்தியார் )

அத்தகு திருவருளைப் பொருந்தி உயிர் ஞானமாய் நிற் கும் திருவருளைப்பற்றி திருவருளில் அழுந்தி நிற்க்கும் உயிர்களுக்கு அப்பற்றையும் சிவபெருமான் அறுத்துவிடு வான்.சிவபெருமான் ஆற்றலே திருவருள் ஆகும்.அத்திரு வருளை தன் தேவியாகிய சக்திமூலம் உயிர்க்கு ஊட்டு கிறான்.எனவேதான் தேவிக்கும் அருள்சக்தி என்று பேர், தான் தனது என்னும் தன் முனைப்பு என்னும் அகந்தை யற்ற உயிர்களையே அத்திருவருளும் சிவபெருமானிடம்

அழைத்துச்செல்லுமாம்.அந்தநிலையில் ஆன்மாவுக்கு "நான் ஞானி" என்னும் அகந்தை வருமானால் அத்தி ருவருள் கைநழுவிப்போய்விடும்.மனிதனை வாழவிடாமல் வழிகளை எல்லாம் மாற்றி பாழ்பட வைப்பதே பற்று என்பதாகும்.பற்றுகளை அறுப்பவர்க்கு அருள்கனி கிட்டும் என்பது தத்துவம்.அதனால்தான் திருவள்ளுவரும் பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றை பற்றி விடற்க்கு என் கிறார்.ஒன்று இருந்தால் மற்றொன்று இருக்காது.ஆகவே எது நமக்கு உறுதியானதோ எது நன்மை பயப்பதோ அதைத்தான் உயிர்கள் இறுக்கமாக பற்றிக்கொள்ளவேண்டும்

மூலாதாரத்தில் சூக்குமைவாக்காகிய நாதத்தத்துவம் பஞ் சபூதங்களில் நான்காவதாகிய காற்று என்னும் தத்துவத் துக்கு உந்தப்பட்டு நிற்கும் நிலைக்குப் பெயர்"நின்மல துரியம்"என்பது.இதுவே ஆன்மா திருவருள் பெற்று நிற் கும் தன்மையாகும்.திருவருள்தான் உயிர்க்கு தனுகரண புவன போகங்களை நுகரச்செய்கிறது.அத்திருவருள்தான் இறுதியில் ஆன்மா முக்திப்பேற்றினையும் அடையும்படிச் செய்கிறது.( GRACE ) ஆக இறைவனது திருவருள் இல் லாமல் உயிரானது சிவமாதல் என்னும் முத்திப்பேறு அடைய முடியாது என்பதுவே உண்மை.பிறவி பெற்ற நாம் இறைவனுடன் கூடும் நிலையே உயரிய நிலை என் றும் அரிய பிறபென்றும் பேசப்படுவதாகும்..

" ஒன்றும் குறியே குறியாதலால் அதனுக்கு
ஒன்றும் குறிஒன்று இலாமையினால் - ஒன்றோடு "
( திருக்களிற்றுப் படியார் )

ஒன்றும் குறி என்றால் பொருந்தும் அடையாளம். அதாவது சிவசக்தியாகிய திருவருள்.குறியாதல் என்றால் சிவபெருமானை உணர்தற்குரிய அடையாளம் என்பது பொருள்.எனவே திருவருள் துணையுடன்தான் இறை வனை அடைய முடியும் என்பது உறுதிப்பாடு.அருள்சக்தி தான் அருளாற்றலாக செயல் பட்டு பிறவி பெற்ற ஆன் மாக்களை இறைவனுடன் கூடும்படிச்செய்கிறது.நான் என்னை மறந்தேன் என்று ஞானிகள் கூறக்கேட்கலாம்.

அப்படி தன்னை மறக்கும் நிலைதான் உயிர் திருவரு ளோடு கூடும் நிலை அல்லது இயல்பு என்று சாத்திர நூல்களால் பேசப்படுகிறது.இத்தகைய அருளானது உயிளகளுக்கு எப்படி கிடைக்கும் வழிமுறைகள் என்ன என்பதையும் நாம் சற்று ஆய்வு செய்து பார்க்கவேண்டும்

பொதுவாகவே ஆன்மா அதாவது உயிரானது எதையும் தானாக அறியும் தன்மை அற்றது.ஒருவர் அறிவித்தால் அல்லது காட்டினால் அறிந்துகொள்ளும் இயல்பு படைத் தது.ஆகவே பிறவி பெற்றது முதல் இறுதிவரை உயிர்க்கு அறிவிக்கும் ஒருவர் தேவைப்படுகிறது.என்பது மறுக்க முடியாத உண்மையாகும்.ஒருபொருளை பார்க்கும்போது அல்லது கேட்கும்போது உயிரானது அதன் தன்மையி லேயே சேர்ந்துவிடும்.இதற்குப்பெயர்தான் சார்ந்ததன் வண்ணமாம் தன்மையது உயிர் என்று தத்துவங்களால் பேசப்படுகிறது.

" அருளில் பெரியது அகிலத்து வேண்டும்
பொருளில் தலையிலது போல் "( திருவருட்பயன்)

உலகியல் பொருள்களைப்போல் அருளில் பெரிய பொருள் ஒன்றும் இல்லை.உலகத்தில் உயிர்களுக்கு விரு ம்பும் வகைசெய்யும் பொருள் மேலானது என்று கூறப்படு கிறது.இது போகம்.அதுபோல் உயிர்கள் முக்தி பெருவ தற்க்கு தேவையான பெரியபொருள் திருவருள்.தனிவழி யில் நடந்துசெல்லும் கோடீஸ்வரனுக்கு தாகம் ஏற்படு கிறது.அப்போது அவன் தாகம் தீர்க்கும் தண்ணீரை விட மேலான பொருள் என்று ஒன்று இருக்க முடியுமா முடி யாது.அதுபோல் முக்தியடையும் உயிர்களுக்கு திருவரு ளைவிட மேலான பொருள் ஒன்றும் இல்லை என்பதுவே உண்மை.நாம் நடந்து செல்கிறோம் நமக்குப் பின்னால் ஒருவர் வருகிறார்.அதையறியாமல் நடக்கிறோம்.அது போல் ஞானமாகிய அருளை உயிரானது அறியாமலேயே காலம் கடத்துகிறது என்பதுதான் சித்தாந்த தத்து வமாகும்.

" தாமே தரும் அவரைத் தம்வலியி னாற்கருத
லாமே இவனார் அதற்கு "( திருவருட்பயன் )

ஒருபொருளை ஒருவற்க்கு தாமே விர்ரும்பித் தருபவரை தம்முடைய சாமர்த்தியத்தால் அவரிடமிருந்து பெற்றதாக நினைத்தால் அது நீதி ஆகுமா? ஆகாதல்லவா அது போல் திருவருளானது தானாக விரும்பி ஆன்மாவுக்குப் பேரின்பத்தை கொடுக்கும் போது தன்னுடைய திறமையி னால்தான் அதைப்பெற்றேன் என்று கூறுவது சரியாகுமா சரியல்ல.திருவருள் துணையின்றி பேரின்பத்தைப் பெறத் தக்க உரிமை ஆன்மாவுக்கு சிரிதும் இல்லை என்பது கருத்து.இவ்வுலகில் பிறப்பெடுத்த ஆன்மாக்கள் இறை வனது திருவருளைப் பெறமுடியாதவாறு தடைக்கல்லாக நிற்பது நல்வினை தீவினை என்னும் இருவினைகளாகும். உயிர்களது வெருப்பு விருப்பு காரணமாக நல்வினை தீவினை விளைகின்றன.எனவே இன்பம் துன்பம் அனுப வத்திற்க்கு இவைகள் காரணமாகின்றன.இந்த இருவினை களின் கூறுகள் ஆறு என்று வகுக்கப்பட்டுள்ளது.அவை கள் பேறு,இழவு,இன்பம்,பிணி,மூப்பு,சாக்காடு என்பன.

1.பேறு - பெறத்தக்க இன்பங்கள் அனைத்தும்
2.இழவு - இழக்கத்தக்க நன்மைகள் அனைத்தும்.
3.இன்பம் - நுகரத்தக்க அனுபவிக்கத்தக்க இன்பங்கள்
4.பிணி - பிணிக்கப்பட்ட(கட்டுப்பட்ட) சூழ்நிலை
5.மூப்பு - வாழவேண்டிய ஆயுட்காலம்
6.சாக்காடு - இப்படித்தான் இன்னமுறையில் சாகவேண் டும் என்பது..

இவ்வுண்மைகள் சாத்திர நூலான சிவஞான சித்தியாரில் விளக்கப்பட்டுள்ளது.இதேபோல கருத்து நாலாயிரதிவ்ய பிரபந்தத்திலும் உள்ளது.

"வேதநூற் பிராயம் நூறு மனிசர்தாம் புகுவரேனும்
பாதியும் உறங்கிப் போகும் நின்றதில் பதினை யாண்டு
பேதை பாலகன தாகும் பிணி பசி மூப்புத் துன்பம்
ஆதலால் பிறவி வேண்டேன் அரங்கமா நகரு ளானே "
( திவ்யபிரபந்தம் 874 )

பிறப்பெடுக்கும் மனிதர்கள் நூறுவயது ஆயுள் பெற்றா லும் அதில் பாதி உறக்கத்தில் போகும்.எஞ்சிய பாதி குழ்ந்தைப்பருவம்.மிச்சம் இருப்பதில் பசி பிணி மூப்பு துன்பம் இப்படி கழியும்.ஆகவே பிறவி வேண்டேன்

திருவரங்கத்தில் உறைபவனே என்கிறார் ஆழ்வார் பெருமான்.எனவே இருவினைகள் உயிர்க்கு வராமல் இருந்தால்தான் இறைவனது திருவருள் கிட்டும்."இரு வினை மும்மலமுமற இறவியொடு பிறவியற ஏக போக மாய் நீயும் நானுமாய் இறுகும் வகை பரம சுகம்அதனை யருள் இடை மருதின் ஏக நாயகா லோகநாயகா இமைய வர் பெருமாளே"என்று அருணகிரிப் பெருமான் முருகனி டம் இறைஞ்சுகின்றார்.மூன்று மலமும் இருவினையும் ஒழியவேண்டும்.அப்போதுதான் உயிர்களுக்கு பிறப்பும் இறப்பும் இல்லாத பேரருள் கிடைக்கும்.உயிர்கள் இறை வனுடன் பாரபட்சமின்றி கலந்து இன்புறும் நிலைக்குத் தான் முக்திப்பேறு என்று தத்துவங்களால் பேசப்படுகிறது ( ETERNAL GRACE OF LORD ) பிறவி பெற்ற ஆன்மாக்கள் பெற்றிடும் பல்வேறு நிலைகளால் திருவருள் கிடைக்கா மல் வாடுகின்றன.நல்வினை என்பது இதம் என்றும் தீ வினை என்பது அகிதம் என்றும் செயல்வகைகளால் பேசப்படுகிறது.முயற்சியானது செயல்வகைகளால் அனு பவமாயும் யான் செய்தேன் என்றும் கருத்து வகையால் மேல் வினைக்கு வித்தாயும் இருவகைப்பட்ட திறத்தால் கூறப்படுகிறது.

திருடன் கைவிலங்கு இரும்பு ஆனால் என்ன பொன் னால் ஆனால் என்ன விலங்கு விலங்குதானே.பொன் விலங்கு நல்வினை இரும்பு விலங்கு தீவினை.இவ்விரண் டும் உயிர்களுக்கு இன்பத்தையும் துன்பத்தையும் வழங் குகின்றன.1.அநுக்கிரகம் - அருள் 2.நிக்கிரகம்-தண்டனை 3.அறம்--புண்ணியம்,நல்வினை,இதம்.4.மறம்--பாவம்-தீ வினை,அகிதம் 5.நேசம்--கருணை,இரக்கம்,அன்பு.6.நிரை பரன்--எங்கும் எதிலும் குறைவற நிறைந்திருக்கும் பரசி வன்.இவ்விதம் உயிர்கள் செய்யும் கர்மங்களுக்கு ஏற்ப இறைவனால் படைக்கப்படுவதுதான் பாவ புண்ணிய பலன்கள் என்பது விளங்கும்.எனவே இறைவனது செயல்பாடுகள் எக்கால கட்டத்திலும் குறை அல்லது தவறு என்று விளக்கப்படமுடியாததாக விளங்குகிறது. இறைவன் செய்யும் எல்லாச்செயலும் எக்காலகட்டத்

திலும் கருணையே என்று பேசப்படுகிறது.உயிர்கள் ஆற்றும் நெறிமுறை வகைகளாவன.
1.அக்கிரமம் - நெறி தவறிய செயல்
2.கிரமம் - முறையான செயல்
3.இக்கிரமம் - இந்த முறை என்று குறிப்பிட்ட செயல்
4.எக்கிரமம் - எந்த முறையிலும் இல்லாத செயல்
இப்படி உயிர்கள் பிறவியைவிட்டு கடைத்தேற வேண்டுமானால் அவைகளது செயல்முறைகளும் வழி முறைகளும் அவசியம் என்று உறுதிப்பாடு செய்வதுதான் சித்தாந்த சாத்திரம் ஆகும்.எனவே திருவருளை உயிர்கள் பெற முடியாமல் தடுப்பது இருவினைகளே என்பது விளங்கும்.இவ்விருவினைகளும் உயிர்களுக்கு இறைவனால் ஊட்டப்படுகிறது.இதற்க்கு ஏவல் வினை என்று பேர்.இதனை நாம் செய்தோம் என்னும் அந்த தன் முனைப்பு தீருதல் பொருட்டு பயன் தருவது இறைவனுடைய கடமை ஆயிற்று. என்று சிவஞான சுவாமிகள் கூறுகின்றார்கள்.

நூனம் - குறைவு - ஊனம். அதிகம் - ஏற்றம்.
ஈனமில் செய்தி என்பது இழிவு இல்லாத செயலைக் குறிக்கும்.இழிவான செயல் என்பது ஆடு மாடு முதலிய பிற உயிர்களை வதைத்து அவற்றிக்கு தீமை செய்வதைக் குறிக்கும்.பேதைகளை ஏமாற்றுவது போன்ற செயல்களும் ஈனச்செயல்களே ஆகும்.இவைகள் ஈசன் இட்ட பணியாகாது.அவைகள் பாவச்செயல்களே.சுயநலம் கருதி பிற உயிர்களுக்குச் செய்யும் தீமைகளும் நூனங்களே ஆகும்.முற்றறிவு உடைய இறைவன் சிற்றறிவு உடைய உயிர்களுக்கு திருவருள் வழங்கும் பொருட்டு அவைகளுக்கு வினைப்பயனை ஊட்டுவதும் இறைவனது கடன் என்பது சாத்திர நூல்கள் புலப்படுத்தும் உண்மை.

"அருள் பெருவர் அடியார்தம் அடியனேற்கு ஆழியான்
அருள் தருவான் அமைகின்றான் அது நமது விதிவகையே
இருள் தருமா ஞாலத்துள் இனிப்பிறவி யான் வேண்டேன்
மருளொழிநீ மதநெஞ்சே வாட்டாற்றான் அடி வணங்கே "
( திவ்யபிரபந்தம் 3129 )

இந்த திவ்ய பிரபந்த பாடலைப் பாருங்கள்.நாம் வினைப்

பயனை நுகரும்போது அது நமது விதி என்று பேசப்படு கிறது.இவ்வுலக வாழ்வு இருள் சூழ்ந்தது.வாழும் காலம் எல்லாம் உயிர்கள் மயக்கத்திலேதான் வாழ்கின்றன. உண்மை நிலையை உணரமுடியாமல் போகிறது.சற்றும் வாட்டம் இல்லாதவனுடைய திருவடிகளை வணங்கி நாம் நமது வாட்டத்தைப் போக்கிக்கொள்ளவேண்டும். அப்போது நமக்கு இறைவனது திருவருள் கிடைப்பது டன் அருள்பெற்ற அடியார்கள் கூட்டத்தில் நாமும் ஒரு வராக பேசப்படுவோம் என்பது செயல்பாடு.எனவே இறை வனது திருவருள் சுலபமாககிட்டும் கனியல்ல.அதனை அடைவதற்க்கு பெரு முயற்ச்சிகள் செய்யவேண்டும்.ஆம் அருள்பெற்றவர்களுக்குத்தான் மீண்டும் பிறவாமை வாய்க் கும்.மேலேயுள்ள பிரபந்தம் பிறவி வேண்டேன் என்று கூறுகிறது.காரைக்கால் அம்மையார் ஈறாக வந்துசென்ற மகான்கள் அனைவரும் பிறவி வேண்டாம் என்றே கூறிச் சென்றுள்ளார்கள்.யாராவது பிறவி வேண்டும் என்று கேட் டுச்சென்றுள்ளார்களா?என்பதை சிந்திக்க வேண்டும்.முயற் சிகளுக்கு முதல் கரு உயிர்.உயிர் தங்கும் இடம் உடல். உடலில் பொருந்தியுள்ள கருவிகள் ஏழு என்று பேசப்படு கிறது.

1.காரணம். 2.வினை செய்வதற்குரிய காலம். 3.வினை செய் யப்படுகின்ற பொருள்.4.அந்தப்பொருளை கூடுகின்ற நியதி 5.செய்யும் செயல்.6.செய்யும் உடல்.7.செய்வதால் உறும் பயன் ஆகியன.தனது ஆணையாகிய திருவருளால் உயிரு க்கு இறைவன் இந்த் ஏழு முதல் நிலைகளையும் கூட்டு விப்பான்.ஆகவே இந்த ஏழு நிலைகளோடு கூடி உயிர் கள் செய்யும் செயல்கள் எல்லாம் இறைவன் கட்டளை யாகும்.ஆக திருவருளை அடைவதற்க்கு தடையாக இருப் பது நல்வினை தீவினை என்று விளக்கப்படுகிறது.இங்கு நல்வினை தீவினை என்பது என்ன என்பதை சற்று கவ னிப்போம்.நல்வினைகள் அறச்செயல்கள் என்றும் தீவினைகள் மறச்செயல்கள் என்றும் கூறி உள்ளோம். அந்த அறச்செயல்கள் வகை காண்பீர்களாக.

1.ஒழுக்கம் - உயர்ந்த பண்புள்ளவரோடு பொருந்த நடப்

பது.உலகத்தோடு ஒட்ட ஒழுகல்.

2.அன்பு - எல்லாரிடத்திலும் அன்புடைமை.அன்பே சிவம் என்பது கவனிக்கவும்.

3.அருள் - கருணை உடைமை. இரக்கம்

4.ஆசாரம் - ஆகம நூல்களில் உள்ள விதிமுறைகளை கடைப்பிடித்தல்.

5.உபசாரம் - அடியார்களிடம் காட்டும் உபசரிப்பு முறை

6.உறவு - எல்லாரிடமும் நட்பு பாராட்டுதல்.

7.சீலம் - நற்குணம் கொண்டிருத்தல்

8.வழுக்கு இல்லாத் தவம் - பொறிபுலன்களை அடக்கி உயர்ந்த விரதம் கடைப்பிடித்தல்

9.தானங்கள் - தக்கோர்களுக்கு உவகையுடன் செய்யும் தான தருமம்.

10.வந்தித்தல் - தன்னைவிட மூத்தவர்களையும் அடியார் பெருமக்களையும் வணங்குதல்.

11.வணங்கல் - யாவரிடத்தும் பணிவுடைமை

12.வாய்மை - உண்மை பேசுதல்.எக்காலத்தும் பொய் பேசாது இருத்தல்

13.அழுக்கு இலாத் துறவு - பிறன்மனை விழைதல்,வரைவின் மகளிர்பால் செல்லுதல் முதலியன இல்லாது இருத்தல்

14.அடக்கம் - கூடாதநெறி செல்லாது அடக்கமுடன் இருத்தல்.

15.அறிவு - இவைகள் தகும்,இவைகள் தகாது என்று பகுத்து உணரும் இயல்பு

16.அர்ச்சித்தல் - குலதெய்வத்தை பூசனை செய்தல்

இவைகள் அல்லாதன தீவினைகள் ஆகும்.நல்வினைகளுள் சிறந்தது சிவ வழிபாடு.அதுவும் குறிப்பிட்ட உபாசனா மூர்த்தி வழிபாடு தேவை.அதற்குப்பலன் சிவனே தருவன் என்பது வரலாறு கூறும் உண்மை.இப்பட்டியலில் உள்ளவைகள் எல்லாம் பிறவி பெற்ற நம்மால் உயிர்களால் கடைப்பிடிக்கப்படுமேயானால் கண்டிப்பாக இறைவன் திருவருள் கிட்டும்.இனிப்பிறவாது இனிதே இருக்கலாம் என்பது வெளிப்பாடு.நோய் உடலுக்கு வரு

வது பிறவி என்பது உயிர்க்கு வருவது.ஆக உயிர்க்கு வாய்க்கும் பிறவிப்பிணி தீர்க்கும் அருமருந்து இறைவனே என்று கண்டு தெளிவதாகும்.பிணிகள் என்பது-பாவகன் மம்-தீவினைகள் என்று அனுபவத்திற்க்கு வரும்போது பேசப்படுகிறது.இவைகள் மூன்று வகைப்படும்.
1.ஆதி தைவிகம் - தெய்வத்தால் வருவது
2.ஆதி பௌதிகம் - பஞ்சபூதங்கள் வாயிலாக வருவது
3.ஆதி யான்மிகம் - உயிர்களால் வருவது.
இறைவன் உயிர்கட்கு வரும் இருவினை ஆகிய நோயை பல வகையிலும் இன்ப துன்பங்களைக் கொடுத்து பக்கு வப்படுத்தி திருவருளைப் பெருமாறு செய்வன் என்பதுவே கூற்று.இதனை அறியாத மாந்தர்கள் தமக்கு துன்பமும் துக்கமும் வந்து வாய்க்கும்போது கடவுளுக்கு கண்ணில் லையே இப்படிப்போட்டு துன்புறுத்துகின்றானே என்று இறைவன் பால் நொந்து கொள்வது இயல்பு.

அபரஞ்சி தங்கத்தால் ஆபரணம் செய்யமுடியாது.செய் தால் நிலைக்காது.ஆகவே அதன் மாற்று சிரிது குறைத்து அதனை எத்தனை முறை நெருப்பில் இட்டும் சுத்தியால் அடித்தும் நீட்டியும் வாட்டியும் செயல்படுத்தும்போது அது நாம் அணியும் ஆபரணமாக பரிணமிக்கின்றது.ஆக வே நமக்கு துன்பம் வரும்போது இறைவன் நம்மை பக் குவப்படுத்துகின்றான்,அவனது திருவருள் அருகிலேயே உள்ளது எளிதில் அடைந்து விடலாம் என்று காணுவதே மானிடர்க்குப் பொருத்தமுடையது ஆகும்.தீவினை என் கின்றபோது உயிர்கள் பெரிதாக ஏதும்செய்யாவிட்டாலும் இயர்கையாக உயிர்களுக்குரிய உணரமுடியாத மயக்கமே தீவினைகளாக மாறுகிறது என்பதுவே வெளிப்பாடு.இது ஆணவமலத்தின் வெளிப்பாடு அல்லது காரியங்களென சாத்திர நூல்களால் விளக்கப்படுகிறது.
1.மோகம் - குருவாலும் நூல்களாலும் தீயவை என்று கூறப்பட்ட பொருள்கள் செயல்களில் மதிமயங்கி விருப் புறுதல் அல்லது நிற்றல்.( INFATUTION )
2.மதம் - தன்னைப்போல் ஒருவரும் இல்லை என்று

பறை சாற்றிக்கொளுதல். ( RESPECT )
3.இராகம் - கிடைக்காத பொருளிடத்தில் ஆசைப் படுதல் ( DESIRE )
4.கவலை - கிட்டிய பொருள் பிரிந்தபோது வருந்துதல் ( WORRIES )
5.தாபம் - சுற்றத்தை விட்டுப் பிரிவதற்க்கும் பிரிந்ததற்கும் ஆற்றாமை.(PANGS OF SEPARATION )
6.வாட்டம் - அந்த ஆற்றாமையால் மலர்ச்சியை இழந்து வாடுதல்.( A LOOK OF WEARNESS )
7.விசித்திரம் - எந்தச் செயலும் வினைவழி நிகழ்வதென்று எண்ணாது தான் செய்த தாகவும் பிறர் செததாகவும் எண்ணுதல்( STRANGENESS )
இத்தகு மயக்கங்களால் உயிர்கள் திருவருளைக் கூடா மல் இருக்கும் நிலை வருகிறது.இங்கு உயிற்க்கு வேண்டு வது அறிவும் தெளிவுமாகும்.
" ஊரும் சதம் அல்ல உற்றார் சதம் அல்ல உற்றுப் பெற்ற
பேரும் சதம் அல்ல பெண்டிர் சதம் அல்ல பிள்ளைகளும்
சீரும் சதம் அல்ல செல்வம் சதம் அல்ல தேசத்திலே
யாரும் சதம் அல்ல நின் தாழ் சதம் கச்சி ஏகம்பனே "
என்று பட்டினத்துச் சுவாமிகள் புலம்பிச்சென்றுள்ளது எத்தனைபேர் அறிந்து நடக்க முற்படுகிறார்கள் என்பது கேள்வியாகத்தான் முளை விட்டுக்கொண்டிருக்கிறதே அல்லாமல் விடை தெரிந்தபாடு இல்லை.விடைகளை உயிர்கள் அறிந்து கொள்ளுமேயானால் ஆண்டவனது திருவருள் அவர்கள் பக்கம் சாதகமாய் வந்துவிடும் என் பது தெளிவு.எனவே உயிர்கள்திருவருளை அடைய முடியாதவாறு தெடுத்திடுவது ஆணவமும் மயக்கமும் ஆகும்.இவைகள் முறையே
1.பிரதிபந்தம் - எதிர்சென்று தடுத்து நிற்பது
2.அனுபந்தம் - தொடர்ந்து சென்று தடைகளை ஏற்படுத் துதல்
3.சம்பந்தம் - கூடியிருந்து தடைகளையும் துன்பத்தையும் விளைவித்தல்.இவைதான் போகம் என்று பெறப்படும்.
நாம் கேள்விப்பட்டிருப்போம், கூடி இருந்து குழிபறிப்பது

அதுதான் இது சாத்திரத்தில் பேசப்படுவது என்றறிக. சம்பந்திகளுடன் வைத்துக்கொள்வது உறவுச்சம்பந்தம் ஆனால் உண்மையான சம்பந்தம் என்பது இறைவ னுடன் கூடுவதாகும்."உள்ளுயிர்க்கு உயிராய்த் தெளிக் கும் அறிவு திகழ்ந்து உளதேனும் திரிமலத்தே குளிக் கும் உயிர் அருள் கூடும்படி கொடிகட்டினனே"என்று உமாபதிசிவம் அவர்கள் கொடிக்கவி பாடலில் கூறிஇருப் பதின் உண்மைப்பொருளை அறிவீர்களாக.இறைவன் எப் போதும் உயிர்க்கு திருவருள் கூடவேண்டும் என்றுதான் நினைக்கிறார்.ஆனால் அது கூடாமல் செய்வது உயிர் களது கர்மவினைகளே ஆகும்.

ஒளி - என்பது சிவஞானம்.இது உயிர்க்கு விளக்கம் தரு வதால் ஒளி என்று பேர் பெற்றது. அஞ்ஞானம் என்னும் இருள் விலகும்..இருள்- என்பது ஆணவமலம் என்று பேர் பெரும்.இது உயிர்க்கு மயக்கத்தை
தருவிப்பது.இறைவனைக்காண முடியாமல் மறைக்கும் திரை என்றுச்சொல்லலாம்.அறியாமையைச் செய்து அறி வை மறைத்தலால் இது இருள் என்று பேசப்படுகிறது.

"வாக்காலும் மிக்க மனத்தாலும் எக்காலும்
தாக்கால் உணர்வரிய தன்மையனை- நோக்கிப்
பிறித்தறிவு தம்மில் பிறியாமை தானே
குறிக்கும் அருள் நல்கக்கொடி." ( கொடிக்கவி )

எக்காலத்தும் மிகுதியான சொற்களாலும் மனத்தாலும் எய்துதற்கரியனாயும் உயிர் தன் அறிவால் அடைதற்கரிய னாகிய இறைவனை தனது அறிவால் வேறாக ஆராய்ந்து பார்த்து அறிவிற்கறிவாய் அதனின்று பிரியாது விளங்கும் தகைமையை உலகத்தார் அறிந்துகொள்ளுமாறு இறை வன் திருவருள் சுரந்திடுமாறு இக்கொடிதன்னை கட்டி னேன் என்று கூறப்படும் சாத்திரக்கூற்று எத்தகு சிறப் புடைத்தாய் இருக்கிறது என்பதைக் காண்பீர்களாக.இதே கருத்தினை உறுதிப்படுத்து கின்றது அருணகிரியார் திருப்புகழ்."அறிவால் அறிந்து இருதாழ் இறைஞ்சும் அடி யார் இடைஞ்சல் களைவோனே'என்று கூறுகிறார்.உண் மையான அறிவு என்பது இறைவனைக் கண்டு தெளியும் அறிவேயாகும்.அவ்வறிவுதான் இறைவனது திருவருளை

நல்கச்செய்யும் என்பது உறுதி. உயிர்கள் இறைவனைக் கூட முடியாமல் செய்வது உயிர்க்குள்ள அந்தக்கரணங்கள் எனப்படும் நான்கு.1.மனம். 2 புத்தி 3. அகங்காரம் 4.சித்தம் என்பன.இவைகளை ஆங்கிலத்தில் நான்கு"பி" என்று கூறுவர்.FOUR "P" என்பது.PLAN, PROGRESS, PERFORMANCE, PRODUCT என்னும் இந்த நான்கும் உள்ளத்தின் கூறுகளாக உள்ளத்தை ஆட்படுத்திக் கொள்வனவாக உயிர்களிடம் திகழ்வதால் இறைவனது திருவருளைப் பெறப்பட முடியாத அவல நிலை கிட்டுகிறது என்பது உண்மை.இந்த இடத்தில் உள்ளத்தை திடமாகவைத்துக் கொள்ளும் பணி உள்ளத்துக்கு விடப்படுகிறது.அதனால் தான் உள்ளம் பெரும்கோவில் ஊனூடம்பு ஆலயம் என்று மகான்கள் கூறிச்சென்றுள்ளதைக் காணவும்.இப்படி மகான்கள் கூறி இருப்பதன் உண்மையை நிரூபிக்க வேண்டும்.இந்த முத்திறத்து கறணங்களையும் எழுத்துக்களையும் அதிதேவதைகளையும் காண்பீர்களாக.

| கரணங்கள் | எழுத்து | அதிதெய்வம் |
|---|---|---|
| அகங்காரம் | அ | அயன் |
| புத்தி | உ | மால் |
| மனம் | ம | அரன் |
| சித்தம் | விந்து | ஈசன் |
| உள்ளம் | நாதம் | சதாசிவன் |

ஆக இறைவனது இருப்பிடம் நமது உள்ளங்கள்தான் என்பது விளங்கும்.வள்ளல் பிரானுக்கு வாய் கோபுரவாசல் தெள்ளத்தெளிந்தோர்க்கு சீவன் சிவலிங்கம் கள்ளப்புலன் ஐந்தும் காளாமணிவிளக்கே என்று மகான் கூறும் வாக்கியம் எத்தகு மகத்துவம் வாய்ந்தது என்பது புரிகிறது அல்லவா? இப்போது முழுப்பாடலையும் பாருங்கள்

" உள்ளம் பெரும் கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளற் பிரானுக்கு வாய் கோபுர வாசல்
தெள்ளத் தெரிந்தோர்க்கு சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே "

ஐம்புலன்கள் என்று கூறப்படும் மெய் வாய் கண் மூக்கு செவி இவைகள் நம்முடன் வாழ்ந்துகொண்டே நமக்கு கேடு செய்வனவாகும்.திருவருளைக்காணமுடியாமல் செய்

வதில் இவைகளுக்கும் பங்கு உண்டு.இதனை அருணகிரி நாதர் அழகாக கந்தர் அலங்காரப் பாடலில் கூறுகிறார்.

" மைவரும் கண்டத்து மைந்தா கந்தாவென்று வாழ்த்துமிந்தக்
கைவரும் தொண்டன்றி மற்றறியேன் கற்றகல்வியும் போய்ப்
பைவரும் கேளும் பதியும் கதறப் பழகி நிற்கும்
ஐவரும் கைவிட்டு மெய்விடும் போது உன் அடைக்கலமே "

இங்கு பழகி நிற்கும் ஐவர் என்று குறிப்பதுதான் ஐம்பு லன்கள் என்று பேசப்படுகிறது.ஆக உயிர்களது உறுதிப் பாட்டினைக் கலைத்து அவைகள் திருவருளைச் சேர முடியாமல் செய்வது ஐம்புலன்கள்,அந்தக்கரணங்கள் ,தன்மாத்திரைகள் இவற்றுடன் பஞ்சபூதங்களும் கூட தங்களது பங்குகளைச் சற்று பகிர்ந்து கொள்ளும் என் பது நூல்கள் காட்டும் உண்மை.இவைகளது ஆக்கிரமிப் பில் இருந்து உயிர்கள் விடுபட்டு சுதந்திரம் பெறவேண்டு வது குறிப்பிடத்தக்கது.அப்போது திருவருளைக் கூட்டு விக்க இறைவனே குருவாக எழுந்தருள்வன் என்பது மறுக்கவும் மறக்கவும் முடியாத உண்மைக் கூற்று ஆகும்.மொத்தத்தில் திருவருள் கூடுவது குருவருள் மூல மாகவேதான் என்பதையும் கண்டு தெளிய வேண்டும்.

உயிர்களுக்கு நல்ல குருநாதன் வாய்ப்பது அரிது.அப்படிக் கிடைத்துவிட்டால் கண்டிப்பாக திருவருளை கூட்டச் செய்திடுவார் என்பதில் ஐயமே இல்லை.மாணிக்க வாசகர் அரசன் ஆணை ஏற்று குதிரை வாங்கச்செல்கிறார்.திருப் பெருந்துறை என்னும் ஊரை அடைகிறார்.அங்கு ஒரு குருவானவர் நான்கு சீடர்களுக்கு வேதங்களை உபதேசி த்துக் கொண்டிருக்கிறார்.மாணிக்கவாசகர் அந்தக்காட்சி யைப்பார்க்கிறார்.அவர் வந்தவேலையை மறக்கிறார்.குரு வின் திருஉருவம் மாணிக்கவாசகரை காந்தம்போல் கவர் கிறது.இருவரது பார்வைகளும் ஒருவர்மீது ஒருவரென படர்கிறது.அப்பா உனக்காகத்தான் நான் இங்கு காத்தி ருக்கிறேன் என்று குருநாதர் கூறுவதுபோல் மணிவாச கருக்குப் புலப்படுகிறது.சுவாமி தங்களைத் தேடித்தான் வந்தேன் என்று மணிவாசகர் கூறுவது போல் குருவுக்கு தெரிகிறது.எல்லாம் மனதுக்குள் நடக்கும் சம்பாசனை.

மணிவாசகர் பார்க்கிறார் குருவின் பொற்பாதங்கள் பூமியைத்தொட்டுக் கொண்டிருக்கின்றன.பார்வையால் படம் பிடித்த மணிவாசகர் வந்திருப்பது சிவபெருமான் வேதங்களும் காணமுடியாத பாதம் மண்ணை தொட்டுக்கொண்டிருக்கின்றன.மணிவாசகர் கூறுகிறார்.

" புவனியில் சேவடி தீண்டினன் காண்க
சிவனென யானும் தேறினன் காண்க
அவனும் எனை ஆட்கொண்டு அருளினன் காண்க "
( திருவாசகம் )

வந்து அமர்ந்திருப்பது சிவப்பரம்பொருளே அவர்தான் தெட்சிணா மூர்த்தி கோலம் கொண்டு வந்துள்ளார். என்பதை உணர்கிறார்.இப்படி மணிவாசகருக்கு கிடைத்திட்ட தெட்சிணாமூர்த்தி அருணகிரியாருக்கு வாய்த்திட்ட முருகன் போல்.நம்பியாண்டார் நம்பிக்கு கிடைத்திட்ட விநாயகர் போல்,ஸ்ரீ ஹர்சன் என்னும் புலவருக்கு கிடைத்த சரஸ்வதிபோல்,அர்ச்சுனனுக்கு கிடைத்திட்ட கண்ணன் போல் உயிர்களுக்கு நல்ல குருகிடைப்பார்களேயானால் அதுவே பிறவிப்புண்ணியம் பெற்றதின் பலன் என்பது சொல்லாமலே விளங்கும்.ஆகவே இருவினை என்பது உயிர்க்கு மயக்கத்தை தருவதுஎன்பதில் மாறுபட்ட கர்ருத்து இல்லை.ஆகவே உயிர்கள் திருவருளைப் பெருவதற்க்கு இருவினையில் இருந்து விடுபட்டு வரவேண்டும்.

" மயக்கும் இருவினை வல்லியில் பூண்டு மதிமயங்கித்
துய்க்கும் பிறவியில் தோன்றிய என்னை துயரகற்றி
உயக் கொண்டு நல்கும் ...."( திவ்விய பிரபந்தம் 3993 )

மாயை மயக்கமும் செய்யும் என்பது சித்தாந்த தத்துவம். வல்லி என்பது கால்விலங்கு.விலங்குகள் கால்விலங்கு கை விலங்கு என்று மாறி மாறி உயிர்களுக்கு வந்து கொண்டிருக்கிறது. இதிலிருந்து விடுபட்டு உய்வு பெரும்பொருட்டு திருவருள் ஒன்றே துணை செய்யும் என்பது உறுதி.அத்திருவருளே இறைவனது திருவடிப்பேற்றுக்கு அழைத்துச்செல்லும் என்பது சாத்திர வாயிலாக பேசப்படுபவைகள் ஆகும். ஆகவே ஏதோ பிறந்தோம் இறந்தோம் என்று இருக்கக் கூடாது.ஆக திருவருளைக் கூடவிடாமல் உயிர்களைத் தடுப்பது இருவினைகளும் மாயைகளும் ஆகும்.மாயையில்

சுத்தமாயை அசுத்த மாயை என்று இருவகை உண்டு. இவ்விரண்டும் ஒழியாமல் வரும் புண்ணிய பாவங்களா லும் ஆகிய இவற்றின் உண்மையேயாய் நின்று போகங் களை அனுபவவிக்கும் அரிய உயிரினிடத்தில் பொருந்திய பெத்த நிலையில் ஞானம் வெளிப்படாது செய்துவிடும்.கீழ் வரும் பாடல் இதனைத்தெரிவிக்கிறது.

" மாயை மாமாயை மாயா வரும் இருவினையின் வாய்மை
ஆய ஆர் உயிரின் மேவும் மருளினில் இருளாய் நிற்க்கும்
மாயை மாமயை மாயா வரும் இருவினையின் வாய்மை
ஆய ஆர் உயிரின் மேவும் அருளினில் ஒளியாய் நிற்க்கும்"
( சிவப்பிரகாசம் )

அசுத்தமாயையும் சுத்தமாயையும் ஒழியாமல் வரும் புண் ணிய பாவங்களும் ஆகிய இவற்றின்உண்மையைஅறிந்து அவற்றிலிருந்து நீங்கி நிற்க்கும் பக்குவம் உடைய உயிர் களிடத்தில் பொருந்திய முக்தி நிலையில் அந்த ஞானம் வெளிப்பட்டு ஒளிமயமாய் நிற்க்கும். பெத்த நிலையில் அதாவது கட்டு நிலையில் உயிர் ஆணவமலப் பற்றுக் கொண்டு நிற்பதால் " மருளினில் இருளாய் நிற்க்கும் " எனப்பட்டது.முக்தி நிலையில் உயிரானது தன் இயல் பையும் இறை இயல்பையும் மல மாயா கன்மங்களின் இயல்புகளையும் அறிந்து அவற்றினின்று நீங்கி இறை அருளையே பற்றி நிற்க்கும்.அந்நிலையில் ஆன்மா சிவ ஞானம் மேலிட்டுப் பிரகாசித்து நிற்க்கும்.எனவே ஒளி யாய் நிற்க்கும் என்றும் சொல்லப்பட்டது.எனவே உயிர் களை முத்தி நிலைக்கு அழைத்துச் செல்வது திருவருள் ஆகும்.இப்படி அடைவிக்கும் நிலையை சத்திநி பாதம் என்று தத்துவத்தால் பேசப்படுகிறது.சத்தி-என்றால்அருள் நி-என்றால் கூடுதல்,பாதம்-என்றால் பதிவுஎன்பதுபொருள் ஆக சத்திநி பாதம் என்றால் அருள் பதிவு கூடுதல் என் பது பொருள்ப்டும்.( REGISTRATION OF GRACE )இச்சத்திநி பாதம் கூடத் தகுதி பெற்ற ஆன்மாக்கள் ( உயிர்கள் ) மீண்டும் மண்ணில் பிறப்பேடுக்கும் நிலையைத் தவிர்க் கின்றன என்பது வெளிப்பாடு.உயிர்கள் துன்பம் உடை யவை என்று இறைவன் அத்துன்பங்களில் இருந்து உயிர் களை விடுவிக்கும் பொருட்டு செயல்படுத்தப் படுவதே

இறைவனது பெருங்கருணை.உயிர்கள்துன்பப்படுவதில் கடவுளுக்கு சிறிதும் விருப்பமில்லை அதனால்உயிர் கள் உள்ள போதே இறைவனும் உள்ளான்." என்று உனை நீ அன்று உளம் யாம் "என்று தாயுமானவச் சுவாமிகள் கூறுகிறார்.இறைவன் பரம்.எப்போதும் உள் ளவன் என்பது பொருள்.அதனால்தான் அவனுக்கு பரமசிவம். என்று பேர் வந்தது. அவன் நித்தியம்.உயிர் கள் அநித்தியம்.நிரந்தரமற்ற உயிர்களுக்கு நிரந்தரமான வன்தானே பதவி தரமுடியும்.அதுதான் முத்திப்பேறு என்னும்பதவி.இறைவன் ஒருவனே சர்வ வல்லமை உடையவன்.அவனது திறமைகள் என்ன என்பதைப் பார்ப்போம்.

1.உயிர்களுக்குத் தேவையான எல்லாவற்றையும் தரும் திறன் ( ALMIGHTY )

2.உயிர்களது முன்னேற்றத்துக்கு வேண்டியது செய்வது .(WHICH IS POSSIBLE FOR WANT OF BETTERMENT )

3.மொத்தத்தில் சர்வ வல்லமை. ( HAVING ALL POSSIBLE POWER )

இத்தகு இறைவனது திருவருளைச் சேரவிடாமல் தடுப் பது இருவினையும் அதன் தொடர்பான ஆணவமுமே ஆகும்.இதை ஆவாரக சக்தி என்று அழைப்பார்கள். ஆவாரகம் என்றால் நிலையானது என்பது பொருள். ( UN ALTERD FORCE ) இதனை ஆணவ மலத்தின் சிறப்பியல்பு ஆகும். ஆணவ மலம்தான் உயிர்களை மேலே செல்லவிடாமல் கீழ்நோக்கி இழுக்கும்இதனை அதோ நியாமிகை என்றும் ஆணவ மலத்தின் பொது இயல்பு என்றும் வழங்கப்படுகிறது.( DRIVEN TO THE PERVERSITY )

இப்படி உயிர்களைப் பெரும்பாடு படுத்துவது ஆணவ மலத்தின் கூற்றுதான் என்பது தெரியாது.இத்தகு ஆண வமலத்தின் பரிணாமத்தை ஏற்காதவர்கள் கடவுள் தன்மையையும் ஒத்துக்கொள்ள மாட்டாதவர்களாகத் தான் தம் வாழ்வை இம்மண்ணுலகத்தில் தொடர்வார் கள் என்றே பேசப்படுகிறது.அவர்களுக்கு கடவுளின்

உண்மை நிலையையும் நிலைநாட்ட முடியாது.
BUT FOR THE EXISTENCE OF ANAVAMALA THERE WOULD BE NO NEED FOR THE EXISTENCE OF THE ALMIGHTY.இறைவன் கற்பனைக்கும் அப்பாற்பட்ட ஒரு சொரூபநிலை உடையவன்.உலகவழக்கிலே இறை வனை சாந்த சொரூபன் என்றும் அழைப்பதுண்டு.

இறைவனுக்கு மூன்று நிலைகள் உண்டு.அருவம்,உரு வம் அருஉருவம் என்று.இந்தச்சொரூபம் என்பது அரு வத்துக்கும் அப்பாற் பட்டது.( EMBODIMENT OF THE CHARACTER ) அதாவது பண்புகளை எல்லாம் மொத் தப்பண்பாகப் படைத்த அடிப்படை பண்புரு என்று கூறுவது பொருந்தும்.இறைவனது அருளானது எங்கும் பரவும் வியாபகத்தன்மையுடையது.

இறைவன் வழங்கிய உடலைக்கொண்டே நாம் வினை செய்கிறோம் என்பதை உயிர்கள் உணர்ந்து அந்த உணர்வு நீங்காதிருக்குமானால் நாளடைவில் நாம் திருத் தம் உறுவோம் என்பது உறுதி.( IN THE COURSE OF TIME ) அதே சமயம் ஆணவமலத்தின் ஆற்றல் சிவச்சார் புடைய ஆன்மாவிடத்தில் பலிக்காது என்று பொருள் கொள்ளவேண்டும்.( IT WILL NOT COME TO FRUITION ) உலகில் உள்ள எந்தப்பொருளைக் காணவேண்டு மானா லும் நமது உடலோடு ஒட்டிய புறக்கண் தேவைப்படு கிறது.( EXTERNAL SIGHT ) அதேபோல் சிவபெருமானை அறிவதற்க்குத் திருவருள் ஆகிய நமது உயிரில் உள்ள அகக்கண்( IN SIGHT ) இன்றியமையாதது என்று தத்து வங்களால் பேசப்படுகிறது.

ஆன்மா எவ்வாறு அருளையடையும்..வெயிலில் வருந்தும் ஒருவன் நிழலைக்கண்டால் எவ்வளவு ஆனந்தம் அடை வான்.தாகம் எடுப்பவனுக்கு நீரும்,பசித்தவனுக்கு உண வும் கிடைத்தால் எவ்வளவு இன்புறுவன்.அதுபோல்தான் இறைவனது திருவருள் உயிர்களுக்கு கிட்டுமானால் இன் புறும்.துன்பத்தில் வாடுமுயிர்க்கு திருவருளை நாடு என்று

எவரும் சொல்லத்தேவையில்லை.எனவே துன்பங்களில் இருந்து விடுபட உயிர்க்குத் திருவருளைத் தவிற வேறு துணை இல்லை.ஆன்மாவானது எப்போது அருளை அடையும் என்ற கேள்விக்கு விடை,நோயாளிக்கு எது சாப்பிட்டாலும் வாய்க்கு கசப்பாக இருக்கும்.நோய் நீங் குமானால் கசப்புத்தன்மை மாறிவிடும்.அதுபோல் உயிர்களை ஆணவமலமானது பிடித்திருக்கும்போது இறையருள் தெரியாது.ஆணவமலம் பூரணமாக நீங்கும் போது திருவருள் உயிர்க்குத் தெரிய ஆரம்பிக்கிறது. ஆன்மாவானது தானாகவே அருளை அறிய முடியுமா என்று கேட்டால் உயிர்களைப் பீடித்த ஆணவமலம் நீங்கியதும் ஆன்மா தூய்மை அடைகிறது என்பது உண்மை.ஆயினும் அந்த ஆன்மாவின் தகுதி நோக்கி இறைவன் உணர்த்தினால் அன்றி ஆன்மா தானாகவே இறைவனை அறியமுடியாது.ஆணவமலம் நீங்கப்பெற்ற தும் திருவருளைத் தான் அறிந்துவிட்டதாக ஆன்மா கருதுவது வீண்பாவம் என்கிறார் உமாபதி சிவம்.வீண் பாவம் என்பது பிற உயிர்களைவிட தான்மேலானவன் என்று எண்ணுவது.அது பசுஞானம் எனப்படும். பதி ஞானம் ஒன்றினாலேயே ஆன்மா அருளை அறியமுடி யும்.பசுஞானம் என்பது தான் தத்துவங்களின் வேறான வன் என்று கருதுவது.பதிஞானம் என்பது இறைவ னால் உணர்த்தப்படும் திருவருள் உணர்வு ஆகும்.

ஆணவமலம் உயிர்க்கு உலகைக்காட்டி சிவத்தை மறைக்கும்.அருள் உயிர்க்கு சிவத்தைக் காட்டி உலகை மறைக்கும்.பொய் என்பது நிலையற்ற உல கப்பொருள்.(ஆணவம்)மெய் என்பது நிலைபேறுடைய இறைவனைக்குறிக்கும்.ஒருவர்க்கு சுற்றத்தார்கள் இருப் பார்களேயானால் அவர்களுக்கு இடையூறு வரும்போது உதவுவார்கள்.அதுபோல் இறைவனது திருவருள் பெற்ற வர்கள் எக்காலத்தும் கவலைப் படாமல் இருப்பார்கள். இதனை அப்பர் பெருமான் கூறுகிறார் பாருங்கள்

" உற்றாராய் உறவாகி உயிர்க்கெல்லாம்
பெற்றாராய பிரானார் " ( திருமுறை )

ஆகவே உயிர்கள் அருளைச்சார்ந்து நின்றாலன்றி கவலை யற்று இருக்கமுடியாது.எனவே உயிர்கள் அருளைச்சார்வது அவசியம் என்று கருதப்படுகிறது. இரவு நேரத்தில் ரயில் நிலையத்தில் இருப்பவர்கள் தூங்கக்கூடாது.தூங்கினால் தன் பொருளை இழந்து விடுவர்.விழித்திருப்பவர்களிடம் பொருள் திருடமுடியாது.அதுபோல் திருவருள் உணர்வை மறவாது இருப்பவர்களுக்கு எந்த துன்பமும் வராது.அவர்களுக்குள்ள இன்பத்தை யாரும் பறிக்க முடியாது. இதனை

" துஞ்சும் போதும் துயிலின்றி ஏத்துவர்
வஞ்சின்றி வலங்கொள் மறைக்காடரோ "(திருமுறை)

என்று அப்பர் பெருமான் அடையாளம் காட்டுகிறார். திருவருளைச் சார்வது என்பது எப்போதும் இறைவன் பால் நமது நினைவை நிறுத்தி அவனை மறவாமல் இருப்பதே.சூரியன் உச்சியில் வரும்போது படிகத்தூணினுடைய ஒளி சூரிய ஒளியில் மறைந்துவிடும்.அப்போது அத்தூண் முழுவதும் சூரியஒளியாகி நிற்க்கும்.அதன் நிழல் வெளிப்படாது.அவ்வாறே திருவருள் ஆன்மாவை தன்னுள் அடக்கும்போது ஆன்மாவைச் சிவமயமாக்கி நிற்க்கும்.திருவருள் ஆன்மாவில் பதியும்போது ஆன்மா சிவமயமாகிறது.இவ்வுண்மையைச் சொல்கிறார் மணிவாசகர் " சித்தம் சிவமாக்கிச் செய்தனவே தவம் ஆக்கும்"இந்த நிலையில் ஆணவமலத்தின் ஆற்றல் ஆன்மாவினிடம் செல்லுபடி ஆவதில்லை.இவ்வாறே திருவருள் ஆன்மாவை வசப்படுத்துகிறது.ஒரு பொருளைப் பார்ப்பவன் தன்னிடமுள்ள கைவிளக்கை பயன்படுத்தி பொருளைப் பார்ப்பான்.அதுபோல் இறைவனைப் பார்ப்பவன் அருளை முன்வைத்து அதன் பின்னால் நிற்பன். அத்தகு திருவருளில் திளைப்பவர்கள் தனக்கென்று விருப்பு வெறுப்பின்றி திருவருள் காட்டிய வழியில் நிற்பார்கள்.இக்கூற்றினை மணிவாசகர் உறுதிப்படுத்துகின்றார்.

"°வேண்டத் தக்கது அறிவோய் நீ வேண்ட முழுதும்
த்ருவாய் நீ

வேண்டும் அயன் மாற்க் கரியாய் நீ வேண்டி
என்னைப்பணி கொண்டாய்
வேண்டி நீயாதருள் செய்தால் யானும் அதுவே
வேண்டின் அல்லால்
வேண்டும் பரிசொன்று உண்டெனில் அதுவும்
உன்றன் விருப்பன்றே "(திருவாசகம்)

இது உயிர்கள் திருவருளை முழுமையாகச் சார்ந்து நிற்க்கும் இயல்பை வெளிப்படுத்துகின்றது.இப்பிறவியை வழங்கிய இறைவன் நமக்கு நன்மையே செய்வன் என்று கொள்ளும் நம்பிக்கையே திருவருளைப் பெருவதற்க்கு ஏதுவாகிறது.இவ்விதம் நடப்பதெல்லாம் நன்மைக்கே என்று கொள்ளும் முறைதான் ஆன்மா திருவருளைப் பெற்றதற்க்கு அடையாளம் ஆகும்.நமது அறியமையையும் இயலாமையையும் நாம் அறியும் பொருட்டு நமது தகுதி அறிந்து அவனே தன்னைப் பார்க்கும்படிச் செய்வான்.

" நான் ஆர் என் உள்ளம் ஆர் ஞானங்கள் ஆர்
என்னை ஆர் அறிவார் வானோர் பிரான் என்னை
ஆண்டிலனேல் " ( திருவாசகம் )

என்று மணிவாசகர் வாக்கு மனிதனைச் சிந்திக்க வைக்கிறது.ஒருபோதும் இறைவனை புலன்களால் காணமுடியாது. என்று அப்பர் பெருமான் அரற்றுகின்றார்." புலன்கள் ஐந்தால் அலைப்புண்டு போது நோக்கிப் புறம் புறமே திரியாதே போது நெஞ்சே "ஒரு பொருளை ஒருவர் நமக்குத் தந்தால் அதற்க்கு நாம் நன்றி காட்டவேண்டும்.தன் திறமையால் அவரிடமிருந்து பொருளைப் பெற்றேன் என்றால் சரியாகுமா? நமக்குத் தேவையானவற்றை எல்லாம் இறைவன் காலமறிந்து,இடமறிந்து,நம் நிலையறிந்து செய்து கொண்டிருக்கிறான்.நமது திறமையால் எதுவும் நடைபெறவில்லை என்பதில் தெளிவு ஏற்படவேண்டும்.
"என்னை ஒப்பார் உன்னை எங்ஙனம் காண்பர் இகலி உன்னை நின்னை ஒப்பார் நின்னைக் காணும்படித் தன்று நின் பெருமை " என்று அப்பர் பெருமான்

தெளிவுபடுத்துகிறார்.அருளை வழங்கும்போது இறைவன் தானே வந்துஉயிர்களை ஆட்கொள்ளு வன் என்பது உண்மை.
" தானே வந்து நாயேனைத் தாய்போல் தலையளித் திட்டு "என்று மணிவாசகர் கூறுவதின் மூலமும் இவ் உண்மை தெளிவு படுத்தப்படுகிறது.பிறவிக்கு காரணம் வினைகள்.வினைப்பயனே தனு கரணம் புவன போகங் களை விளைத்தது.இவைகள் எல்லாம் உயிர்கள் அனுப விக்கச் செய்வது இறைவனது பெருங்கருணையே என் னும் சிந்தனையால் பிறப்பதுவே தெளிந்த ஞானம் அல் லது அறிவு என்று கூறலாம்.தெளிந்த நீரில் முகம் பார்க்கலாம்.கலங்கிய நீரில் எதுவும் தெரியாது.ஆண வம் என்பதுவே கலங்கியநீர்.தெளிந்தநீர் ஞானம்.அது தான் திருவருள்.திருவருள் ஒன்றினால் மட்டும் இறை வனைக்கூடி பேரின்பம் நுகர முடியும்.அருளைஎல்லாம் உடையவனாகவும் அருளை ஆள்பவனாகவும் இருப்ப தால் இறைவனை " அருளாளன் " என்கிறார்கள்.
அருள் என்பது அம்மையைக் குறிக்கும்.அம்மை என் பது பெண்.அவ்வருளை ஆட்சிசெய்யும் அரசன் இறை வன் ஆண்.ஆக அருளும் பெண்.ஆன்மாக்களும்பெண் இவ்விரண்டும் இறைவனால் ஆளப்படுவதால் அவனை அருள்நிதி என்று அழைக்கிறோம்." அருள் நிதி தரும் ஆனந்த மலையேஅலைகடலே பள்ளி எழுந்தருளாய்" என்று மணிவாசகப் பெருமான் கூறுகிறார்.

ஒருபெண்ணின் உதவியால் மற்றோரு பெண்ணை ஒரு ஆடவன் அடையலாம்.இது உலகியல்.திருவருள் ஒன்றி னாலேயே உயிர்கள் இறைவனைச் சேரமுடியும். இது தான் இறையியல்.இறைவனிடம் திருவருள் நிரம்பியிருப் பதற்க்குரிய காரணம் என்ன.இறைவன் நின்மலன்.மல மாசு அற்றவன்.இன்ப துன்ப நுகர்வு அற்றவன்.விருப்பு வெறுப்பு இல்லாதவன்.அவன் பரம்.அதாவது நிரந்தரம் என்வே அவனுக்கு பெயர் பரமசிவம் என்று வந்தது. அவன் ஏகன் அதே சமயம் அநேகன்.பிறப்பும் இறப்பும்

இல்லாதவன்.மூவாய் பிறவாய் இறவாய் போற்றி முன்னமே தோன்றி முளைத்தாய் போற்றி என்று போற்றித்திருத் தாண்டகம் புகல்வதில் இருந்து நாம் புரிந்து கொள்ள முடியும்.எனவே இறைவன் திருவருளையும் பேரின்பத்தையும் உடையவனே தவிர அனுபவிப்பவன் அல்ல.பள்ளிக்கூடத்தில் இருந்து வரும் பிள்ளைக்கு தாய் தின்பண்டங்களை வாங்கி தன்மடியில் கட்டி வைத்திருப்பாள்.வரும் குழந்தைக்கு தாய் கொடுத்து அது தின்பதைப் பார்த்து ஆனந்தப்படுவாள் அதுபோலத்தான் இறைவனும் பேரின்பத்தை உயிர்களுக்கு கொடுத்து அவைகள் அன்பவிப்பதைப் பார்த்து ஆனந்தப்படுவான்.எனவே உடைமை வேறு அனுபவம் வேறு.செல்வந்தர்கள் ஏழைகளுக்கு கொடுத்துதவி ஆனந்தப் படுவதுபோல் என்று தெரிந்து கொள்ள வேண்டும்.ஒரு பொருளை ஒருவர்க்கு தரும்போது பரிவுடன் அன்புடன் தரவேண்டும்.அப்படியல்லாது கொடுத்தால் அது பயன் அற்றதாகும்." பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப்பரிந்து " என்கிறது திருமுறை அம்மையே அப்பா ஒப்பிலா மணியே என்றும் திருமுறை சொல்கிறது. எந்தாயும் எமக்கருள் தந்தையும் என்கிறார் அருணகிரியார்.இறைவனை அம்மாவுக்கு ஒப்புமைப் படுத்திக் கூறுவதுதான் அருளியல்.

ஆக உலகியல் - இறையியல் - அருளியல் இம்மூன்று தன்மைகளையும் உடையவன் இறைவன்.அதாவது இவைகளை ஆளும் திறமை உடையவன் என்பது பொருள்.சிலர் சிபாரிசுக்கு தங்கள் காரியம் ஆவதற்க்கு யார் மூலமோ அந்த அந்த நபருடைய வீட்டுக்காரி அம்மாவிடம் போய் முறையிடுவார்கள்.அந்த அம்மா தன் கணவரிடம் சொல்ல வந்து முறையிட்டவர் களுடைய காரியம் ஆகிவிடும்.அதுபோல் திருவருள் துணைக்கொண்டுதான் இறைவனுடன் உயிர்கள் சேர முடியுமே தவிர தன்னிச்சை ஒன்றினாலேயே ஏதும் நடக்காது. என்பதைப் புரிந்து கொள்ளுதல் அவசியம்

உயிர்கள் இறைவனைக் கூடும்போது பேரின்பம் நுகர் கிறது.இவ்வாறு ஆனந்தம் ஆன்மாக்கள் அடையும் போது அதனால் ஆனந்தம் அவ்விறைவனுக்குஉண்டா என்று கேட்டால் இல்லை என்பதுவே விடை.

" தந்தது உன்தன்னைக் கொண்டது என்தன்னைச் சங்கரா
யார்கொலோ சதுரர்
அந்தம் ஒன்றில்லா ஆனந்தம் பெற்றேன் யாது நீ
பெற்றது ஒன்று என்பால் "

என்று மணிவாசகர் வாக்கினால் உண்மையை அறிய லாம். இறைவனுக்கு நம்மால் ஏதும் பலன் இல்லை. இறைவனால் பலன்களை அனுபவிப்பது நாம்தான் என் னும் உண்மையை உணர வேண்டும்.இங்கு அறிதல் என் பதும் உணர்தல் என்பதும் வேறு வேறு. அறிதல் என்பது படித்து அல்லது மற்றவர்கள் சொல்லக்கேட்டு தெரிந்து கொள்வது.உணர்தல் - என்பது தான் அனுபவம். தானே அனுபவித்து அறிவதுதான் உணர்தல் என்பது.எனவே இறையின்பத்தை ஒவ்வொருவரும் தானே அனுபவித்தல் அன்றி மற்றவர்கள் சொல்லி மகிழத்தக்கது அல்ல என் பதுவே சாத்திர நூல்கள் அறிவுறுத்தும் முறையாகும்.

பிறவாப்பெருநிலை என்று தத்துவத்தால் பேசப்படுகிறது இதுஉயிர்க்கு வாய்க்குமானால் மீண்டும் பிறவாது ஆண் டவனுடன் இருக்கும் பேறு பெறலாம். பேயினால் பீடிக் கப் பட்டவன் அப்பேயின் அறிவிச்சை செயல்களில் அடங்கிவிடுவன்.அப்போது அவனது அறிவு இச்சை செயல்கள் அவனிடத்து தொழிற்படமாட்டா.அதுபோல் சிவபெருமானால் ஆட்கொள்ளப்பட்டிருப்பவ.ர், சிவானு பவத்தில் தன்னை மறந்து ஈடுபட்டிருப்பான்.அப்போது அவனுக்கெனத் தனிச்செயல் ஏதும் இருக்காது.இவ்வுண் மையை மணிவாசகர் சொல்கிறார்.

"கயல்மாண்ட கன்னிதன் பங்கன் எனைக்கலந்து ஆண்டலும்
அயல்மாண்டு அருவினைச் சுற்றமும் மாண்டு அவனியின்மேல்
மயல்மாண்டு மற்றுள்ள வாசகமும் மாண்டு என்னுடைய
செயல்மாண்ட வாயாடித் தெள்ளேனம் கொட்டோமோ "

இவ்வாறு தன்னை இழந்து தன் அறிவு இச்சை செயல் கள் இழந்து திருவருளின் வியாபகத்தில்அடங்கிநிற்கும் நிலையே பிறவாப் பெரு நிலையாகும்.இனிதிருவருளை யார் மூலம் அடைவது என்று கேட்டால் அது குரு மூலமாகத்தான் முடியும் என்பது விடை.குரு என்ற சொல் இருளைப்போக்கி ஒளியைத் தருகின்றவர் என் பது பொருள்.புற இருளை வெளிச்சம் நீக்குவதுபோல் உயிர்க்குள்ள அக இருளை குரு நீக்குவார்.பக்குவப் பட்ட ஆன்மாக்களுக்கு இறைவனே குருவாக வருவார் என்பது சாத்திரக்கூற்று.குருவின் மூலமாகத்தான்உயிர் கழுக்கு கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை கைகூடுதல் என்னும் நான்கு படிமுறைகளும் வாய்க் கும்.தந்தையை தாய் அடையாளம் காட்டுவது போல் திருவருளை அடையாளம் காட்டுபவர் குருநாதர் ஆகும்.

" குருவிலான் பெற்றவித்தை குமரனை குமரன் கூடி
மருவிய இன்பம் ஒக்கும் மண்ணில் நம்போல் வந்த
குருவினால் பெற்ற ஞானம் குமரனை குமரன் கூடி
மருவிய இன்பம் ஒக்கும் என்பர் நன்மதி யுளாரே. "

( பதி பசு பாச விளக்கம் ).

ஆணும் ஆணும் கலப்பது இன்பமல்ல ஆணும் பெண்ணும் சேர்வதே இன்பம் என்று மேலெ உள்ள பாடல் விவரிக்கின்றது.ஆணவமலம் பரிபூரணமாய் நீங் கப்பெற்ற ஆன்மாக்களுக்கு இறைவனே குருவாய் வரு வான் என்பது ததுவத்தால் உணர்த்தப்படுகிறது.

" அகளமய மாய்நின்ற அம்பலத்து எம் கூத்தன்
சகளமயம் போல் உலகில் தங்கி - நிகளமாம்
ஆணவ மூலமலம் அகல ஆண்டனன் காண்
மாணவக என் உடனாய் வந்து "

( திருக்களிற்றுப் படியார் )

குறைவிலா நிறைவுடைய பேரறிவுப் பொருளாக நிற் கும் எங்கள் அம்பலக்கூத்தன் தன்னுடைய திருவருள் மூலம் ஓர் உருவம் உடையவன் போல் இந்த உலகத் தில் எழுந்தருளியுள்ளான்.அவன் என்னுடன் உடனாய் நின்று என்னை அநாதியே மறைத்துக்கொண்டுள்ள மூல

மலமாகிய ஆணவத்தை அகலுமாறு செய்கிறான்.அவன் ஆண்டவன் நான்அவன் அடிமை என்பது இதன்பொருள் இவ்வாறு சிவபரம் பொருளே குருவாக உபதேசிக்கும் வண்ணம் திருமேனிகொண்டு எழுந்தருளும் போது அவர் உபதேசிக்கும் உபதேசத்தின் வாயிலாகயான்பெற்ற பேரின்பத்தை எப்படிக்காட்டுவதுஅல்லதுஇப்படிப்பட்டது என்று சொல்ல முடியாதவாறு தவிக்கிறேன்.

" அன்று முதல் ஆரேனும் ஆளாய் உடனாகிச்
சென்றவர்க்கும் இன்னது எனச் சென்றது இலை -
இன்றிதனை
எவ்வாறு இருந்தது என்று எவ்வண்ணம் சொல்லுகேன்
அவ்வாறு இருந்தது அது " ( திருக்களிற்றுப் படியார் )

அத்தன்மையை உணர்த்தியவாறு உணரமுடியுமே யன்றி அத்தன்மை இவ்வாறு இருந்தது என்று எவராலும் கூற முடியாத அற்புதம் ஆகும்.இவ்வாறு வரும் குருநாதன் வேறு இறைவன் வேறு என்னும் பாகுபாட்டிற்க்கு இடம் கிடையாது.ஆகவே சீடர் என்னும்நிலை யடையும் ஆன் மாக்கள் எப்போதும் சிவச்சிந்தனை குரு சிந்தனை கொண்டிருத்தலே ஆகும்.குருவின் நிந்தனைக்கு ஆட்பட கூடாது.குருநிந்தனை கொடிது என்று ஆன்றோர்கள் கூறியிருக்கிறார்கள்.தெளிவு பெரும் ஆன்மா திருவருளை அடைய ஏதுவாக ஏணியாக இருப்பவரே குருநாதர்என்ற உண்மையை விளங்கிக்கொள்ளுதல் அவசியம்.

" தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருமேனி தீண்டல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவின் திருவுரு சிந்தித்தல்தானே ".
( திருமந்திரம் )

இந்த திருமந்திரப் பாடல் கூறுவதைவிட குருவின் சிறப்பு அம்சம் வேறு வகையில் கூறிட முடியுமோ.ஏகலைவன் குருவை மனதில் சிந்தித்த வண்ணமே எல்லாக் கலை களையும் கற்றுத் தேர்ந்தார்.ஆருணி என்னும் சீடன் குரு வின் அன்புக்கு பாத்திரமாகி நலம் பெற்றான்.குருவாய் வந்த தட்சிணாமூர்த்தியின் அருளால் தனக்கு வந்த துயர் களை விரட்டினார் சீடனுக்கு வரும் துன்பமெல்லாம்

குருவின் தண்ணருளால் தானே நீங்கும்.ஆன்மாக்களும் இறைவன் குருவாக வருவதையே விரும்புகின்றன.அதன் மூலம் அருணகிரிநாதர் குருவாய் வருவாய் அருள்வாய் குகனே என்று முருகப்பெருமானிடம் வேண்டுகிறார்.அவ் வாறு இறைவனே குருவாக வரும்போது அக்குருவை பாச நீக்கம் பெறப்பட்ட சீடனையன்றி வேறு ஒருவரும் அறிய முடியாது.எப்படி மணிவாசகர் திருப்பெருந்துறையில் குரு வை கண்டதும் அறிந்து கொண்டாரோ அதுவே உண் மையான குருநாதர் சீடன் இயல்பு ஆகும்.எக்காலத்தும் திருவருளை குருவருளாலேதான் பார்க்க முடியும் என்பது சான்றோர் வகுத்துச்சென்றுள்ள பாதையாகும்.

" அருளா வகையால் அருள்புரிய வந்த
பொருள் ஆர் அறிவார் புவி " ( திருவருட் பயன் )

இறைவன் ஐந்தொழில் ஆற்றும் பண்புடையவர்.படைத் தல் காத்தல் அழித்தல் அருளல் மறைத்தல் என்பது. இதில் அருளல் என்பதும் அவனது தொழில்களில் ஒன்று ஆகும்.ஆக எவ்வாறாயினும் பக்குவப்பட்ட ஆன்மாக்கள் பயன்பெற இறைவன் குருவாக வந்தே ஆகவேண்டும்.இப் பாடலில் " பொருளா அறிய " என்றும் பாடம் உண்டு இதன் பொருள் மானிடவடிவு என்னும் சட்டையால் தன்னை மறைத்துக்கொண்டு வந்த உண்மைப்பொருளே இந்த குருநாதர் வடிவம். என்பதை உலகம் அறிய முடி யாது என்பது இப்பாடலின் கருத்து ஆகும்.

" போற்றும் குருவேடம் ஆகிக் குணம் குறி ஒன்று இலாப்
பெரு வேடமாய் நிறைந்த பெம்மான்......"

எல்லோரும் போற்றும்படி இறைவன் குருநாதர் வேடம் தாங்கி வருவதே ஆகும் என்று உமாபதிசிவம் அவர்கள் நெஞ்சுவிடுதூது என்னும் இந்நூலில் கூறி இருக்கிறார்.பல பல வேடங்கள் பூணும் பெருமான் அவ்வேடத்தின் குறிக் கோள்யாது குணம் என்ன என்று பார்க்க முடியாத அள விலே பெரியவேடம் கொண்டு வருவதே குருநாதர் வடிவு ஆகும் என்று இப்பாடல் அறிவுறுத்துகிறது.ஆக இறை வனது திருவருளைப் பெறுவதற்க்கு குருவருள் அவசியம் என்பதைக் காண்கிறீர்கள்.குருவருள் பெறவும் ஆன்மாக் கள் படிமுறையில் வரவேண்டும்.ஒரு ஆன்மா இறை

வனை அறிந்த உடனே எனக்கு குருவாய் வருவாய் என்று அவ்விறைவனைக்கேட்டாலும் நடக்காது.குரு வருளைப்பெறவும் உயிர்கள் மூன்று விதமான் ஞானங் களைப்பெறவேண்டும்.அதுவே பதிஞானம்,பசுஞானம் பாசஞானம் என்று ஏற்கனவே விளக்கப்பட்டுள்ள து. டுப்படி ஆன்மாக்களது ஞானம் மூன்று விதத்தில் அமைந்தாலும் திருவருள் பேரு என்பது குருநாதர் மூலமே என்பது விளங்கினும் உயிர் பெற்றிடும் மல மாயை அகல்வது முக்கியம்.மலநீக்கம் பெருவதற்க்கு ஆன்மாக்கள் கைக்கொள்ள வேண்டிய படிமுறைகள் நான்கு என்று பேசப்படுகிறது.1.சரியை 2.கிரியை.3 யோகம் 4.ஞானம் என்பதாகும். பரிட்சை எழுதாமல் பாஸ்பண்ண முடியுமா பட்டம் வாங்க முடியுமா ? அதுபோல் பிறவி பெற்ற ஆன்மாக்கள் பயிற்ச்சி பெறாமல் பகவானது திரு வருளை எப்படிப் பெருவது.அப்படி இருக்குமானால் அநா தியே உள்ள உயிர்களும் அப்படியே இறைவனது திரு வடிப்பேறு பெற்று விடலாமே. உயிரின் பெத்த நிலை நீங்கி நிலைபேறு கொள்ளத்தான் பிறவி வாய்க்கப்பெற் றது.பெற்றபிறவி இறைவன்பால் நன்றி காட்டுவதற்காகத் தான் என்பதை யாரும் அறிவதில்லை.

" எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்நன்றி கொன்ற மகர்க்கு " ( திருக்குறள் )

இத்திருக்குறள் கூறும் கருத்து பாருங்கள்.இதில் செய் நன்றி என்பது இறைவன் நம்மை மண்ணில் பிறக்க வைத்தது தனு கரண புவன போகங்களை நுகர வைத் தது ஆகும்.இதனை மறந்து ஆன்மாக்கள் வாழமுடியாது நன்றி கொன்ற பாவம் உயிர்களை வந்து சேரும்.

எனவே ஆன்மாக்களுக்குள்ள நான்கு படிமுறைகளும் ஒன்றன்பின் ஒன்றாக வந்து அமைய வேண்டும்.இதில் முதல் இரண்டும் இறைவனுக்கும் ஆலயத்துக்கும் செய் யும் தொண்டுகள்.மூன்றாவதாகிய யோகம் என்பது அதி ர்ஸ்ட்டம் என்று பொருள் ஆகாது.யோகம் என்பது இறை வனது திருவருளைப் பெறுவதுதான்.அப்போதுதான் உயிர்

அறிவு விளக்கம் பெறுகிறது.அப்படி அறிவு தூய்மை யானதும் ஞானம் பெறலாம்.ஞானம் பெரும் தகுதி உயிர் பெறும்போது இறைவன் குருவாக வருவான். இந்த ஞானம் என்ன வடிவில் இருக்கும் என்று ஆராய்ச்சி செய்யாதே.ஞானம் உலகப்பொருள்களை போல் அல்ல.அதைப்பற்றி சற்றும் நினைக்கவேண் டாம்.ஞானம் நம்மை வந்து காணும்.அப்போது அத னைப்பிடித்துக்கொள்ள வேண்டும்..ஞானத்தை ஞானத்தாலேயே அறிய முடியும். என்பதுவே தத்து வங்கள் சாற்றும் உண்மை.இத்தகு படிமுறைகளும் நெறிமுறைகளும் ஆன்மாவுக்கு வாய்ப்பதற்க்கும் ஞானம் பெருவதற்க்கும் தேவை பக்தி.ஞானத்தைப் பெற்றபின்பு உண்டாகும் பேரானந்தத்தையே உயிர் கள் நினைக்கும் பொருளாக கொள்ள வேண்டும். ஞானம் என்பது பிரகாசம். அந்த ஒளிக்குள் புகுந்து ஒளியாகத் திகழ்வதுதான் இறைவன் திருவருள். பக்தி உயிர்களுக்கு வேண்டும்.அதுவே உயிர்கள் இறைவனுக்கு காட்டும் நன்றியாகும்.

பக்தியால் யானுனை பலகாலும் பற்றியே மாதிருப்பு கழ்பாடி என்கிறார் அருண்கிரிப்பெருமான் மண் ணில் பிறந்திட்ட உயிர்களுக்கு பக்தியினால்தான் முக்தி கிடைக்கும்.அதுவுமல்லாமல் கலியுகத்தில் உயிர்களுக்கு பக்தியினால் முக்தி என்று வேதம் சொல்கிறது.பக்தியினால் உயிர்க்கு ஏற்படும் பாவங் கள்,கரங்களால் இறைவனை வணங்குதல்,மலர் சொரிதல்,நீர் சொரிதல்,அவனை நினைந்து உருகி கண்ணீர் சிந்துதல்,அவன் நாமங்களைச் சொல்லு தல்,பதிகம் பாடுதல்,திருக்கோவில் அலகிடுதல்,உழ வாரப்பணி செய்தல் என அத்தனையும் உண்டு இறைவன் நினைப்பவர் மனத்தை கோவிலாகக் கொள்பவன்.தோன்றாத் துணையாய் இருந்தனன் தன் அடியோங்களுக்கே என்னும் அப்பரடிகள் வாக் கையும் சற்று சிந்திக்க வேண்டும்.

" மண்ணில் வந்த பிறவியே எனக்கு வாலிதாம் இன்பமாம் என்று
கண்ணில் ஆனந்த அருவிநீர் சொரியக் கைமலர் உச்சிமேல் குவித்துப்
பண்ணினால் நீடி அறிவரும் பதிகம் பாடினார் பரவினார் பணிந்தார்"(சுந்தரர் தேவாரம்)

இந்த மண்ணில் வந்து பிறந்ததன் பயன் இந்ததிருக் கூத்தை கண்டதால் நிறைவுற்றது என்று சுந்தரர் கூறியதாக் சேக்கிழார் பெருமான் கூறுகிறார்.பக்தி மனத்தூய்மையால் உயிர்களுக்கு வாக்கும்.

தமிழில் தாடலை என்று ஒரு சொல் உண்டு.இது சாத்திரத்தாலும் பேசப்படுகிறது.
தாள் + தலை = தாடலை.என்று ஆயிற்று. இரண்டு சொல்லும் ஒரே சொல்லால் பரிணமிக்கிறது.தாள் என்பது ஆன்மா.தலை என்பது இறைவன்.தாடலை என்றால் இறைவனும் ஆன்மாவும் ஒன்றுபட்டு நிலவுதல் என்பது பொருள்.இறைவனை வணங்கும் போது தலையும் தாளும் ஒன்று பட்டு திகழ வேண்டும் என்ற கருத்தும் ஏற்க்கப்பட வேண்டியதாக உள்ளது.திருவருள் கைகூடுவதற்க்கு உயிர்க்கு பக்தி யுடன் தேவைப்படுவது மந்திரமாகும்.மந்திரங்களில் பெரியது பஞ்சாட்சரம் ஆகும். அதுவே நமசிவாய என்பது.

" நமசிவாயவே ஞானமும் கல்வியும்
ந்மசிவாயவே நானறி விச்சையும்
நமசிவாயவே நாநவின் றேத்துமே
நமசிவாயவே நன்னெறி காட்டுமே "( திருமுறை )

இறைவனது திருவருளைப் பெருவதற்க்கு உயிர்கள் மந்திரம் சொல்லவேண்டும்.நிலத்திலே ஏதாவது விதைத்தால்தானே முளைக்கும். எதையும் விதைக் காமல் பலன் வேண்டும் அறுவடைசெய்யவேண்டும் என்றால் மடமைதானே.வீட்டுக்கு வருபவரை வாங்க என்று அழைத்தால் தானே வருவார்.அழைத் திடாமல் உபசரித்திடாமல் வருவார்களா? அது

மாதிரி உயிர்களை மேம்படுத்த வேண்டும் என்ற கொள்கையில் உள்ள இறைவனை நினைப்பதும் அழைப்பதும் ஆன்மாக்களது கடமைதானே.

இப்பிறவி பெறுவதற்க்கு முன்பு நாம் எங்கு எப்படி இருந்தோம்.அதாவது உயிர் ஆணவமலத்தைப் பற் றியபடி பெத்தநிலையில் அறிவாற்றலையும் செயல் ஆற்றலையும் இழந்து இருந்தது.இந்த நிலையைக் கண்டு இறைவன் இறக்கப்பட்டு அருவ நிலையில் ஓர் உடலை உயிர்க்குத் தந்தான்.அதற்க்கு நுண்ணு டல் என்று பேர்.நுண்ணுடல் என்பது மனம்,புத்தி அகங்காரம் என்னும் அந்தக்கரணங்களும் சுவை ஒளி,ஊறு,ஓசை,நாற்றம் என்னும் தன்மாத்திரைகள் ஐந்தும் ஆகிய எட்டு உருப்புகளைக் கொண்டது. என்பது காண்க.இதனையே ஔவையார்" புரியட்ட காயம் புலப்பட எனக்கு தெரி எட்டு நிலையும்தெரி சனப்படுத்தி "என்று விநாயகர் அகவலிலே விளக்கு கிறார்.ஆகவே இறைவனைப்போல் உயிரும் அநாதி ஆணவமும் அநாதி.அநாதியே உள்ள உயிர் அநாதி யான ஆணவத்தைப்பற்றி செய்த முதல் செயலே முதல் பாவம் என்றாயிற்று.இதனை மூல கன்மம் என்று சாத்திரங்கள் சொல்கிறது.நுண்ணுடலில் இருந்து செயலாற்றிய உயிர் விருப்பு காரணத்தால் கடவுளால் பரு உடலைப் பெருகிறது.அவ்வாறு உயிர் பருவுடலில் தங்கி விருப்பு காரணத்தால் செய்யும் தொழில் ஆகாமியம் எனப்பட்டது.இதுவே உயிரின் மறுபிறப்புக்கு ஏதுவாகிறது.ஒருபிறவியில் கிடைத்த ஆகாமியப்பலன் சேர்த்துவைக்கப்படுகிறது. ( SAVINGS ) இதுவே சஞ்சிதம் எனப்படும்.இச்சஞ்சித வினைக்குவியலில் இருந்து உயிர்கள் முன்னேறும்படி அனுபவிக்கத்தக்க வினைப்பயன்களாகிய இன்ப துன்பங் களை இறைவன் அடுத்தடுத்த பிறவிகளில் உயிர்களுக்கு வரும்படி செய்வதற்க்குப் பெயர்தான் பிராரப்தம் என்று தத்துவத்தால் பேசப்படுகிறது..நாளடைவில் இது மருவி

பிராப்தம் என்று வழக்கிலே வந்துவிட்டது.இதுவே ஊழ் எனப்படுகிறது.ஊழ்வினை உறுத்து வந்து ஊட்டும் என சிலப்பதிகாரமும் இதனை உறுதிப்படுத்துகின்றது.இந்த ஊழ்வினை இறைவனால் உயிர்களுக்கு விதிக்கப்படு வதால் விதி என்னும் பெயர் வழக்கிலே வந்தது. எல்லாம் என் தலைவிதி என்று மாந்தர்கள் கூறிப்புலம்புவதை நாட்டிலே பார்க்கலாம். தலை என்பது தலைவனாகிய இறைவனையும் விதி என்பது அவனால் விதிக்கப்படு வதையும் உணர்த்தும். இதுவே தலைவிதி என்று காண்க ஆக பிறவிக்கு காரணங்களாக அமைவது முப்பலன்கள் என்பதறிக.

1.ஆகாமியப்பலன் - வைப்புநிதி போல் - DEPOSIT
2.சஞ்சிதப் பலன் - சேமிப்பு போல் - SAVINGS
3.பிராப்தப் பலன் - எடுப்பது போல் - WITHDRAWALS

இம்மூன்று பலன்களும் சுத்தமாக கழிந்து ஆன்மாக்கள் திருவருள் பேறு அடைவதற்கு உதவி செய்வதுதான் மந் திரங்கள் ஆகும்.சிவபெருமான் நமசிவாய என்னும் ஐந்து எழுத்தை திருமேனியாக கொண்டவர்.

நமசிவாய - தூலம் - பருநிலை
சிவாயநம - சூக்குமம் - நுண்ணிய நிலை
சிவாயசிவ - அதி சூக்குமம் - மிகு நுண்ணிய நிலை

இல்லறத்தார்கள் நமசிவாய அல்லது சிவாயநம என்று சொன்னால் போதுமானது.இதனை சிவதீக்கை பெற்று 108 முறை சொன்னால் பலன் அதிகம்.

சிவாயநம என்பதின் பொருள். சி - சிவன் , வா - சக்தி அல்லது அருள், ய - உயிர் , ந - மறைப்பாற்றல், ம - மலம் என்பதைக்குறிக்கும்..திருநாமம் சொல்லுதல் சாதாரணக் கண்கொண்டு பொருள்களைப் பார்ப்பது போல்.~மந்திர உச்சாடனம் பூதக்கண்கொண்டு பொருள் களை பார்ப்பது போல்.( MAGNIFYING GLASS ) எனவே நாமங்களைச் சொல்வதைவிட மந்திர உச்சாடனம் பன் மடங்கு பலன் தரும்..மந்திரங்கள் சொல்உலகம் பொருள் உலகம் என்று சாத்திர நூல்கள் பறை சாற்றுகின்றது.

1.மந்திரம் 2.பதம் 3.வன்னம் 4.புவனம் 5.தத்துவம் 6.கலை என்பது.வன்னம் - என்பது எழுத்து,பதம் - என்பதுசொல் மந்திரம் - என்பது சொற்றோடர், ஓ-என்றால் எழுத்து ஓம் - என்றால் சொல், ஓம் நமசிவாய - என்றால் சொற் றோடர்.புவனம் என்பது 224.தத்துவம் என்பது 36 கலை 5 இதன் விளக்கம் தேவை இல்லை.மந்திரங்களைச் சொல் லும்போது தனக்கு மட்டும் கேட்கும்படிச்சொல்வது.அரு கில் இருப்பவர்களுக்கும் கேட்கும்படிச் சொல்வது,தன் மனதுக்குள் மட்டும் உச்சரித்துக்கொள்வது.இப்படி மூன்றுவகை.ஆக திருவருளை பெறுவதற்க்கு முதலில் வேண்டுவது மந்திரமும் அன்பும் ஆகும்.அன்பெனும் பிடி யுள் அகப்படும் மலையே என்று திருமுறைகளால் பேசப் படுகிறது.இரண்டாவதாக வேண்டியது உணர்வு.இறைவன் ரன்று நிலைகளில் உயிர்களுடன் உறைகிறான் என்று உணர்வது. அவசியம்.ஒன்றாயும் , வேறாயும் , உடனாயும் என மூன்று நிலைகளில் உயிருடன் இருகிறான் என்று அறிவது.டயர் டயருக்குள் டியூப்,டியூப்புக்குள்காற்றுபோல் உடல் உடலுக்குள் உயிர் உயிருக்குள் இறைவன்,இதை மணிவாசகர் நீராய் உருக்கி என் ஆருயிராய் நின்றானே என்று விளக்குகிறார்.உருகிய தங்கத்தில் கல் பதியும் உருகிய உள்ளத்தில் இறைவன் பதிவார்..இத்தகு உணர்வு பெருவதற்க்கு உதவுவது மந்திரம்.

இப்படி மந்திரங்களைச் சொல்லி உள்ளமுருகவேண்டும் நமசிவாய என்பது மட்டுமல்ல.எந்த மந்திரமானாலும்சரி ஓம் நமோ நாராயணா என்றாலும் மந்திரமே.

" வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால்
பெருந்துயர் இடும் பையில் பிறந்து
கூடினேன் கூடியிளையவர் தம்மோடு
அவர் தரும் கலவியே கருதி
ஓடினேன் ஓடி உய்வதோர் பொருளால்
உணர்வெனும் பெரும்பதம் தெரிந்து
நாடினேன் நாடி நான் கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம் " ( திவ்விய பிரபந்தம் 948 )

ஓம் நமோ நாராயணா என்பது எட்டெழுத்து மந்திரம்.

ஆழ்வார் பெருமகனார் அரற்றுவதைப் பாருங்கள்.கருப்பை யில் பிறந்திடும் உயிர்கள் உறுவது துன்பம் என்பதுவே. இத்துன்பமும் பிறவிப்பிணியும் தீரவேண்டுமானால் இறை யருள் பெற வேண்டும்.இறையருளுக்குத் தேவை மந்திரம். அதன் மூலம் குருவாய் வருவார் இறைவன் இதுதான் தத் துவம்..பள்ளிப்படிப்பு பணத்தையும் பகட்டையும் தரும்.பர மனை அறியும் படிப்பு பதவியை தரும்.அதாவது முக்தி எனும் பதவி.அறுபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு படி அரிசி ஐம்பது பைசா.இப்போது கிலோ அரிசி இருபது ரூபாய்.அப்போது தங்கம் சவரன் நூறு ரூபாய் இப்போது சவரன் எட்டாயிரம் ரூபாய்.இதுதான் காலப்போக்கில். வந்த வித்தியாசம்.என்பதை நாம் அனுபவத்தால் கண்டு கொள்ள வேண்டும். இதற்க்கு அன்பவ அறிவு என்று பெயர்.இனி வருங்காலம் எத்தகு கொடியதாக இருக்கும் என்பதை சிந்தித்துப் பாருங்கள்.பிறவி பிறவி இப்படிப் பிறந்து கொண்டே இருந்தால் முடிவு எப்படி..அந்த முடிவுதான் முக்தி.இறைவன் ஒருவனே முதலும் முடி வுமாக இருப்பவன்.இதனை ஆங்கிலத்தில் PREVIOUS TO PREVIOUS , END TO THE END என்று சாத்திர நூல்கள் விவரிக்கின்றன.அன்பு இருக்கும் இடத்தில் ஆண்டவன் இருப்பான்.என்பது மறுக்க முடியாத உண்மை.

இங்கு ஒரு ஆழ்வார் பெருமகனார் கூறுவதைப் பார்க்க வேண்டும் " அன்பே தகழியா ஆர்வமே நெய்யாக இன் புருகு சிந்தை இடுதிரியா " என்று சொல்கிறார்.அன்பு அகல்விளக்கு ஆர்வம் நெய்.சிந்தனைதான் அதில் இடப் படும் திரி.இதுவும் கேட்டல் - சிந்தித்தல் - தெளிதல் என் னும் தத்துவத்தை உணர்த்தும்..அன்பு-தெளிதல்,நெய்-சிந்தித்தல், திரி-கேட்டல் என்ற முறைமையால் வரும். மூன்றும் இருந்தால் விளக்கு எரியும்..அவ்வெளிச்சமே ஞானம்.அந்த ஞானமே இறைவனிடம் அடைவிக்கும். அந்த ஞானத்துக்குப் பெயர் " நிட்டை கை கூடுதல் " என்றும் சாத்திரங்களால் விளக்கப்படுகிறது. அது தரு வது முக்திப் பதவி அல்லது சத்திநி பாதம் என்றும் நிரு

பிக்கப்படுகிறது.நோய் வருமானால் அந்த நோயிற்க்குறிய மூலத்தை கண்டு அதற்குரிய மருந்து தரவேண்டும்.பயிர் வளரவேண்டுமானால் களைகளைப் பறிக்க வேண்டும். குழந்தை வளரவில்லையானால் அதற்குரிய காரணம் கண்டு அதனைக் களையவேண்டும்.அதுபோல் திருவருள் காணமுடியாதவாறு செய்வது பிறவி என்பது விளங்கும். அப்பிறவி வாய்க்காமல் இருக்க உதவுவது இறைச்சிந்தனையும் மந்திரமுமே ஆகும்..மனம் எப்போதும் இறைவனுடன் தொடர்பு வைத்துக்கொண்டிருக்க வேண்டும். ( CONNECTION ) இந்த உறவு அறுக்க முடியாத உறவு ஆகும். " குறைவொன்றும் இல்லாத கோவிந்தா உந்தனோடு உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது அறியாத பிள்ளைகளோம் அன்பினால் "என்று ஆண்டாள் அம்மையார் அழகாகச்சொல்கிறார்கள்.இறைவனோடு கொள்ளும் உறவே உண்மையானது பிற உறவுகள் எல்லாம் போலியானது ஆகும்.

மேலே கூறியது போல் நமக்கு ஏற்படும் எல்லாத் துன்பங்களுக்கும் காரணம் இறைவனது திருவருள்நம்மிடம் இல்லாமையே என்பதறிக.அவன் நமக்கு அருளிச்செய்து உள்ளவைகளை மறந்து நம் இச்சைப்படி வாழ்வதால் ஆகும்..திருவருளை மறந்து உலகியல் இன்பங்களை எல்லாம் அளவு கடந்து அனுபவிப்பதால் மீண்டும் பிறவி வாய்த்து விடும்..குருவருளைப்பற்றி திருவருளை அடைய வேண்டும்.அதுதான் ஒளி விளக்கு.அதுவேஞானம்.ஞானம் பெறலாம் நலம்பெறலாம் என்று மகான் ஒருவர் கூறிச் சென்றுள்ளார்.பிறவி வகைகள் ஏழு.1.தாவரம்.2.புழுவகை 3.பறவைகள்.4.நீர் வாழ்வன.5.விலங்குகள்.6.மனிதர்கள். 7.தேவர்கள் என்பது.

"புல்லாகிப் பூடாகிப் புழுவாகி மரமாகி
பல்விருகமாகி பறவையாய்ப் பாம்பாய்
கல்லாய் மனிதராய் பேயாய் கணங்களாய்
வல்லசுர்ராய் முனிவராய்த் தேவர்ராய்
செல்லா நின்ற இத்தாவர சங்கமத்துள்
எல்லா பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான் "

இப்படி சிவபுராணம் வகைப்படுத்தி இவைகள் 84 லட்சம் யோனி பேதங்களால் நடை பெருகிறது என்பது தத்துவம் உலகியல் வாழ்வுக்கு வீடு.இறையுலக வாழ்வுக்கு வீடு அவ னது பொன்னடிகளேயாகும். விடு என்னும் சொல்லில் இருந்து வீடு என்பது வந்தது..எதை விடுவது பற்று பாசம் ஆசைகளை விடும்போது வீடு வந்து எய்துகிறது.இதைத் தான் பொருள் இல்லார்க்கு இவ்வுலகில்லை அருள் இல் லார்க்கு அவ்வுலகில்லை என்னும் பழமொழி வழக்கிலே வந்தது.ஆகவே திருவருள்கிட்ட அவனைப்பேசவேண்டும் ஆம் பெரியானைப் பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாள் எல்லாம் பிறவா நாளே என்கிறார் திருநாவுக்கரசு சாமிகள்.ஒரு பகல் பொழுதுக்கு மூன்று வேளைகள். காலை,நண்பகல்,மாலை என்பது.இதில் ஒருவேளையா வது நமது பாதங்கள் ஆலயத்தில் பதியவேண்டும்.தின மும் உணவு உண்பதற்க்கு முன் இறைவன் மலரடிகளில் மலரிட்டு வணங்கவேண்டும்.இறைவன் வேண்டுவது பூவும் நீரும்தான்.புண்ணியம் செய்தோர்க்கு பூவுண்டு நீருண்டு என்று திருமுறைகளால் பேசப்படுகிறது.

ஆகவே பிறவி பெற்றநாம்அப்பெருமானைஓதி உணர்ந்து உண்மைநிலையடைய வேண்டும்.இறைவன் ஏகன் அநே கன்.வேதங்கள் அப்பெருமானை ஐயா என்று ஓங்கி உரக் கப் பலமுறை இறைவனை கூவுகிறதாம்.இறைவனைக் காண முடியாதவாறு மறைப்பது பிறவியும் கன்மங்களே ஆகும்.அவனோடு கொள்ளும் உறவுக்குப் பெயர் நேச அருள் என்று பேர்.நேச அருள் புரிந்து என்கிறார் மணி வாசகர்.அன்பர்களுக்கு அவன்அன்பன்தொண்டர்களுக்கு அவன் தொண்டன்.அவன் சோதிவடிவானவன்.சோதியே சூழொளி விளக்கே,சோதி சிவஞானக் குமரேசா,இல்லக விளக்கது இருள்கெடுப்பது சொல்லக விளக்கது சோதி உள்ளது.அவன் உணர்வுகளில் நுண்ணுணர்வாய் இருப் பவன் அவன் சொல்லுதற்க்கு அரியவன் என திருமுறை சொல்கிறது.மின்சாரக்கம்பியைக் காணலாம்.ஆனால் அதில் ஓடும் மின்சாறத்தைப் பார்க்க முடியாது.மின்

சக்தியைப் பார்க்கலாம்.ஒரு பூவைப் பார்க்கலாம் ஆனால் அதன் மணத்தைப் பார்க்க முடியாதுமணத்தைநுகரலாம் காந்த இரும்பு பார்க்கலாம் ஆனால் காந்தம் பார்க்கமுடி யாது அதன் ஈர்ப்புசக்தி பார்க்கலாம்.நெருப்பு பார்க்கலாம் ஆனால் சூடு பார்க்க முடியாது சூட்டை உணரலாம் தேன் பார்க்கலாம் அதன் இனிப்பு பார்க்கமுடியாது அது சுவைத்துப் பார்க்கலாம்,மணி பார்க்கலாம் ஒலி பார்க்க முடியாது அதை கேட்டுக்கொள்ளலாம்,இதுபோலத்தான் உடலும்.உடலில் உள்ள உயிரைப் பார்க்க முடியாது உடல் இயக்கத்தைப் பார்க்கலாம் அதுபோலத்தான் இறைவனும் இறைச்சக்தியும்.ஆம் இறைவன் வியாபகப் பொருள்.அவன் வியாபகத்துக்கு எல்லையில்லை.நறு மணம் அதிகமாக வரும்போது அங்குள்ள துர்நாற்றம் மறைந்துவிடும்.திருவருள் கூடும்போது உயிர்களது மயக் .கம் நீங்கும்..கடவுள் எல்லாமாக இருக்கிறார் ஆனால் எல்லாம் கடவுள் ஆக முடியாது.( GOD IS ALL BUT ALL ARE NOT GOD ) ஆணவம் என்பது இருட்டறை அருள் விளக்கறை. இவைகளை ஆன்மாக்களுக்கு எடுத்துச் சொல்லி விளக்கி புரியவைப்பதால் சைவம் ஆற்றுப்படுத் தும் நெறி என்று கூறப்பட்டது.இறைவனது, உண்மை நிலைதனை விளக்குவது சமயம்.( TRUELSTIC NATURE ) சமய வாழ்வும் இறைத்தொண்டும் நெறிப்படுத்தப்பட்ட படிநிலைகள் ஆகும்.( MISTRESS STAGE ) மானை இட மாகக் கொண்டதினால் மானிடம் என்று பேர்.மனத்தை படைத்ததால் மனிதன் என்று பேர் பெற்றான்.அறிவுதான் சிவம் செயல்தான் சக்தி.நம்மை தந்ததால் தந்தைஎன்றும் தாங்கியதால் தாய் என்றும் பேர் வந்தது.நம்மை உலகில் உலவவிட்டது தந்தையாகிய இறைவனும் தாயாகிய சக்தி யும் ஆகும்..திருநாவுக்கரசரது தேவாரத்தைப் பார்க்கவும். தேவாரம் என்பது தே+வாரம் என்று விரியும்..தே-இறை வன், வாரம்-அன்பு செலுத்துதல்.ஆக தேவாரம் என்றால் கடவுளிடம் அன்பு செலுத்துதல் முறைப்படுத்துதல் மாலை சூட்டுதல் என்பது பொருள்.எரிகின்ற கொள்ளிக் கட்டையை எடுத்துப்பார்த்தால் அதில் சாம்பல் பூத்திருக்

கும்.உள்ளே நெருப்பு இருக்கும்.தொட்டால் சுடும்.பாலில் நெய் உண்டு ஆனால் தெரியாது.அதேபால் பக்குவப்படுத் தப்படும்போது அதன் நெய் கிடைக்கிறது.சாதாரண பால் ஒரு மூன்றுமணி நேரம் கெடாது.அது காய்ச்சப்பட்டால் ஒரு பத்துமணி நேரம் தாங்கும்.அதில் புரை ஊற்றிவிட் டால் நாள் முழுதும் கெடாது.அது கடையப்பட்டு வெண் ணை எடுத்தால் மூன்று நாட்கள் தாங்கும்.அது உருக்கி நெய்யாகும்போது எப்போதும் கெடுவதில்லை.பதிகம் கூறு கிறது பாருங்கள்.

" விறகில் தீயினன் பாலிற்படு நெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவுக் கோல்நட் டுணர்வுக் கயிற்றால்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே "(தேவாரம்)

பாத்திரம் - பிறவி , பால் - ஆன்மா(உயிர்),சூடு-சிந்தனை ஊற்றும் புரை - பக்தி , தயிர் - ஐந்தெழுத்து அல்லது திருநாமம், கடையும் மத்து - அறிவு, வெண்ணை - திரு வருள், நெய் - முக்தி அல்லது சத்திநிபாதம்.இப்பதிகத் துக்கு எவ்வளவு அருமையான பொருள் பாருங்கள்.இறை வனைக்காண்பதற்க்கு அவனிடம் உறவுக்கோல் நாட்டி கடைந்தால் அவன் முன் தோன்றுவான்.இதில் இன்னும் ஒரு பொருள் விடப்பட்டுள்ளது அதுதான் மோர் ஆகும். மோர்தான் குருநாதர்மோர் உடல் சூட்டை தணிக்கும் குருநாதர் உயிர் சூட்டை தணிப்பார்.மோர் உடலுக்கு குளிர்ச்சி,குரு உயிருக்கு குளிர்ச்சி.மோர் உணவை செரிக் கச்செய்யும் குருநாதர் உயிர் விருப்பை செரிக்கச்செய்வார். மோர் உடல் நோய் தீர்க்கும்(பேதி)குருநாதர் உயிர்நோய் தீர்ப்பார்.மோர் எப்போதும் பருகலாம் குருநாதர் எப்போ தும் அணுகலாம்.மொத்தத்தில் மோர் உடலுக்கு நன்மை செய்யும்.குருநாதர் உயிருக்கு நன்மை செய்வார் என்று சாத்திரநூல்கள் அறிவுறுத்துகின்றது.

மெய்யன்பர்களே இதுவரை கூறப்பட்டவைகளால் மண் ணிலே வந்த நாம் கடைத்தேற வெண்டுமானால் இறை வனை அடையவேண்டும்.அவ்வாறு அடைவதற்க்கு குரு வருளும் திருவருளும் அவசியம் என்று உணர்ந்தீர்கள்.

திருவருளைப் பெறுவதற்க்கு ஐந்தெழுத்து அல்லது ஏதா வஃது ஒரு மந்திரம்.காரணம் சிவஞானசித்தியார் கூறுகிறது
"யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வம் ஆகி ஆங்கே
மாதொரு பாகனார் தாம் வருவர் மற்றத் தெய்வங்கள்
வேதனைப்படும் இறக்கும் பிறக்கும் மேல்வினையும் செய்யும்
ஆதலால் இவை இலாதான் அறிந்தருள் செய்வன் அன்றே "
என்று சொல்லியிருப்பதால் எந்த தெய்வத்தை வணங்கி னாலும் எந்த தெய்வத்தின் மந்த்ரம் சொன்னாலும் இறுதி யில் உமையவளை தன் இடப்பாகத்தில் வைத்துள்ள சிவ பெருமானே அருள் என்னும் பலன் தர வல்லவன் எனக் கண்டு பெற்றிட்ட இப்பிறவியை பேணுவோம் பேரின்பம் தன்னை அடைய இனியாவது முயர்ச்சி செய்வோம் என்று கூறி கட்டுரை முடிக்கின்றேன்.அவனருள் அனை வர்க்கும் கிடைத்திட இறைஞ்சுகின்றேன்.

திருச்சிற்றம்பலம்

" உருவாகிப் பிறந்தநாம் உலகிலே ஓடிநாளும்
பொருளே வேண்டுமென பொழுதெலாம் கழிக்கின்றோம்
அருநிதியை வைத்திருக்கும் ஆண்டவனை வணங்கியே
திருவருளைக் கூடாமல் தினமும்தான் தவிக்கின்றோம். "

( ஆசிரியர் )

" இறைவன் எப்படி இருக்கின்றான் "

மெய் அன்பர்களே இக்கட்டுரைத் தலைப்பு கடினமானது.கடினம் என்றாலும் உங்கள் உள்ளத்தில் கரைந்து நிற்க்கும்படிச் செய்வது அப்பெருமானின் திருவருள்தான்.முதல் தலைபிலேயே விளக்கப்பட்டது இறைவன் சக்தி பார்க்கக்கூடியது.இந்திரியங்களால் நாம் பெற்றுள்ள ப்ரு உடல் போல் அல்ல இறைவனது உடல்.அது எப்பொதும் அருவத்தன்மையுடன் இருக்கும் என்றுவிளக்கப்பட்டது.அதாவது மறைந்துள்ள பொருளாகவே நிலைத்திருக்கும் என்பது.மனம் அதனைக்காட்டு என்றால் எப்படி? ஆனால் செய்யும் செயல்களால் நல்ல மனதையும் தீய மனதையும் அடையாளம் காட்ட முடியுமல்லவா. அதுபோலத்தான் இறைவனும் எல்லாம் செய்ய வல்ல செய்யத்தெரிந்த இறைவனுக்கு ஒன்று மட்டும் செய்யத் தெரியாது அதாவது கெட்டது செய்யத்தெரியாது.காரணம் இறைவன் வெருப்பு விருப்பு அற்றவன்.அவன் சன்னதியில் அனைவரும் சமமே.

பரிதியின் ஒளிபோல்,பனிமலர் பரிமளம் போல்,பண்ணின் இசைபோல்,பழத்தின் சுவைபோல் பயிலும் கல்வியறிவு போல் பாலில் நெய்போல்,பயன்படும் மின்சாரம் போல் பற்றி இழுக்கும் காந்தம் போல்,பக்குவ இனிப்பு வகை போல்,பருவத்தின் தென்றல் போல்,பைந்தமிழின் அழகு போல்,படைத்த உடலுயிர்போல்,பலூனில் காற்று போல் பார்வையின் காட்சி போல்,பாவையின் கவர்ச்சி போல், பஞ்சபூதங்கள் தன்மையென பரமனும் பரவிடுவான் உயிர்கள்பால் பாசமெனும் கருணையின் வடிவெனவே.இப்படிப் பட்ட நிலையில் உள்ள இறைவன் அன்புக்கு கட்டுப்படுவான்.அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே.அன்பாக வந்து நின்தாழ் பணிந்து என்கிறார் அருணகிரியார்.

" அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிகிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலர்
அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்து இருப்பாரே. " ( திருமந்திரம் )

ஆக இறைவன் அன்பு வடிவானவன்.கண்ணபிரான் சகா தேவனது அன்புக்கு கட்டுண்டு சகாதேவா விட்டுவிடு என்று கதறுகிறார் என்பது பாரதம் நமக்கு காட்டும் உண்மை..சிவபெருமான் தன் பக்தரான பாணபத்திர ருக்கு உதவும் பொருட்டு தானே விறகு வெட்டியாக வரு கிறார்.அம்பாள் அபிராமி அடியாரான பட்டருக்குதவ அமாவாசை தினத்தில் முழுச்சந்திரனை வரவழைக் கிறாள்.பகவான் கிருஷ்ணன் தன்பக்தன் கனக தாசருக்கு தானே திரும்பி நின்று காட்சி தருகிறார்.நில்லு கண் ணப்பா நில்லு என்று இறைவனே கண்ணப்பன் கைபிடித்து தடுத்து அருளியது இவைகள் எல்லம் அன்பு மீதூரல் என்னும் விளைவுகளால் ஏற்பட்ட அதிசயமே ஆகும்.அன்பின் இலக்கணம் எப்படிப்பட்டது என்பதை கீழ்வரும் பாடலாலும் அறியலாம்.

வாளால் மகவரிந்து ஊட்டவல்லேன் அல்லேன் மாதுசொன்ன
சூழால் இளமை துறக்க வல்லேன் அல்லேன் கண்ணப்பன் போல்
நாளாறில் கண்பெயர்ந்து அப்பவல்லேன் அல்லேன் இனிநான்
ஆளாவ தெங்ஙனே திருக்காளத்தி அப்பனுக்கே தெரிந்து.

( பட்டினத்தார் )

இப்பாடலில் சிறுத்தொண்ட நாயனார் தன் மகனை அரிந்து சமைத்து சிவனடியார்க்கு உணவு படைத்தது. தன் மனைவியின் கூற்றால் ஆணையிட்டு இளமை துறந்த திருநீலகண்ட நாயனார் வரலாறு,தன் இரண்டு கண்களயும் பறித்து சிவலிங்கத்தில் பதித்த கண்ணப் பர் கதை பேசப்படுகிறது.இம்மூன்றும் அன்பின் மிகுதி யால் எழுந்தவைகளே ஆகும்..ஆக இறைவனை நாம் பிடித்துக்கொள்ள சுலபமான வழி அன்பு செலுத்துவது தான்.வீசுகின்ற வலையில் மீன் கண்டிப்பாக சிக்கும். அதுபோல் அன்பினால் பக்தியெனும் வலை வீசப்படும் போது பரமனது கருணை அருள் என்னும் மீன் கண் டிப்பாக சிக்கும் என்பது உறுதி.இப்படி அன்பு வயப் படும் இறைவன் சோதிவடிவானவன்.சொற்றுணை வேதியன் சோதிவானவன் என்கிறது திருமுறை.சோதி சிவஞானக்குமரேசா என்கிறது திருப்புகழ்.தீப மங்கள

சோதி நமோ நம, கதிரொளி தீபம் என்கிறார் ஆண்டாள் அம்மையார்.இறைவன் ஒளிக்குள் ஒளி பேரொளிப்பிளம்பு இத்தன்மைத்தான இறைவன் இப்படியும் இருக்கிறான் என்பது உங்களுக்கும் தெரிந்திருக்கலாம்.இக்கருத்து சிவ பெருமானே ஔவைப்பிராட்டியிடம் கேட்டதாக வரலாறு

1.ஒன்றானவன் :-இறைவன் ஒருவனே.அவன் பேரானந்தப் பேரொளி.அவன் நின்மலன்.அவன் அநாதி.பிறப்பு இறப்பு இல்லாதவன்.

2.உருவில் இரண்டானவன் :- உயிர்களுக்கு அருளும் பொருட்டு அவன் சிவம் + சக்தி என்று இருவடிவானவன்

3.உருவான செந்தமிழில் மூன்றானவன் :-செந்தமிழ் என் பது இயல்,இசை,நாடகத்தைக் குறிக்கும்.சிவபெருமான் தமிழ் சங்கத்தலைவர் என்பதை இங்கு ஒப்பு நோக்கவும்

அ ) ஆடியது - சிதம்பரம் ( தில்லை ) இயற்றமிழ்

ஆ ) பாடியது - மதுரை - இசைத்தமிழ்

இ ) நடித்தது - திருவாரூர் - நாடகத்தமிழ்.

4.நன்றான வேதத்தில் நான்கானவன் :வடமொழி வேதங் கள், இருக்கு,யஜுர்,சாமம்,அதர்வணம் என்னும் நான்கு. நால்வர் பாடிய திருமுறைகள் தமிழ் வேதங்கள் எனப் படும்.இவ்விரண்டின் மய்யப்பகுதியிலும் ருத்ரமந்திரம் இருப்பது சிறப்பு.

5.நமசிவாய என ஐந்தானவன் :-இறைவனது வடிவம் நம சிவாய என்பது.இதனை பஞ்சாக்கரத் திருமேனி என்று கூறுவார்கள்.இறைவனது ஐதொழில்கள் கூட இதில் அடங்கும்.

6.இன்பச்சுவைகளில் ஆறானவன் :-ஆறுவிதமான சுவை கள் 1.காரம் 2. உப்பு 3.துவர்ப்பு 4.இனிப்பு 5.புளிப்பு 6கசப்பு

7.இன்னிசை சுரங்களில் ஏழானவன் :-இசையின் சுரங்கள் ஏழு. ச-ரி-க-ம-ப-த-நி

8.திக்குப் பொருள்களில் எட்டானவன் :-இது திசைகள் எட்டு என்பதற்க்கும் பொருந்தும்.இறைவனது கல்யாண குணங்கள் எட்டு என்பதற்க்கும் பொருந்தும்.1.தன்வயம் 2.தூய உடம்பு,3இயல்பாகவே பாசங்களில் நீங்குதல்,4.முற் றும் உணர்தல்,5.இயர்க்கை உணர்வு,6.பேரருள் உடைமை

7 வரம்பில் இன்பமுடைமை,8.முடிவில் ஆற்றலுடைமை என்று இந்த எட்டும் அடங்கும்.இதனை திருவள்ளுவர் எண்குணத்தான் என்கிறார்.
9.<u>தித்திக்கும் நவரச வித்தானவன் :-</u>இது ஒண்பது வகையான பாவங்களைக் குறிக்கும்.இது சற்று முரண்பட்டுத் தெரியும் இறைவனுக்கும் பாவங்கள் உண்டா என்று.அடியார்களை ஆட்கொள்ள வரும்போது இறைவனுக்கு இப் பாவங்கள் தேவைபடுகிறது. என்பதை நினைவு கூற வேண்டியுள்ளது.1.சாந்தம் 2.வெகுளி 3 கோபம் 4.மகிழ்ச்சி 5.வீரம் 6.அழுகை 7.சிரிப்பு 8.காதல் 9.இழிவரல்(சோகம்) இப்படி ஒண்பது பாவங்கள்
10.<u>பத்தானவன் நெஞ்சில் பற்றானவன்</u> :-பத்து என்பதின் விளக்கம் மிக உண்டு. உருவம் இரண்டு சிவம் + சக்தி இயக்கம் மூன்று இலயம் + போகம் + அதிகாரம் தொழில் ஐந்து.படைத்தல்+காத்தல்+அழித்தல்+அருளல்+ மறைத்தல் என்பன.இதிலேயே இறைவனது வல்லமைகளும் பத்து என்று பேசப்படுகிறது.1.அநாதி 2.என்று முள்ளவன்(பரம்) 3.மலம் தீண்டாது ( நின்மலன் )4.அவனே முதற்பொருள்.5.அவனே சகல வல்லபன் 6.அவனே ஐந் தொழில் ஆற்றுபவன் 7.அவனே பேரொளி 8.அவனே ஞானம் 9.அவனே அறிவு 10. அவனே இயக்கம்
11.<u>வது பாவம் :-</u>பதினொன்று எண்ணிலும் இறைவன் திகழ்வதுண்டு.சிவபெருமானது அம்சமாக பதினோரு உருத்திரர்கள் திருவிடை மருதூர் வந்து மகாலிங்கப் பெருமானை வழிபட்டுச் சென்றனர்.
12.<u>பன்னிருகை வேலவனைப் பெற்றானவன் :-</u>ஆறு முகமும் பன்னிரண்டு கரங்களும் கொண்ட முருகனை பெற்றவன்.தமிழ் மொழியின் உயிரெழுத்துக்கள் 12. ஊனாய் உயிராய் இருப்பவன் இறைவன்.அவனே தமிழ் அவனே மொழி இக்கண்ணோட்டத்திலும் இது சரி. இறைவன் அந்தம் ஆதி முதலும் முடிவும் அவனே நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே என்று மணி வாசகரும் அணுவிற்கணுவாய் அப்பாலுக் கப்பாலாய் என்று ஔவைப்பிராட்டியாரும் கூறுகிறார்

கடவுள் அணுவைப்போல் என்பது உண்மை ( ATOM ) அணு கூறுபிரிக்கக் கூடியதுவே என்று விஞ்ஞானிகளால் நிரூபிக்கப் பட்டுள்ளது. ( ATOM CAN SPLIT )இதன் மூன்று கூறுகல் காணவும்.

1.நிலைபேரானது --NUTRON --செஞ்சிவப்பு நிறம் - RED
2.ஒடுங்கிய வண்ணம் --PROTON --பச்சை நிறம்--GREEN
3.இயக்க நிலை --ELECTRON --மஞ்சள் நிறம்--YELLOW

என்றும் உள்ள சிவம் செஞ்சிவப்பு நிறம்.இத்துடன் கூடிய சக்தி பச்சை நிறம்.இவர்கள் இயக்கும் அண்டப்பகுதி மஞ்சள் நிறம்.இதே தத்துவத்தை மாணிக்க வாசகர் சொல்கிறார் " அண்டப் பகுதியின் உண்டைப் பிளக்க அளப்பருந்தன்மை வளப்பெருங்காட்சி "என திருவண்டப்பகுதியிலே சொல்கிறார்.இதை உணர்த்தும் வரை படம் பார்க்கவும்.இது புரிந்து கொள்வதற்க்குத்தான் உண்மை படம் அல்ல.



இப்படத்தில் ABCD என்று முக்கோணங்கள் காட்டப்பட்டு உள்ளது.இம்முக்கோணங்களது வரை கோட்டின் நீளம் காணும் சூத்திரம்.

$\sqrt{DB\ 2 + AD\ 2\ =\ AB\ 2}$

$\sqrt{AD\ 2 + AC\ 2\ = AC\ 2}$

$\sqrt{AB\ 2\ +\ AC\ 2}\ \Pi\ DN$ = REACHING POINT OF GOD அதாவது

இறை தத்துவத்தின் மையம் ஆகும்.

BD = 3, CD = 3, AD = 4 என்றால் நமக்கு தெரியவேண்டி யது AC மற்றும் AB ஆகும்.

3 X 3 = 9 , 4 X 4 = 16 , 9 + 16 = 25 ரூட் ஆப் = 5 என்பது விடை.. ஆக AC 5 ,AB 5 , 5 + 5 =10

3 + 3 + 4 = 10. இரண்டிலும் பூஜ்ஜியம் உள்ளது இந்த பூஜ்ஜியம் போனால் எஞ்சுவது 1 + 1 ஆகும். அடுத்து 0 +Π DN என்று சூத்திரம் சொல்கிறது. $\Pi$ $\frac{22}{7}$

D = 7 ,N = 5 , என்று வைத்துக்கொள்ளுங்கள் 22 X 7 X 5 = 110 விடை ஆகும் இதிலும் " 0 " அடிக்க எஞ்சுவது 11 அதாவது 1 + 1.கணக்குப்படி 11 + 11 = 22. இதை 2 ஆல் வகுத்தாலும் வருவது 11. டுப்படிக் காட்டும் 1 + 1 என்று ஆக இறைவன் ஒருவனே.அவன் உருவத்தில் அல்லது இயல்பால் இரண்டாய் இருப்பவன்.அதுவே சிவம் + சக்தி உயிர்களை மேல்நோக்கி செல்லவிடாது கீழ்நோக்கி இழுப்பது பாசங்களே அதாவது மாயையாகும் என்பதை அறியவும்.இக்கணக்கும் தெளிவு படுத்தும் என்று நம்பு கிறேன்.

A. REACHING POINT OF GOD.THAT MEANSS JOTHI பேரொளி வடிவான இறைவனை அடையும் இடம்

CDB THREE TYPES OF ROPE WHICH ARE TIEING THE SOLE.

உயிர்களை கட்டுவிக்கும் மூன்றுவிதமான தளைகள்.
AD .THE DISTANCE BETWEEN AD IS SOLE LINE.
ஏடிஇவ்விரண்டிற்க்கும் இடைப்பட்ட கோடுதான் உயிர் கள் ஆகும். AC = நல்வினை.அதாவது இன்பம் ஆகும் GOOD FOR THE ENJOYMENT.
AB = தீவினை. அதாவது துன்பம் ஆகும்.BAD FOR THE SUFERINGS. இவ்விரண்டும் பிறவிக்கு மூல காரணம்
1.சிவம் - SHIVA ( MALE ) BASE. மூலப்பீடம்
2.சக்தி - SHAKTHI ( FEMALE ) ENERGY இயக்கம்
மேலேஉள்ள படத்தில் உயிர்கள் கீழும் மேலும் உள்ள நேர்க்கோட்டில் காட்டப் பட்டுள்ளது.இதில் ஒருஉண்மை உண்டு.இங்கு உயிர்கள் என்று குறிக்கப் படுவது மனித இனத்தை மட்டுமே..கூர்ந்து கவனியுங்கள் மனித உருவம் மட்டுமே நேராக கீழ்நோக்கியும் மேல்நோக்கியும் இருக் கிறது.( MAN IS VERTICAL TYPE ) அதாவது மனிதன் மட்டுமே மேல் நோக்கி முக்தி என்னும் பதவி பெறத் தகுதி பெற்றவன் என்பதைக் காணவும். இதைக்காட்டு வதுதான் நமது சிரசு மேல்நோக்கியும் பாதங்கள் கீழ் நோக்கியும் பதிந்துள்ளது.இறைவன் அளாப்பருங் கருணை கொண்டவன் என்பது மட்டுமல்ல அவன் ஒரு தத்துவக் கலைஞன் என்பதை உறுதிப் படுத்தும்.
( THE GREAT ARCHETECH )

வேறு எல்லா உயிரினங்களும் குருக்கு வாட்டத்தில் உடல் அமைப்பு இருக்கும்.மிருகம் ஊர்வன எதுவா னாலும் சரி. ( HORIZANTAL TYPE ) ஆக பிறப்பெடுத்த உயிர்கள் விடுபடவேண்டியது மூன்று தளைகளில் இருந்துதான் என்பது புலப்படும்.நமது கைவிரல்களில் இது அடங்கியுள்ளது.இதைத்தான் பெரியோர்கள் சின் முத்திரை என்று கூறுவது வழக்கு.உயிரை மறைக்கும் பாசங்களை இப்படத்தில் காணலாம் உயிர்கள் ( பசு ) இறைவனை ( பதி ) சேரவொட்டாமல் தடுப்பது தளை ஆகும்.( பாசம் ) இதுவே உயிருக்கும் இறைவனுக்கும் நடுவே சுவராய் நிற்பது.

படம் 2




தளைகளது விதம் எப்படி வேண்டு மானாலும் இருக் கலாம்.அவைகளின் உற்பத்தி எங்கிருந்து வேண்டு மானாலும் தோன்றலாம். ஆனால் நாம் ஞாபகத்தில் கொள்ள வேண்டியது சடம் என்பது மட்டுமே. படம் ஒன்றில் உள்ள வட்டத்தில் உள்ள புள்ளிகளே அண் டங்களாகும்.இறைவனின் கீழ் உள்ள அதிகாரிகள் மூலம் இயக்கம் நடைபெருகிறது.உதாரணமாக மும்மூர்திகள் மகேஸ்வரர்,அனந்தேஸ்வரர், ஸ்ரீ கண்டருத்திரர்,நந்தி இப் படிப்பல பெயர்களச் சொல்லலாம்.இயக்கப்படும் பொருள் டியங்குமே தவிற இயங்கும் சக்தியாக எப்போதும் மாற முடியாது என்பது உண்மை. " THE POWER CAN OPERATE MANY EQUIPMENTS BUT THE EQUIPMENTS CAN NOT POSSIBLE TO CONVERT AS POWER " பொதுவாக இறைவன் பிறப்பு இறப்பு இல்லாதவர்.செம்மான் மகளை திருடும் திருடன் பெம்மான் முருகன் பிறவான் இறவான் என்கிறார் அருணகிரிப் பெருமான்.திருநாவுக்கரும் சொல் வதைப்பாருங்கள்.மாற்று இல்லாதவர் ஈசன் / சிவன் ஒரு வனே என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும்.

" நூறுகோடி பிரமர்கள் நொந்தினர்
ஆறுகோடி நாரணர் அங்ஙனே
ஏறுகங்கை மணலெண்ணி இந்திரர்
ஈறில்லாதவன் ஈசன் ஒருவனே " ( தேவாரம் )

இப்படியெல்லாம் இறைவனது பெருமை எடுத்துச் சொன்னாலும் தமிழ் இலக்கியங்கள் என்ன சொல்கின்றன என்பதைப்பற்றியும் சிறிது காணலாம்.

தீயினுள் தெறல் நீ பூவினுள் நாற்றம் நீ
கல்லினுள் மணியும் நீ சொல்லினுள் வாய்மை நீ
அறத்தினுள் அன்பு நீ மறத்தினுள் மைந்து நீ
வேதத்து மறை நீ பூதத்து முதலும் நீ
வெஞ்சுடர் ஒளியும் நீ திங்களுள் அணியும் நீ
அனைத்தும் நீ அனைத்தின் உட் பொருளும் நீ
( பரிபாடல் )

அனைத்து இறைவனே என்று ஐயமின்றி செப்பும் இப் பரிபாடல் வரிகள் மானிடர் நெஞ்சில் பதிந்தால் பிறவியை தேற்றும் முயர்ச்சியில் ஈடுபடலாம் என்று கருதுகிறேன். காலச்சக்கரம் உருண்டு ஓடுகிறது.நரை திரை மூப்பு வந்து மனிதரை வாட்டுகிறது.இறைவன் ஆதியும் அந்தமும் இல்லாத அரும் பெரும் சுடர்." அந்தமும் ஆதியும் இல்லா அருட்பெருஞ் சோதியையாம்பாடக் கேட்டேயோ என்று மணிவாசகர் கூறுகிறார்..இறைவன் சுடர் அதே சமயம் அவன் பழமைக்கும் பழ்மை புதுமைக்கும் புதுமை என்றும் பேசப்படுகிறது." முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளே பின்னைப் புதுமைக்கும் பெர்த்தும் அப்பெற்றியனே " என்றும் மணிவாசகர் சொல்கிறார்.

இறைவன் ஆணவமலத்தொடக்கு இல்லாதவன்.ஒருவன் என்றும் ஒருவனாய் இருக்கிறான்.அவனுக்கு அழிவு இல்லை.உயிர்களின் அறிவுக்கு அறிவாயும் சலனம் அற்றவனாயும் இருகிறான்.இடத்தால் வரையருக்கப்பட முடியாத வியாபகம் உடையவன்.இத்தகு இறைவனைத் தெரிந்தவர்கள் மெய்ஞானத்தால் அறிந்து சிவம் என்று சொல்கிறார்கள்.

அநாதி முத்துருவாய் இருக்கும் சிவபெருமான் புறப் பொருளை நோக்காது ஒன்றிலும் தோய்வு இன்றி தாமே சுயம் பிரகாசமாக நிற்பவன்.இந்நிலையில் அவன் சிவம் என பெயர் பெருகிறான் பதி - காப்பவன்,பா - காத்தல் தி - வினைமுதல் பொருள்.இறைவன் சூக்கும சித்து உயிர் தூல சித்து,இறைவன் பற்றற்றவன்,உயிர் மலப் பற்றுடையது.உணர்த்த உணர்வது உயிர்,உணர்த்தாமலே உணர்பவன் இறைவன்.இறைவன் சுதந்திரம் உடையவன் உயிர் பரதந்திரம் உடையது.இறைவன் இருக்கின்றான் என்பதை மூன்று பிரமாணங்களால் காட்டலாம்.

1.பிரத்தியட்சப் பிரமாணம் --- காண்டல் அளவை
2.அநுமானப் பிரமாணம் ---- கருதல் அளவை
3.கிருந்தப் பிரமாணம் ---- நூல் அளவை, உயிரளவை·

முதலாவது நேருக்கு நேர் பார்த்து தெரிந்து கொள்வது இரண்டாவது சாட்சிகளை வைத்து தெரிந்து கொள்வது மூன்றாவது புத்தகங்கள் தாமிரப் பட்டயங்கள்,கல்வெட்டுக்கள்,தொல்பொருள் ஆராய்ச்சி நிலையம் மூலம் கிடைக்கும் விடைகள்.புகையை வைத்து நெருப்பை உறுதி செய்தல்.இதனை கீழ் வரும் செயலாலும் அறியலாம்

" அலைவு இல் அசேதனம் மாயை ஆதலானும்
அணுக்கள் உரு அடையும் அறிவு இலாமையானும்
நிலவு தொழில் மருவு உரு நிற்றலானும்
நின்று எவையும் அளித்திடுவன் நிமலன் தானே "
( சிவப்பிரகாசம் )

நின்மலன் ஆகிய சிவபெருமான் ஒருவனே நிமித்த கார ணனாய்நின்று உயிர்கள் உய்யும் பொருட்டு மாயையிலி ருந்து தனு கரண புவன போகங்கள தோற்றுவிக்கிறான் டுந்தச் செய்யுள் கடவுள் உண்மையை இவ்வாறு நிலை நாட்டுகிறது.ஆக இவைகள் மூலம் உலக இயக்கமும் உயிர்களது இயக்கமும் முழுமுதல் பொருளாகிய சிவ பெருமான் மூலமே என்பது உருதிப் படுத்தப்படுகிறது வானில் விளங்கும் கதிரவன் சந்நிதியில் ஒரு தாமரை மலரும்.அத்தாமரை மலர்வதற்க்குரிய பக்குவமான் அரும்

பாய் இருக்கும்..ஒரு தாமரை வாடி உலரும்.இப்படி கதிர வன் முன்பு தாமரை மலர் மூன்று விதமாக செயல்பட் டாலும் கதிரவன் குறைவு படுவதில்லை.அதாவது விகாரம் அடைவது இல்லை.அதுபோல் உலகம் முழுவதும் சிவ சந்நிதியில் தொழிற்படும்போது சிவபெருமான் நிர்விகாரி யாக இருக்கிறான்.உலகுக்கு உயிரானாய் போற்றி என உலகுக்கு ஒருவனே என்றும் திருத்தாண்டகத்தில் பேசப் படுகிறது.இறைவனது அருள் வடிவில் உலகும் தோன்றி ஒடுங்கும்.ஆதலால் உலகக் காரணன் எனப்படுகிறான்இத் தகு வேதவாக்கையும் யாரும் அறிவதில்லை.சிவபெரு மானை உலகுக்கு அந்தர்யாமி என்று வேதம் சொல் கிறது.அந்தந்தப் பொருளுக்கு அந்தந்த பொருளாய் கலந் திருப்பது என்பது பொருள்.சிவபெருமான் இயல்பை அறியமுடியாதவர்கள் எல்லாக் கடவுளர்களைப்போல் சிவனும் ஒருவன் என்பர்.அரியும் அயனும் கூட திருவடி திருமுடி தேடும் முயற்ச்சியில் ஈடுபட்டு தோல்வியே கண் டனர் என்பது வரலாறு காட்டும் உண்மை.

பாதி உருவை உமையவளுக்கு யார் தந்து அர்த்தநாரீஸ் வரர் என்று பேர் பெற்றார்களோ அவரே உண்மையானக் கடவுள் என்ற தத்துவத்தையும் அறியமுடியாதவர்களே சிவபெருமானையும் ஏனைக்கடவுளர்களில் ஒருவர் என்பர் தன்வடிவத்தில் பாதிசக்திபாகமாக உள்ளது சிவபெரு மான் ஒருவருக்கே யன்றி ஏனைய கடவுளர்களுக்கு கிடையாது என்பதை பிரமாணங்கள் உணர்த்துகின்றன. இந்நிலையில் மூன்று வடிவங்களை உயிர்களுக்காக கொள்கிறார்.1.போகவடிவம் 2.கோரவடிவம் 3.யோக வடிவம் என்பது.

போகவடிவம் - உயிர்களுக்கு போகம் புரிதல் பொருட்டு உயிர்களது விருப்பங்களை நிறைவேற்றி அனுபாவிக்கச் செய்யும் உபயத்திருமேனி என்பார்கள்.

கோரவடிவம் :-உயிர்கள் செய்யும்/செய்த வினைகளை நுக ரும் பொருட்டு அவைகளைக் கெடுத்து பயன் பெருவதற் குப் பக்குவப் படுத்தும் நிலைபெற வைக்கும்படி எடுக்கும் வடிவமாகும்.இதனை மயர்வருக்கும் திருமேனி என்பர்.

யோகவடிவம் :-உயிர்களுக்கு யோகம்,முக்தி,பதமுக்தி சத் திநிபாதம் என்னும் நிலைகளில் உதவுதல் பொருட்டுதாங் கும் திருமேனி என்று சாத்திரத்தில் பேசப்படுகிறது. இது அபயத்திருமேனி என்று பொருள் படும்.இவ்வாறு இறை வன் திருமேனி கொள்வது உயிர்கள் பொருட்டாகும்.இப் படிப்பல மாறுபட்ட வடிவங்களை இறைவன் கொள்வது உயிர்களுக்கு போகம்,வீடு,யோகம் முதலியன உதவுதல் ஆகிய அனுக்கிரகம் என்னும் திருவருள் பிறவி பெற்ற நாம் அடையவேண்டும் என்னும் பெருங்கருணையினால் என்பது தானே தவிர இறைவனுக்கு நம்மால் ஆகவேண் டியது எதுவும் இல்லை என்பது கண்கூடு.

பராசக்தியின் திருஉள மகிழ்சியால் பரமசிவனது திருக் கண்களை திருவிளையாட்டாக எண்ணி தன்னிருக்கரங் களால் மூடினார்கள்.அப்போது உலகில் எங்கும் இருள் படர்ந்தது.அந்த நிலையில் சிவபெருமான் கருணையால் உலகில் உள்ளவர்களுக்குத் தூய தன் நெற்றிக் கண்களி னால் மிகுந்த ஒளியினை வழங்கி அருளினான்.எனவே உலகில் உள்ள ஒளிகள் எல்லாம் சிவபெருமானது திரு வருள் ஒளியேயாகும் என்பது வெளிப்பாடு.ஆகவே இறை வன் கொள்ளும் வேடம் எல்லாம் திருவருளை வழங்கும் செயலே என்பதற்க்கு ஆதாரமாக இச்சம்பவம் பேசப்படு கிறது.ஆன்மாக்களுக்கு முக்தி அளிப்பது ஆகிய அருளு தலுக்கும் நிட்டை இருந்து காட்ட வேண்டியுள்ளது. பாசம் நீங்குதலாகிய சங்காரத்தொழிலுக்கும் தோன்றிய முறையிலேயோ ஒடுங்க வேண்டியுள்ளது.இத்தகு நிலை களால் இறைவன் உருவத்திருமேனி கொள்ளவேண்டி யுள்ளது.

அத்திருமேனிகள் ஊனநடனம் ஞானநடனம் என்று இருவகைப்படும்..படைத்தல்,காத்தல்,அளித்தல்,அருளல் என்னும் நான்கும் ஆன்மாவுக்கு அறிவிக்கும் தொழில் ஆக இருப்பதால் அவை ஞான நடனம் எனப்படும். திரோபவம் மறைத்தல் தொழிலாக இருப்பதால் அது

ஊனநடனம் எனப்படும்..இப்படி இறைவனுக்கும் அரு வம்,உருவம்,அருஉருவம் என்னும் மூன்று திருமேனி கள் உயிர்களுக்கு உதவும் பொருட்டு எடுக்கிறான் என் பது வெளிப்பாடு.இப்படி கருணையினால் கொள்ளும் நினைந்ததொரு வடிவமே யன்றி வெற்றுடனும் கலந்து நிற்க்கும் வடிவம் இல்லை என்பது கருத்தில் கொள்ளத் தக்கது.

ஊனநடனம் --- நமசிவாய ----வடிவம் ---பாதாதிகேசம்
ஞானநடனம் --- சிவாயநம ----வ்டிவம் ---கேசாதிபாதம்
சிவபெருமான் வாக்கிற்க்கு எட்டாதவன்.அதேசமயம் அடியவர்களுக்கு எளியவன்.சிவபெருமானே அடியார்க் கெளியன் என்று தெரிவித்து உள்ளார்.தர்க்கவாதங்களால் அளந்து அறிதற்க்கு அரிய பெரியவன்.ஐந்தொழில் ஆற் றும் போது சிவபெருமானே திருமால் பிரமன் ருத்திரன் மகெஸ்வரன் சதாசிவம் என்ற பெயர்களில் இயக்கத்தை ஆற்றுகிறார் என்பதை மறக்கக் கூடது.

இரும்பாலும் வெள்ளியாலும் பொன்னாலும் மூன்றுகோட் டைகளை அமைத்துக் கொண்டு அரக்கர்கள் வானவர்க்கு துன்பம் செய்து வந்தன்ர்.இவர்களை முப்புராதிகள் என்று கூறுவதுண்டு;அம்மூன்று அரக்கர்களது கோட்டைகளும் காணமுடியாதவாறு நெருப்புக்கடலில் காணாமல் போகு மாறு சிறுநகை செய்து அருளிய பெருந்தன்மை உடைய வன் சிவபெருமான்.அவனே அரிதினும் அரிது பெரிதினும் பெரிது எனும்படி இருப்பவன்.உமையவளும் அவனுள் அடக்கம் என்று கூறி தொண்டர்களது பெருமை உலகம் அறியும்படிசெய்தவர் சிவபெருமான்.அவன் அருட்பெருஞ் சோதிவடிவினன்.அவனை அகக்கண்களால் காண்பதல் லால் ஊனகண்களால் காணப்பட முடியாதவன் என்பது உண்மை.

" பாரப்பா அகார முதலுகாரங் கொள்ளும்
பாங்கான உகாரமது மகாரம் கொள்ளும
நேரப்பா மகாரமது விந்து கொள்ளும்
நேரான விந்துவது நாதம் கொள்ளும்
சேரப்பா நாதமுற்றுரி சத்தி கொள்ளும்

சேர்ந்து நின்ற சத்தியல்லோ சிவத்தைக் கொள்ளும்
ஆரப்பா சிவந்தன்னைப் பரந்தான் கொள்ளும்
அப்பரத்தைக் கொண்டவிடம் அறிந்தே யுன்னை
( சட்டை முனிச்சித்தர் )

இறைவன் ஓம் என்னும் ஓங்கார வடிவம்.அது அ-உ-ம என்று கொள்ளும்.இது நாதம் விந்து கலை என்பதைக் குறிக்கும்.இதில் நாதம் என்பது சக்தியையும் விந்து என்பது உயிர்களது பிறவி முறைகளையும் கலை என்பது இறைவனது தொழில் முறைகளையும் குறிப்பன வாகும்.அதாவது நிவர்த்திக்கலை,பிரதிட்டாக்கலை,வித்தியாகலை,சாந்திகலை,சாந்திஅதீத கலை என்று ஐந்து வகைப்படும் இவைகள் அனைத்தையும் கொண்டிருப்பது சிவம்.அச்சிவத்தை கொண்டிருப்பது பரம் என்று சொல்லப்படுகின்ற வெளியாகும்.இதனையே பரவெளி என்றும் சொல்வார்கள்.பரம் என்றால் என்றும் உள்ளது நித்தியம் என்பது பொருள்.இதனையே ஔவைப்பிராட்டியாரும் அணுவிற்கணுவாய் அப்பாலுக்கப்பாலாய் கணுமுற்றி நின்ற கரும்புள்ளே காட்டி என்று கூறுகிறார். இங்கு அப்பாலுக்கப்பால் என்பதுதான் வெளி.ஒன்றுமில்லாத வெற்றிடம்.அதற்க்குத்தன் பரவெளி என்று பேர். அப்படிப்பட்ட பரத்தைக் கொண்டுள்ள இடம் எது என்று தெரிந்து அதனை நீ நாடுவாயாக என்று சொல்கிறார் சித்தர்.பரத்தைக் கொண்டதினால் பரமசிவன்.பரத்தை கொண்டிலங்குவதால் பரம்பொருள் அப்பரமே ஒவ்வொருவர் ஆத்மாவோடும் இணைந்து இருப்பதால் பரமாத்மா அவர் கருணை மிகுந்தவராக இருப்பதால் பரங்கருணை அவன் நடனத்தை கொண்டிருப்பதால் பரதம்.அவன் ஞானத்துக்கு அதிபதியானதால் பரஞானம்,அவன் சுடராக இருப்பதால் பரஞ்சுடர்,அவன் ஆன்மாக்களுக்கு சுகத்தை அளிப்பது உயிர்களுக்கு ஆனந்தமாக இருப்பதால் பரமானந்தம்,பரமசுகம் என்றும் பெயர்கள் பெற்றுள்ளான் இப்படி இறைவன் இருக்கும் இயல்புகளை தத்துவங்களும் ஆகம விதிகளும் வேதமும் வெளிப்படுத்துகின்றன. மண்,விண்,கடல்கள்,ஏழுஉலகம்,எண்.எழுத்து,இசை,பண் கண்,மணி,ஒளி,இருள் என இடம் பெற்றவன் இறைவன்.

" மண்ணும் நீ விண்ணும் நீ மறி கடல்கள் ஏழும் நீ
எண்ணும் நீ எழுத்தும் நீ இசைந்த பண் எழுத்தும் நீ
கண்ணும் நீ மணியும் நீ கண்ணுள் ஆடும் பாவை நீ
நண்ணும் நீர்மை நின்றபாதம் நண்ணுமாறு அருளிடாய் "
( சிவவாக்கியச் சித்தர் )

இப்படி அறிந்து கொள்ளவேண்டும்.அவனை எப்போதும் நினைக்க வேண்டும்.அவன் தத்துவன் காற்று கனல் கடல் அதேசமயம் கருணை மயமானவன்.அவனை பேசாத நாள் எல்லாம் பிறவா நாளே என்று திருநாவுக் கரசர் சொல்கிறார்.

" அரியானை அந்தணர் தம் சிந்தையானை அருமறையின்
அகத்தானை அணுவையார்க்கும்
தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத் திகழொளியைத்
தேவர்கள் தங்கோனை மற்றைக்
கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக் கனைகடலை
குலவரையைக் கலந்து நின்ற
பெரியானைப் பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத
நாளெல்லாம் பிறவா நாளே " ( திருமுறை )

அவனைப் பேசாத நாள் நாம் பிறக்காத நாள் என்று தெளிவாகச் சொல்கிறார்.இப்படி இருக்கும் இறைவன் அடியார்களுக்கு துணைவன் அல்லல் தீர்ப்பவன் பிறவி நோய்க்கு அருமருந்து.அவனை இந்நிறத்தான் இவ்வண் ணத்தான் என்று எழுதியும் காட்ட ஒண்ணாததே என்று திருமுறைகளால் பேசப்படுகிறது.அப்படிப்பட்ட இறைவன் பின்னே எங்கே இருகின்றான் என்று பார்த்தால் அதுவும் வேறாகத்தான் இருக்கிறது.

" கயமே கோயிலாக கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மன்மணி லிங்கமாக
நேயமே நெய்யும் பாலா நிறைய நீர் அமைய ஆட்டிப்
பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே "
( திருமுறை )

மனித உடல்தான் கோவில்.மனம் ஆண்டவனிடம் அடி மையாக இருக்க வேண்டும்.வாய்மையே தூய்மையாக மனதில் ஒளிர்கின்ற மணிதான் லிங்கம்.அன்புதான் நெய் பால் கொண்டு ஆடும் அபிசேகம். ஒன்றிய நினைவுதான்

பூசனை.இதேபோல் ஒரு சித்தர் பாடலும் சொல்வதைப் பாருங்கள்.

" உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளர் பிரானுக்கு வாய்கோபுர வாசல்
தெள்ளத் தெளிந்தோர்க்கு சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளாமணி விளக்கே "

மேலே காயமும் கோயில் இங்கு ஊனுடம்பு ஆலயம் என்னே ஒற்றுமையான கருத்து பாருங்கள்.மேலே மன மணிலிங்கம் இங்கு சீவன் சிவ லிங்கம்.இரண்டும் ஒன்று தானே.இதில் இருந்து என்ன தெரிகிறது தத்துவத்தை யார் எப்போது எங்கு சொன்னாலும் அது உண்மையைத் தான் பரிணமிக்கும் இப்படிப்பட்ட நிலைபேறுகளில் உள்ள இறைவனை எப்படிப் பார்ப்பது.அவன் மந்திர வாயிலாக முடியும்.

" நாதவிந்து கலாதி நமோ நம
வேத மந்திர சொரூபா நமோ நமோ
ஞானபண்டித சாமி நமோ நமோ "
( திருப்புகழ் )

இறைவன் மந்திர வடிவானவன்.வேதங்களில் இருப்பவன் வேதங்களால் பேசப்படுபவன்.நாதம் - விந்து - கலை என் னும் மூன்றுக்கும் தலைவன்.ஓம் என்னும் ஓங்காரமே நாதம்.ஓம் என்னும் மந்திரமே இறைவன் இருப்பிடம் இதனையே பிரணவ மந்திரம் என்பார்கள்.பிரணவம் என் றால் உயிர்.பிராணன் என்பதில் இருந்து பிரணவம் என் னும் பதம். வந்தது.எந்த மந்திரத்தை சொல்லும் போதும் முதலில் ஓம் என்று சொல்ல வேண்டும் அப்போதுதான் அம்மந்திரத்துக்கு உயிர் வருகிறது.ஓம் என்னும் ஓங் காரம் அ - உ - ம என்று விரியும்.இம்மூன்றும் முத்தொ ழில்களைக்குறிக்கும் என்று விளக்கப்பட்டது.அத்துடன் அ - என்பது சூரியனையும்,உ-என்பது சந்திரனையும், ம -என்பது அக்கினியையும் குறிக்கும். சூரியன்-சந்திரன் அக்கினி மூன்றும் ஒளிதருவன என்பது விளங்குகிறது அல்லவா.ஞானிகளும் மகான்களும் சாத்திரங்களும் இறைவன் ஒளிமயமாணவன் என்றுதானே சொல்கிற்து.

இல்லக விளக்கது இருள் கெடுப்பது சொல்லக விளக்கது சோதி உள்ளது என்கிறது தமிழ் வேதம்.மூலாதாரத்தில் மூண்டெழு கனலை என்கிறது விநாயகர் அகவல். அத்வைத ஜ்யோதி ஸ்வரூப ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி என் கிறது வடமொழி வேதம். இவ்விதமாக எல்லா வேதங் களும் சாத்திரங்களும் கூறுவது இறைவன் ஒளிமயமான வன் என்ற உண்மையைத்தான்.

" சுடரோ சிவபெருமான் சூடு பராசக்தி
திடமார் கணநாதன் செம்மை - படரொளியோ
கந்த வேளாகும் கருதுங்கால் சற்றேனும்
வந்ததோ பேத வழக்கு. "

இப்படி ஒரு வெண்பா விளக்கம் தருவதைப் பாருங்கள் ஒளிமயமானவன் இறைவன் அவன் நெருப்பு என்பதை தெரிவிக்கிறது இப்பாடல்.ஓம் என்னும் மகாமந்திரம் உயிர்களை பரமாத்மா சொரூபத்தில் லயிக்கச் செய்வ தால் அது பிரணவ மந்திரம் என்றும் சொல்லப்படும் சிவபெருமான் ரகசியமாக உமையவளுக்கு உப்தேசிக்கப் பட்டது பிரணவ மந்திரம்,அப்போது முருகப்பெருமான் தாய்மடியில் இருந்து கேட்டுக் கொண்டதாக வரலாறு. பிரமன் ப்ரணவத்துக்குப் பொருள் தெரியாமல் முருகப் பெருமானால் சிறை வைத்த சம்பவமும் இப்பிரணவ மந் திரக் கூற்றுதான்.இதனை இங்கு எல்லோரும் தெரிந்து கொள்ளட்டும் என்று விளக்கப் படுகிறது.ஓம் என்பது அ - உ- ம என்று விரியும் என கூறப்பட்டுள்ளது.இம் மூன்றும் தவிர நான்காவதாக ஒரு மாத்திரை அளவி லேயே அ என்னும் அர்த்த மாத்திரையும் உள்ளடங்கி உள்ளது.ஓம் என்பது பிரகாசமான வெளிச்சம்.எல்லா பிர காசங்களும் எல்லா பொருள்களும் கொண்ட சுயவடிவம் இந்த அ - உ - ம என்னும் மூன்று எழுத்துக்களும் முறையே மூன்று மூன்றாக கீழ் வருவதுபோல் எங்கும் எப்போதும் விளங்கித்தோன்றும்.எனவேதான் எந்த மந் திரத்தைச் சொல்லும் போதும் முதலில் ஓம் என்று சொல்லவேண்டும் என்று கூறப்படுகிறது.இதனை பீஜ மந்திரம் என்றும் சொல்வார்கள்.பீஜம் என்றால் வித்து

என்பது பொருள். இனி விளக்கம் பாருங்கள்

| அ | உ | ம |
|---|---|---|
| 1.சிருஷ்டி | திதி | சம்மாரம் |
| 2.தூலம் | சூட்சுமம் | காரணம் |
| 3.பெண் | ஆண் | அலி |
| 4.ருக்வேதம் | யஜுர்வேதம் | சாமவேதம் |
| 5.கார்கபத்யாக்கினி | தட்சிணாக்கினி | ஆகவனீயாக்கினி |
| 6.ஹரஸ்வம் | தீர்க்கம் | ப்லுதம் |
| ( இவைகள் இசை ஸ்வரங்களைக் குறிப்பது ) | | |
| 7.பாதம் | நாபி | சிரசு |
| 8.புத்தி | மனம் | அகங்காரம் |
| ( இவைகள் அந்தக்கரணங்கள் என்பது ) | | |
| 9.ரஜோகுணம் | சத்வகுணம் | தாமசகுணம் |
| 10.சிவப்பு நிறம் | கபில நிறம் | கருப்பு நிறம் |
| 11.பூரகம் | கும்பம் | ரேசகம் |
| ( இவைகள் பிராணாயாம வகைகள் ) | | |
| 12.நாதம் | பிந்து | கலை |
| 13.இச்சாசக்தி | கிரியாசக்தி | ஞானசக்தி |
| 14.பிராகமணி | வைஷ்ணவி | ரௌத்ரீ |
| 15.பிரம்மா | விஷ்ணு | ருத்திரன் |
| 16.கடந்தகாலம் | நிகழ்காலம் | எதிர்காலம் |
| 17.ஜீவாத்மா | பரமாத்மா | பரப்பிரம்மம் |
| 18.விராடபுருஷன் | இரண்யகர்ப்பன் | ஈஸ்வரன் |
| 19.அறிவு | ஆக்கம் | செயல் |
| 20.விழிப்புநிலை | உறக்கநிலை | சொப்பனநிலை |

இப்படி எல்லாமாகவும் எல்லாம் ஓம் என்னும் மகாமந் திரத்தின் அடக்கமாக இருப்பதால் இதுவே பிரணவ மந் திரம் எனப்பட்டது.அடுத்து வேதத்தின் வடிவம் இறை வன் என்று சொல்லப்பட்டது.இங்கு வடமொழி வேதங் கள் நான்கு என்பது எல்லாருக்கும் தெரியும்

1.ருக்வேதம் :- என்பது இறைவனை அழைப்பது என்பது பொருள்.உயிர்களுக்கு பிறவிபெற்றவர்களுக்கு அருள் செய்ய வேண்டி அழைக்கும் மந்திரமே ருக்வேத்ம்.

2.யஜுர்வேதம் :-வீட்டுக்கு வந்த விருந்தாளிக்கு ஆசனம் அளித்து இருக்கச் செய்வது.அதாவது நிலை பெறச்செய் வது.நம் குறைகளை அவர் கேட்கும்படி வைப்பது.
3.சாமவேதம் :-வந்த விருந்தாளியை ( இறைவனை ) உபசரிப்பது போல்.இறைவனை ஆராதித்தல்,பூஜித்தல் இசை கொண்டு பாடுதல் முதலியன இதில் அடங்கும்.
4.அதர்வண வேதம் :-வந்த விருந்தாளியை வழியனுப்பி வைப்பது போல்.அடுத்த முறையும் வரவேண்டும் அருள் செய்யவேண்டும் என்று சொல்லாமல் சொல்லி வழிய னுப்புதலே அதர்வண வேதத்தின் சாரம்.இப்படி நான்கு வேதங்களின் பரிணாம முறைகளை மட்டும் தெரிந்து கொண்டால் போதும்.வடமொழி வேதத்திலும் தமிழ் வேதத்திலும் நடுவே பீஜமந்திரம் என்று சொல்லப்படும் சிவாய என்னும் எழுத்து உள்ளது.இதற்குமுன் வந்த தலைமுறைகளால் எதையும் வெளிப்பட சொல்லாமல் போன காறணத்தினால் நமது சமயமும் சமுதாயமும் நலிவு பெற காரணங்களாகி விட்டது.அடியேன் இந்த நூலில் எல்லா ரக்சியங்களையும் திருவருள் எழுதத் தூண்ட எழுதி விட்டேன் எல்லாரும் உய்வு பெற வேண்டும் எனக்கருதி.

எனவே இறைவன் இல்லாத இடம் இல்லை.அவன் இப் படித்தான் இருப்பான் என்று வரைவு படுத்தியும் காட்ட முடியாது.இக்காலகட்டத்தில் எவ்வித முயர்ச்சியும்செய் யாது இறைவனைக் கட்டு என்றால் எப்படியாகும்.தோத் திரம் சாத்திரன் அவன்சிந்தனை இவைகள் வழி காட்டும் நிகழ்கின்ற காலங்கள் எல்லாம் நெஞ்சினிக்கும் காலங் களே.அதுவே இனி நிகழாத பிறவிக்கு வழி வகுக்கும்.

திருச்சிற்றம்பலம்

" இறைவன் எப்படி இருக்கின்றான் அவன்
உறைவிடம் உற்றுப் பார்த்திடில் ஓரிடமோ
உரைத்திடும் மந்திர ஒலிகேட்டு வருவான்
குறைதீர்த்து நிற்பான் கோமான் குறுகினோர்க்கே "

( ஆசிரியர் )

## அரசாங்கம்

ஆட்சி செய்யும் அதிகாரம் பெற்ற இயக்கத்துக்கு அரசாங்கம் என்று பேர்.இது இக்கால ஆட்சிக்கும் அக்கால ஆட்சிக்கும் எக்கால ஆட்சிக்கும் பொருந்தும்.ஆட்சிப்பொருப்பில் இருப்பவர்களை அரசன் அல்லது அமைச்சர் என்கிறோம்.ஆனால் உலகுக்கே அரசனாய் இருப்பவன் ஆண்டவன்.உலகுக்கு உயிரானாய் போற்றி என்று தமிழ் வேதம் கூறும்.எங்கும் எதிலும் எல்லா உயிரிலும் நீக்கமற நிறைந்திருப்பவர் இறைவன்.உள்ளும் புறமும் கடந்தும் இருக்கும் சச்சிதானந்தப் பரிபூரணன் ஆன காரணத்தினால் அவரை கடவுள் என்று கூறுகிறோம்.ஆக்கவும் அழிக்கவும் காக்கவும் அருளவும் மறைக்கவும் சர்வவல்லமை படைத்தது எதுவோ பிறப்பும் இறப்பும் மூப்பும் விருப்பு வெருப்பு இவைகளை எல்லாம் கடந்தது எதுவோ அதுவே இறைவன் என்பதை உணர வேண்டும்.

"அமைச்சு அரசு ஏற்ப ஐஞ்சு அவத்தைத்தே" என்று சிவ ஞானபோதம் கூறுகிறது.எல்லா பொறி புலன்களும் இறைவனது கட்டளைக்கேற்பத்தான் நடக்கிறது என்பது இதன் பொருள்.வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி தொகுத்தலும் துய்த்தலும் அரிது என்கிறது குறள்.அரசு எப்படி மக்களது நல்வாழ்வுக்குரிய சட்ட திட்டங்களை வகுக்கிறதோ அதுபோல் இறைவனும் உயிர்களை வழி நடத்துவதற்குரிய சட்டதிட்டங்களையும் வகுக்கிறான் என்பது விளக்கம்.எல்லாம் அவன் போட்ட திட்டப்படி தான் நாம் நமது வாழ்விலே சாஅதிக்க முடியும்.அவன் அதிகாரத்தை மீறி நாம் நடக்க இயலாது என்பதைப் புரிந்து கொள்ளவேண்டும்.ஒரு அரசனுக்குரிய இலக்கணங்கள் அடையாளங்கள் எப்படி இருக்க வேண்டும் என்று இக்கட்டுரையில் விளக்கப்படுகிறது.ஆம் உலகெங்கும் அவனது அரசாட்சி அவ்ன் நடத்துவதோ அருளாட்சி.அடுத்து கடவுள் நிலைகள் மூன்று விதம் என்று ஏற்கனவே விளக்கப்பட்டது.நேருக்கு நேர் பார்ப்பது,மந்திர

வடிவாக இருத்தல்,இரண்டும் கலந்த சிவலிங்கமாக் இருத்தல்.சிவலிங்க வடிவுக்குத்தான் சதாசிவம் என்று பேர்.இச்சிவலிங்க வடிவு கூட சிவபெருமான் காட்டியது தான்.அதுதான் சிவராத்திரி தினம் லிங்கோத்பவ காலம் என்று பேசப்படுகிறது.ஆதியும் அந்தமும் இல்லாதவர் இறைவன்.சிவஆகமங்களால் பேசப்படும் இறைவனது மகாசங்காரம் அல்லது பேரூழிக்காலம் என்பதை சிவ ஞான போதம் முதல் சூத்திரம் உறுதிப்படுத்துகின்றது. "தோற்றிய திதியே ஒடுங்கி மலத்து உள்ளதாம் அந்தம் ஆதி என்மனார் புலவர்."என்று கூறுவதின் மூலம் உணர முடிகிறது.அதுமட்டுமல்ல நமது செயல்கள் எல்லாம் சிவன் செயல்கள்தான்.நம் இச்சைப்படி எதுவும் செய்ய முடியாது என்பது உண்மை.

" நம்செயல் அற்று இந்த நாம் அற்ற பின் நாதன்
தன்செயல் தானே என்று உந்தீபற
தன்னையே தந்தான் என்று உந்தீபற " ( திருவுந்தியார் )

இதன் மூலம் நம் செயல் எனப்படுவது எதுவுமில்லை. எல்லாம் அவன் செயல் என்று காண்பதைத்தான் தோன்றிமறைந்துவிட்ட எத்தனையோ சித்தர்களும் மகான்களும் உறைத்துச்சென்றுள்ளார்கள்.அங்கிங் கெனாதபடிஎங்கும் ஒளிமயமாய் நீக்கமற ஒரேதன்மை உடையவனாய் பரந்து விரிந்து நிற்பவனே இறைவன். இருந்த இடத்தில் இருந்தே அவன் ஒருவனை மட்டும் நினைத்திருக்கும் உணர்வு ஒன்றி நின்றால் அதுவே அவன் இருக்கும் இடம் ஆகும்.நினைப்பவர் மனம் கோவிலாய் கொள்பவன் என்பது அப்பர் வாக்கு.இதனை உறுதிப்படுத்துகின்றது கீழ்வரும் திருவுந்தியார் செய்யுள்.

" ஓட்டு அற்று நின்ற உணர்வு பதி முட்டித்
தேட்டு அற்ற இடம் சிவம் உந்தீபற
தேடும் இடம் அது அன்று உந்தீபற " ( திருவுந்தியார் )

இன்னும் விளங்கிக் கொள்ள வேண்டுமானால் இறைவன் அம்மை அப்பராக, சிவம் சக்தியாக, மாதொர்ருபாகனாக அதாவது அர்த்தநாரீஸ்வரராக விளங்குவார்.எல்லா உல கங்கட்கும் அவரே தலைவர்.எல்லா உயிர்களுக்கும் அவர் தான் தந்தை தாய்.ஆன்மாக்களாகிய நமக்கு உதவும்

விதத்தில் அவர் அருள் என்னும் பெயர் கொண்டு விளங் குகிறார்.இதனை உணர்த்தும் இந்த அற்புதச்செயுளைப் பாருங்கள்.

" அம்மை அப்பரே உலகுக்கு அம்மை அப்பர் என்றறிக
அம்மை அப்பர் அப்பரிசே வந்து அளிப்பர் - அம்மையப்பர்
எல்லா உலகுக்கும் அப்புறத்தார் இப்புறத்தும்
அல்லார் போல் நிற்பார் அவர். " ( திருக்களிற்றுப்படியார் )

என்றும் உள்ள ஒரு பொருள் தோன்றும்.இல்லாத ஒரு பொருள் எக்காரணத்தாலும் தோன்றாது.இறைவன் என் றும் இருப்பவர்.ஆகவேதான் அவர் எப்போதும் எந்த நிலையிலும் தோன்றக் கூடியவர் என்பதில் சந்தேகமே இல்லை.இக்கருத்தினை சத்காரியவாதம் என்று சிவஞான சித்தியார் என்னும் நூல் செப்புகிறது.இத்தகு இறைவனை நிமலன் என்று நூல்களால் பேசப்படுகிறது.நிமலன் என் றால் மலம் பற்ற முடியாதவன் மலவாசனையில்லாதவன் என்பது பொருள்.உயிர்களுக்கு வருகின்ற மல மாசுகளை நீக்குபவரேயன்றி அவர் மல மாசுகளுக்கு அகப்படமாட் டார் என்பதுவே தெளிவு. அப்படி அவரும் மல மாசுக ளுக்கு ஆட்பட்டால் அப்புறம் அவருக்கும் நமக்கும் என்ன வித்தியாசம் என்பதை அலசவேண்டி வரும்.

" பல்கலை ஆகமம் வேதம் யாவையினும் கருத்துப்
பதிபசு பாசம் தெரித்தல் பதி பரமே அதுதான்
நிலவும் அரு உரு இன்றிக் குணம் குறிகள் இன்றி
நின்மலமாய் ஏகமாய் நித்தம் ஆகி " ( சிவப்பிரகாசம்)

ஆகமம் வேதம் எல்லாம் அவரே.குணம் குறி எல்லாம் அவரே.அவர்தான் நின்மலன் என்று சிவப்பிரகாசம் சொல் வதையே மணிவாசகரும் கூறுகிறார்." நேயத்தே நின்ற நிமலன் அடிபோற்றி மாயப் பிறப்பறுக்கும் மன்னன் அடி போற்றி "பாருங்கள் பிறப்பு இல்லாதவரால்தான் நமது பிறவி என்னும் தளைகளை அறுத்தெரிய முடியும் என் பது விளங்கும்.அகரம் ஆகிய உயிர் எழுத்தின் ஒலி வேறு எழுத்தும் ஓசையும் இல்லை.மற்றைய எழுத்துக் களுக்கு முதலாவதாகவும் அவற்றுடன் கலந்து இருப்பது போலவும் இருப்பவன் இறைவன்.அவனே தனக்கோர் உவமை இல்லாத தனித்தலைவன் ஆவார்.அதுபோல்

இதுபோல் என்று கூறப்படுமானால் அவர் கடவுள் ஆக மாட்டார்.நாம் வாயைத்திறந்தாலே முதலில் வருவது அகரம்.அதுவெ உயிர் எழுத்து என்று பேர்பெற்றது.நமது உடலுக்குள் உயிர்.உயிருக்குள் கடவுள்.

" அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில் இறை நிற்கும் நிறைந்து " ( திருவருட் பயன் )

டயருக்குள் டியூப் டியூப்புக்குள் காற்று.இதுபோல் உடம்புக்குள் உயிர் உயிருக்குள் கடவுள்.அவன் முதல் எழுத்து போல் எல்லாவற்றுக்கும் முதல்வனாக இருப்பவன்தான் இறைவன்.இதனையே " அகர முதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு "என்னும் திருக்குறள் உறுதிப்படுத்தும்.

' பூமேவும் உந்திப் புயல் வண்ணன் பொன்பதுமம்
தார்மேவும் மார்பன் சதுர் முகத்தோன் - தாம்மேவிப்

பன்றியும் அன்னமுமாய் பார் இடந்தும் வான்பறந்தும்
என்றும் அறியா இயல்பினான் - அன்றியும்

இந்திரனும் வானோரும் ஏனோரும் எப்புவியும்
மந்திர வெற்பும் மறிகடலும் - மந்திரமும்

வேதமும் வேத முடிவின் வினை விந்துவுடன்
நாதமும் காணா நலத்தினான் - ஓத

அரியான் எளியான் அளவு இறந்து நின்ற
பெரியான் சிறியான் பெண்பாகன் - தெரியா

அருவான் உருவான் அருவுருவும் அல்லான்
மரியான் மரிப்பார் மனத்தான் - பரிவான

மெய்யர்க்கு மெய்யன் வினைக்கு வினை ஆயினான்
பொய்யர்க்குப் பொய் ஆய பொய்யினான் - ஐயன்

படநாகம் பூண்ட பரமன் பசுவின்
இடமாய் நிறைந்த இறைவன் " ( நெஞ்சுவிடு தூது )

நெஞ்சுவிடுதூது என்னும் இச்செய்யுள் நிகர்க்கும் ஒப்புயர்

வான கருத்துக்கள் நம்மை நெகிழச்செய்வதோடு உண்மையிலேயே நம் நெஞ்சங்களையெல்லாம் அவ்விறைவனிடமே சேர்ப்பனவாக இருத்தலையும் காண்பீர்களாக. இங்கு நெஞ்சம் உமக்கே இடமாகவைத்தேன் நினையாது ஒருபோதும் இருந்தறியேன் என்று கூறும் அப்பர் வாக்கையும் ஒப்பு நோக்க வேண்டியுள்ளது.

யப்போன்ற உந்தியை ( தொப்பூழ் ) உடைய திருமாலும் நான்கு முகம் கொண்ட பிரம்மாவும் பன்றிவடிவாகவும் அன்னப்பட்சிவடிவாகவும் சிவபெருமானது பாதத்தையும் முடியையும் பார்க்கப்போய் முடியாமல் திரும்பிவிட்ட வரலாறு இங்கு பேசப்படுகிறது.இவர்களால் அறியப்படமுடியாதவன் சிவபெருமான்.அன்றியும் தேவேந்திரன் முதலான தேவர்களாலும் வேறு எந்த லோகத்தில் இருப்பவர்களாலும் மந்திர மாயையில் இருப்பவர்களாலும் சப்த கோடி மந்திரங்களை வடிவமாக உடையவர்களாலும் நான்கு வேதங்களாலும் எண்ணிறந்த ஆன்மகோடிகளும் அறியமுடியாத பெருந்தன்மையினை உடையவன் சிவ பெருமான்.வாக்குமனக்காயங்களுக்கு எட்டாதவன் அன்பர்களுக்கு எளியவன் தர்க்க வாதங்களால் அளந்து பார்க்கமுடியாத பெரியவன்.அணுவுக்கு அணு ஆனவன்.தன் அடியார்கள் கண்டு மகிழும்படி தன்னருளாற்றலை இடப்பாகத்தில் கொண்டு விளங்குபவன்.அபரவிந்து அபர நாதம் பரவிந்து பரநாதம் என்னும் நாதவடிவான திருமேனியும் கொண்டு விளங்குபவன்.ஐந்து தொழில் செய்பவன் இதுவல்லாது பேரொளியாய் விளங்கும் சொரூபத்தை உடையவன் சிவபெருமான்.

சிவபெருமான் நித்தமுத்த சுத்தன்.பிறப்பு இறப்பு இல்லாதவன்.ஆன்மாக்களின் உயிருக்கு உயிராய் இருப்பவன். தன்னை நினைப்பவர் உள்ளத்தில் இருந்து நீங்காதவன். அன்பர்களுக்கு அன்பனாயும்,பொய்யர்களுக்கு பொய்யனாயும் மெய்யர்களுக்கு மெய்யனாயும் சிவநெறியில் நிற்பவர்களுக்கு சுவதந்தரத்தனாய் இருப்பவன் அனைத்து

உயிர்கட்கும் தந்தையாய் இருப்பவன்.தாருகா வனத்து முனிவர்கள் ஏவிய பாம்பை ஆபரணமாக அணிந்தவன் அனைவரிலும் வலு மிக்கவனாக இருப்பவன் ஆன்மாக்கள் எண்ணிறந்து இருந்தாலும் தான் ஒருவனேயானாலும் அந்த உயிர்களில் தங்கி இருக்கும் தலைவனாக இருப்பவன் சிவபெருமான். அவனே கடவுள் என்று மேலே கண்ட செய்யுள் விளக்குகிறது.அப்பர் பெருமானும் இறைவனை இவ்வண்ணத்தான் இந்நிறத்தான் இப்படித்தான் இருப்பான் என்று எழுதியும் காட்டமுடியாது என்று கூறுகிறார்.ஆகவேதான் உண்மையில் இறைவன் உருவம் பருமன் எடை உயரம் நிறம் சாயம் தோற்றம் என்றபடியெல்லாம் எவராலும் காட்ட முடியாது..ஒரு அரசனுக்கு பத்துவிதமான அம்சங்கள் அல்லத்கு உறுப்புகள் இருக்கவேன்டும்..இதற்க்கு தசாங்கம் என்று பேர். உலகத்துக்கே எல்லாஉயிர்களுக்கும் அரசன் ஆன சிவபெருமானுடைய பத்து அம்சங்கள் நீங்கள் அவசியம் காணவேண்டியது.இவற்றை விளக்குகிறார் அருள்திரு உமாபதிசிவம் அவர்கள்.அன்பர்களே இக்கட்டுறையானது இறை இயல்புகளை விளக்குகிறது என்பதை நீங்கள் மறந்துவிடக்கூடாது.இயல்பு என்றாலும் இலக்கணம் என்றாலும் ஒன்றே.

ஏற்கனவே இறைவனுக்கு எட்டு குணங்கள் உண்டு என்பதைவிவரித்துள்ளோம்.இதில் ஒன்று குறைந்தாலும் அவர் இறைவன் ஆகமாட்டார் 1.தன்வயத்தன் ஆதல் 2.தூய உடம்பினன் ஆதல் 3,முற்றும் உணர்தல் 4.பேரருள் உடைமை 5.இயல்பாகவே பாசங்களில் நீங்குதல் 6.இயற்கை உணர்வினன் ஆதல் 7.முடிவில் ஆற்றலுடைமை 8.வரம்பில் இன்பமுடைமை என்பன.இந்த குணங்களைக் கொண்டதினால் இறைவன் உயிர்களுக்கு ஏதாவதுசெய்து ஆன்மாக்களை மேம்படுத்த வேண்டும் என்னும் கருணை ஒன்றையே குறிக்கோளாக கொண்டிருப்பவர் பரமன் ஆகும்.அந்த அற்புதமான் உறவுக்குப் பெயர்தான் " அத்துவிதம் " என்பது.இதனை கீழ்வரும் திருப்புகழும்

8.0 சோமசுந்தரப் பெருமாள்
உறுதிப்படுத்துகின்றது.

" சுருதிமுடி மோனஞ்சொல் சிற்பரம ஞானசிவ
சமய வடிவாய் வந்த அத்துவித மானபர
சுடரொளியதாய் நின்ற நிட்கள சொரூபமுத-லொருவாழ்வே
அருணகிரியார் வாக்கு என்றால் உச்சநீதிமன்ற தீர்ப்புப் போல்.இப்புவியை காத்துவரும் ராஜாவாகிய சிவபெரு மானது பத்து அரசுச்சின்னங்களையும் இங்கு விவரிக்கப் படுகிறது.மலை,நதி,நாடு,ஊர்,மாலை,குதிரை,யானை, கொடி,முரசு,ஆணை என்னும் பத்து உறுப்புகழாகும்
மலை :- இறைவன் குணத்தையே குன்றமாக உடைய வன்.அதனால்தான் அவனுக்கு குணக்குன்று என்றுபேர். இது இறைவனுடைய எட்டு குணங்களுல் ஒன்றான பேரருள் உடைமை என்கின்ற பண்பைக்கொண்டு உயிர் களுடன் இறைவன் ஒன்றாயும்,வேறாயும்,உடனாயும் நின்று உதவி உயிர்களது அறிவு,இச்சை,செயல்களை விளங்கசெய்யும் குணக்குன்றை உடையவன்.

நதி ( ஆறு ) :- இந்த ஆற்றின் பிறப்பிடம் சிவபுண்ணியம் என்னும் செழுமையான மலையாகும்.மலையில் இருந்து பிறந்த நதி கீழ்நோக்கிப் பாய்ந்து உயிர்களுக்கு நன்மை செய்கிறது.இந்நதியின் பாய்ச்சலால் உயிர்களுக்கு ஏற் படும் ஐயம்,களவு,அச்சம்,காமம்,கொலை,சினம் ஆகிய வற்றை அழிக்கிறது.அளவற்ற வினைகளை வீழ்த்துகிறது அம்பலவாணனின் நடனத்தைக் காண்பவரின் உள்ளம் மகிழும்படி <u>தோம்</u> என்னும் ஓங்கார ஒலியை எழுப்பி வேதங்களின் தெளிவு ஆகிய உயிர்க்கு அருளைத்தரும் ஆகமங்களின் வழியே இந்த ஆறு ஓடுகிறது.உயிர் களிடம் பரவியுள்ள ஆணவம்,கன்மம்,மாயை என்று மண் டிக்கிடக்கும் புதர்களை வேறுடன் சாய்க்கிறது.ஞானக் கல்வியாகிய இந்த ஆறு உலகக்கல்வியின் கரையைக் கடந்து ஓடுகிறது.பிருதிவி,அப்பு,தேயு,வாயு,ஆகாயம் என் னும் ஐந்து பூதங்களின் சட இயல்புகளின் விரிவைப் போக்குகிறது.மெய்,வாய்,கண்,மூக்கு,செவிகளின் வாயிலாக வருகின்ற பேராசை என்னும் நோயை அகற்றுகின்றது. மாந்தர்களது கை,கால்,வாய்,கருவாய்,எருவாய் என்னும்

ஐந்து செயர்கருவிகளின் தொழிற்பாடுகளை அடக்குகிறது எளிதில் நீக்க முடியாத சுற்றம் என்னும் தொடர்புகளை பெரும்வெள்ளமாகப் பாய்ந்து ஓடி நீக்குகிறது.மனம் புத்தி அகங்காரம் சித்தம் என்னும் அகக்கருவிகளின் ஆண வத்தை அடியோடு விரட்டுகிறது.அத்துடன் சாத்துவிகம் ராஜசம் தாமதம் என்னும் முக்குணங்களின் மோதலைத் தடுக்கிறது.மனித உடலில் உள்ள மூன்றரை கோடி உரோமங்கள் சிலிர்த்து எழும்படி விதிர் விதிர்ப்பு எய்தி ஆனந்தக்கண்ணீர் ததும்பும்படி உயிர் ஐம்புல நுகர்வில் மயங்கி நிற்க்கும் மயக்கத்தைப் போக்குகிறது.வினை களுக்கு உட்படும் உயிர்களது வினை விளைவு ஏற்படுத் தாதபடி பற்றின்மை என்னும் வயல் புகுந்து நறுமணம் கமழும் மார்புகளையுடைய பெண்களது மோகம் என் னும் மாயவலையில் சிக்காதபடி சிற்றின்பம் என்னும் சேற்றை நாடிச்செல்லாதவாறு உயிர்களுக்கு பாதுகாப்பு அரணாக அமைகிறது.அக்கினி மண்டலம்,சூரிய மண் டலம்,சந்திரமண்டலம் என்னும் மூன்று மண்டலங்களை யும் நெறிப்படுத்தி மூலாதாரம் சுவாதிட்டானம் மணிபூர கம் அனாகதம் விசுத்தி ஆக்ஞை என்னும் ஆறு ஆதா ரங்களிலும் பரந்து செல்கிறது.ஒன்றோடு ஒன்று மாறு பட்டு எதிர் புதிர்களாகச் செயல்படும் பிராணன்,அபானன் உதானன் வியானன் சமானன் நாகன்கூர்மன் இருகரன் தேவதத்தன் தனஞ்சயன் என்னும் பத்து வாயுக்களும் மேற்பட விளங்கும் நிலம் நீர் நெருப்பு காற்று ஆகாயம் எனும் ஐம்பெரும் பூதங்களும் தங்களுக்குள் மாறுபடா மல் அண்டத்தும் பிண்டத்தும் ஒழுங்காக நிற்க்குமாறு அவற்றின் வழியாக இந்த ஆறு ஓடுகிறது.

நிவர்த்திக்கலையின் அதிபர் ஆகிய பிரம்மாவின் படைப்பு தொழிலையும்,பிரதிட்டா கலையின் மூலம் காத்தல் தொழில் புரியும் விட்டுணுவையும்,வித்தியாகலையிலிருந்து சங்காரம் என்னும் தொழில் செய்யும் உருத்திரனையும் சாந்திகலையில் இருந்து மறைத்தல் தொழில் புரியும் மகேஸ்வரனையும், சாந்தி அதீத கலையில் இருந்து அரு

ளல் தொழில் செய்யும் ஐந்து முகங்களையுடைய சதாசிவ மூர்த்தியையும் இவர்களுறையும் கலைகளுக்கு காரணமா கிய சுத்தமாயையின் அதோமுகம் ( கீழ்நோக்கியது ) ஆகிய விந்துவான பராசக்தியையும் அந்த சுத்தமாயையில் ஊர்த்துவ முகமாய் ( மேல் நோக்கியது ) ஓசைவடிவா கிய அபரநாதத்துக்கும் மேல்சென்று தூய வெட்டவெளி யில் ( 36 தத்துவங்களுக்கும் அப்பார்பட்டு )பரவிந்து பர நாதம் ஆகிய இரண்டையும் தனக்குள் அடக்கி அதற்க்கு மேல் இட எல்லையைக் கடந்து இந்த ஆறு ஓடுகிறது.. எல்லா பொருள்களையும் தனக்குள் அடக்கி எல்லா அறி வும் தன்னிடமே பெற்ற பேரின்பப் பெருவீட்டினை நல்கி உடலை விட்டுப்பிரியாத உயிர்போல எல்லா உயிர்களை யும் தன்னுடம்பாகப்பெற்று உள் புகுந்து உயிர்களின் உடம்புக்குள்ள ஐந்து அவத்தைகளையும் கடந்துஅப்பாற் பட்டு மேலாக விளங்கும் பேரொளிப்பிளம்பினிடத்தே அடைக்கலம் எனப்போய் அடைந்து முடிவில்லாத தன் அருளால் வளர்ந்து ஓங்கும் தன்மை உடையது இந்த ஆறு..இந்த ஆறு மலைமேலிருந்து இறங்கி வந்து உயிர் கள் பொருட்டு இத்தனைப் பேருதவிகளைச் செய்து வரு வதைப் படிப்படியாக உமாபதிசிவம் தெளிவுபடுத்துகிறார்.
நாடு :- உயிர்களுக்கு பேரின்பப் பயனை விளைவிக்கும் கருவிகள் நான்கு வேதங்களும் இருபத்தெட்டு ஆகமங் களும் ஆகும்.அவற்றைக் கற்றுத்தெளிந்த அளவில் உயிர் கள் பேரின்பப் பயனைப்பெற்றுவிடமுடியாது..அவற்றில் விதிக்கப்பட்டுள்ள வழிமுறைகளில் நின்று ஒழுகினாலே மட்டும் உயிர்கள் பேரின்பத்தைப் பெறமுடியும்.அத்தகை யான பேரின்ப வீடே இறைவனது நாடு ஆகும்.இங்கு மணிவாசகர் சொல்லும் ஆகமம் ஆகிநின்றண்ணிப்பான் தாழ் வாழ்க என்னும் சொற்றொடரை ஒப்பு நோக்க வேண்டியுள்ளது.ஆம் இறைவன் ஆகம வடிவுடையவன். மனிதர்களது உருவ வடிவுகளைப்போலவும் இறை மூர்த் திகளது வடிவுகளைப்போலவும் மேலான பரசிவத்தின் • வடிவு எத்தன்மையது என்பதையும் நீங்கள் தெரிந்து

கொள்ளவேண்டும்.இதனை பாதாதி கேசம் அதாவது திருவடியில் தொடங்கி திருமுடிவரை வர்ணிக்கப்படும்
1.காமிகாகமம் - சிவபெருமானின் இரு திருவடிகள்
2.யோகசம் - இரண்டு கணைக் கால்கள்
3.சிந்தியம் - திருவடிகளின் விரல்கள்
4.காரணாகமம் - தண்டைக்கால்கள்
5.அசிதம் -. முழந்தாழ்
6.தீப்தம் - தொடைகள்
7.சூட்சுமம் - கய்யம்
8.சகஸ்ரமம் - இடுப்பு
9.அம்சுமான் - முதுகு
10.சுப்ரபேதம் - கொப்பூழ்
11.விசயம் - வயிறு
12.நிஸ்வாசம் - மூக்கு
13.சுவாயம்புவம் - தனங்கள்
14.அனலம் - கண்கள்
15.வீரம் - கழுத்து
16.ரௌராகமம் - செவிகள்
17.மகுடாகமம் - திருமுடி
18.விமலம் - கைகள்
19.சந்திரஞானம் - மார்பு
20.பிம்பம் - திருமுகம்
21.புரோத் கீதம் - நாக்கு
22.லளிதம் - கன்னம்
23.சித்தம் - நெற்றி
24.சந்தானம் - குண்டலங்கள்
25.சர்வோக்தம் - பூணூல்
26.பாரமேசுரம் - முத்துமாலை
27.கிரணம் - திருவாபரணம்
28.வாதுளாகமம் - பரிவட்டம்
இதர உபாகமங்கள் திருமேனிப்பூச்சு பரிமள திரவியங் கள் மலர்கள் முதலியனவாகவும் சிவபெருமானுக்கு அமைந்துள்ளன.

ஊர் :- உயிர்களுக்கு உலக அனுபவங்களைத்தர வல்லன அறுபத்து நான்கு கலைகள் ஆகும்..இந்த 64 கலைகளை யும் கற்றுணர்ந்தாலும் அவற்றின் இயல்பும் பயனும் வேறு வேறாய் இருப்பதால் எந்தக்கலையினைப்பற்றி எதன்படி நடந்தாலும் இதுதான் முடிவான நெறி என்று தெளிவு பெற முடியாது.எல்லாக் கலைகளுமே நிலையற்ற தன்மையினை உடையன்.என்வே உயிர்க்கு அவை பற் றிய தெளிவான நிலை ஏற்படாது.இவ்வுண்மையையே கருத்தழிந்து என்கிறார் உமாபதிசிவம்.இக்கலைகளில் எல்லாம் மனிதனைப் பெரிதும் அலைக்கழிக்கும் கலை காமக்கலையே ஆகும்..இந்தக்காமக்கலையில் பயின்ற மனிதன் ஒன்றுவிட்டு ஒன்று பற்றிய நிலையில்லாத நிலையினைப் பெருகிறான்.அதனால் அவனுக்கு எதிலும்

ஒருமைத்தெளிவு ( CONCENTRATION ) ஏற்படுவது இல்லை.அதன் பயனாக தன்னுடைய பெருமை புகழ் செல்வம் மதிப்பு ஆகிய அனைத்தையும் இழக்கிறான். எனவே ஒருமையுணர்வைத் த்ரும் திருவருளையே பற்றி நிற்கப்பயிலுதல் வேண்டும். ( STEADILY ) அத்தகைய திரு வருளைத்தேடிப் பெருவதன்று,அது நாடிப்பெருவதாகும். திருவருள் அங்கு இங்கு எனாதபடி எங்கும் நிறைந்திருக் கிறது.நாடுதல் என்பது விரும்புதலைக் குறிக்கும். ( ATTR ACTION OF LIKE ON THE GRACE OF LORD ) திருவருளை உயிர்கள் விரும்பி நிற்றல் ஒன்றினாலேயே அதனைப் பெறமுடியும்.அத்தகைய உயிர்கள் உள்ள இடமே இறை வனுடைய ஊர் ஆகும். ( RESIDENT PLACE OF LORD )
மாலை ( தார் ):- திருவருளில் கொண்ட பற்று காரணமா கச் சிந்தையில் மயக்கம் ஏதும் இன்றி உயிர்களுக்கு தெளிவு ஏற்பட்டுக் கண்களிலிருந்து கண்ணீர் பெருகு கிறது.இக்கண்ணீர் மலையின் உச்சியிலிருந்து இடை விடாமல் விழும் ஆற்று நீரைப்போன்றது.அந்நிலையில் உள்ளத்தில் ஞானம் விளங்குகிறது.அதன் பயனாக மயிர் கால்தோறும் இன்ப உணர்வு பெருகுகிறது.இத்தகைய அடியவர்கள் மீண்டும் உலகியல் இன்பத்தில் பற்று வைக்கமாட்டார்கள்.திருவருளையே நினைந்து உள்ளம் உருகி நிற்பர்.எண்ணற்ற உலகப்பற்று கொண்டு உழலும் உயிர்களின் போக்கைத் தடுத்து நிறுத்தி அவ்வுயிர்களின் மனத்தைத் தன் வயப்படுத்தும் அருளையே இறைவன் மாலையாக அணிந்துள்ளான்.அந்த மாலையணிந்த திரு மேனியையே தன் உடலாகக் கொண்டுள்ளான்.
குதிரை :-இங்கு தோலாத வான்-அதாவது இருளுக்குத் தோல்வி அடையாத வானம் என்பது பொருள்.சூரியனும் சந்திரனும் எப்போதும் வானில் விளங்குகின்றதால் விண் வெளியில் இருள் இல்லை எனப்பட்டது.அத்தகு ஒளிமய மான வான்வெளியையும் 224 புவனங்களையும் 8 வகை யான மலைக்கூட்டத்தையும் 7 கடல்களையும் கீழ்உள்ள 7 பாதாள உலகங்களையும் உயிரினங்களுக்குள்ள உடல் களையும் அவ்வுடல்களுக்கு மூலமான பஞ்ச பூதங்கள்

உயிர்களின் அழுத்தி அறியும் இயல்புகளுக்கு ஏற்ற அள வுகளையும் ஒன்றி ~ணிற்க்கும் பேரறிவாயும் அவற்றின் வேராகியும் தன்முனைப்பு கொண்டு எண்ணுபவர்களின் எண்ணத்திற்க்கு அகப்படாமலும் நிற்க்கும் தன்மை உடையவன் இறைவன்.(BEYAND THE SELF ACTIVATION) இவ்வாறு எல்லாவற்றிலும் தோய்ந்தும் தோயாமையும் ஆகிய விசித்திரமான ( WONDERFULL DETERMINATION ) தன் பேராற்றலையே இறைவன் குதிரையாக உடையவன் யானை :-அருள் நூல்களில் பேசப்படுகின்ற கீழ்உலகம் 7 மேலுலகம் 7 நடு உலகமாகிய அனைத்து உலகங்களி லும் இடையீடு இன்றி நிறைந்தும் அவற்றிக்கு ஆதாரம் ஆகியும் அளவிறந்த அருவாய் இருக்கும் சுத்தமாயா உல கம் முழுவதும் நிறைந்தும் இருக்கிறான் இறைவன்.ஆயி னும் அவனது அருளாக விளங்குகின்ற யானை சுட்டிச் சொல்லும் அளவில் கண்ணினால் காணமுடியாததாகும். ஆனாலும் அருளால் உணர்வார்க்கு எளிதாயும் நான்கு மறைகளையும் ஆறு அங்கங்களையும் தனக்கு வடிவாக வும் உடையது.( EASY GRAVITY OF GRACE ) அவற்றை அறிவதற்க்கு உரிய உயிர்களோடு ( ELIGIBLE SOLES TO KNOW ) உயிராய்க் கலந்து நின்று அவற்றின் உணர்வுக ளோடு உணர்வாய் உடனாய் நின்று பெரிய கொடிய துயர்விளைவிக்கும் பாசத்தை முற்றிலும் தொலைத்து நிற்கிறது.வெப்பம் மிகுந்த பிறவிப்பெருங்கடலை துகள் எழுமாறு கலக்கி வற்றச் செய்து ( புழ்தி ) உயிர்களை அலைக்கழிக்கும் காமம்,சினம்,பொருட்பற்று,பிடிவாதம் செருக்கு ஆகியனவற்றை வெகுண்டு தாக்கிப் பிறப்பு இறப்புக்கு ஏதுவாகிய இச்செயல்களை இந்த யானை மிதித்து அடக்குகிறது.தனித்தனி பெயர்களை வைத்துக் கொண்டு உண்மை நெறி அறியாமல் பிதற்றுகின்ற பல் வேறு சமயவாதிகளின் வெற்றி முழக்கங்களின் கட்டுக் கோப்பைச் சின்னா பின்னப்படுத்தி அவர்கள் பிறசமயி களை அச்சுறுத்தியும் உயிர்க்கொலை செய்தும் வருகின்ற தீக்குணங்களை அழிக்கின்றது.நாள்தோறும் செய்துவரும் வினைகளின் பயனாகப் பெருகிவரும் புத்திரபாசம்

முதலாகிய உலகியல் தொடர்பின் வழி உயிர்க்குள்ள பற்றினைச் அறுத்தும் மனைவி மக்கள் பந்தத்தை வேரற பறித்தும் உயிர்கள் இப்பிறப்பிலேயே வீடுபேறு அடைதற் குறிய தகுதியைப் பெறவேண்டும் என்னும் கழிவிரக்கம் கொள்கிறது அருளே வடிவாகிய இந்த யானை.அருட் சக்தியாக விளங்கும் உமை,திரு,வாணி ஆகிய மூன்று சக்திகளை மும்மதமாகக் கொண்டுள்ள இந்த யானை உயிர்களின் உடம்பாகப்பொருந்தி உள்ள தத்துவக்காட்டி னுள் புகுந்து ஆனந்தம் ஆகிய தேனைப்பருகி மகிழ்ந்து அதனால் மிகவும் சல்லாபம் அடைந்து வீறிட்டு மிகுந்த உன்னதமான நான்மறைகளைத் தனக்கு கொம்புகளாகப் பொருந்தி விளங்குகிறது.இந்த அருள் யானையை உடை யவன் சிவபெருமான்

கொடி :-.அறுவகைச் சமயத்தையும் கடந்து தன்நிகர் இல்லாத் தலைமையால் உயிர்க்கு உற்ற துன்பங்களை நீக்குவதையே தமக்கு உரிய கொடியாக உடையவன் சிவபெருமான்.துவசம் என்றால் கொடி என்பது பொருள் வாமம்,வைரவம்,மகாவிரதம்,காளாமுகம்,பாசுபதம்,சைவம் என்பன.இவைகள் அகச்சமயங்கள் என்று பேசப்படுகிறது. இவைகள் தவிற சைவம்,வைணவம்,சாக்தம்,சௌரம், கௌமாரம்,காணாபத்தியம் என்றும் ஆறு உண்டு.இவை கள் புறச்சமயங்கள் என்று கூறுவார்கள்.இந்த இடத்தில் இன்னொன்றும் காணவேண்டியுள்லது.இது உலக வழக் கிலே மக்களிடம் நின்று நிலவி வருவது..கொடி மற்றும் வாகனமாக சிவபெருமானுக்கு ரிஷபம்(காளை) உள்ளது எல்லாரும் அறிந்ததே.இந்த ரிஷபம் என்பது தர்மமாகும். இறைவனை தர்மம் தவிற வேறு எதுவும் தாங்கமுடியாது தர்மம் ஒன்றே தாங்கவல்லது என்பது உண்மை..எனவே ரிஷபக் கொடியையும் ஆலயத்தில் விழாக்காலங்களில் கொடியேற்ற வைபவத்தின் மூலம் உனரலாம்.தர்மமே தலையாய கோட்பாடுடன் விளங்கும் சிவபெருமானுக்கு ரிசபக் கொடியும் வாகனமும் ஏற்புடைத்து என்பதை யாவரும் அறிந்துகொள்ள வேண்டியதே.இதே ரிசபமே 12 ராசிகளில் ஒன்றாய் விளங்கும் பேறு பெற்றுள்ளது

என்பதையும் காணவேண்டியுள்ளது.
முரசு :-பிராணாயாமம் என்னும் புலனடக்கத்தால் தம்மை மறந்து ஒளிவடிவாய் இருக்கும் இறைவனை இதயத்தின் உள்ளே எழுந்தருளச் செய்வார்கள் யோகிகள் அவர்களது இம்மைத் துன்பமும் மறுமைத்துயரமும் அகற்றி உள் இருக்கும் பிராணவாயுவை வெளியே விடாமல் நிறுத்தி வெளியில் இருக்கும் காற்றை உள்ளே விடாமல் யோகநிலையில் அமர்ந்து சுழுமுனை(நடு நாடி)வாயிலாகச்செல்லும் மூலாதார நெருப்பு நெற்றியில் உள்ளமதி மண்டலத்தைத் தாக்கி அமுதம் பொழிவதால் அந்த அமுதத்தை நுகர்கிறார்கள்.எனவே எப்போதும் அசைவற்ற நிலையில் இறையருளோடு ஒன்றுவிட்டு இருக்கும் இனிய யோகியரின் இதயத்தே நின்று முழங்கும்படியான நெடிய முரசினை உடையவன் சிவபெருமான்.
ஆணை :-மேற்கண்ட ஒண்பது உறுப்புகளை மட்டும் அல்லாமல் அயனால் படைக்கப்பட்டு மாலால் காக்கப்படும் பிரகிருதி மாயையில் உள்ள அனைத்து உலகங்களிலும் பொருந்தியுள்ள அப்பிரகிருதி மாயா உலகத்திற்க்கு அப்பால் உள்ள அசுத்த மாயையில் உள்ள உலகங்களிலும் அசுத்தமாயா உலகத்திற்க்கும் மேல் உள்ள சுத்தமாயா புவனத்தில் உள்ள உலகங்களிலும்சுத்தமாயா புவனத்திற்க்கும் அப்பால் உள்ள எந்த உயிரினாலும் உணர இயலாத அருள்வெளியில் விளங்கி நடத்தும் அழகுமிக்க ஆணையை உடையவன் சிவபெருமான்.இவ்விதம் அரசனுக்குரிய அனத்து அடையாளங்களையும் கொண்டு அரசாள்பவர் சிவபெருமான்.
சிவபெருமானின் பெருமைகள் :-முதலும் நடுவும் முடிவும் இல்லாதவன் பிற பொருள்களைத் தோன்றுமாறு செய்யும் சிவபெருமான் தான் தோற்றம் உறாமலே அவற்றைச் செய்பவன்.

" அவன் அவள் அது எனும் அவை மூவினை மையின்
தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துள்ள தாம்
அந்தம் ஆதி என்மனார் புலவர் " ( சிவஞானபோதம் )

மெய்கண்டார் வாக்கு மேல்வாக்கு.அவன் என்பது இறைவன் அவள் என்பது இறைவி.அது என்பது உயிர்கள்

உயிர்களுக்கு வருவது அல்லது ஊட்டப்படுவதுவே ஆணவம்,கன்மம்,மாயை என்னும் மூன்று வினைகள் ஆகும். இறைவனைப்போல உயிர்களும் அநாதியே.ஆனால் அவைகள் தோற்றப்பட்ட விதத்திலேயே அப்படியே கிடக்கிறது.உயிர்களுக்கும் உலகுக்கும் முதலும் முடிவுமானவன் சிவபெருமான்.இதனை சிவஞான சித்தியார்பாடலும் விளக்குகிறது.

" ஒருவனோடு ஒருத்தி ஒன்று என்று
உரைத்திடும் உலகம் எல்லாம்
வருமுறை வந்து நின்று போவதும் ஆதலாலே
தருபவன் ஒருவன் வேண்டும் தான் முதல் ஈறும் ஆகி
மருவிடும் அநாதி முத்த சித்துரு மன்னி நின்றே "
( சிவஞானசித்தியார் )

இதிலும் ஒருவன் ஒருத்தி என்று விளக்குவது இறைவன் என்றே.ஒன்று என்பது உயிர்கள் அல்லது பிரபஞ்சக்கூட்டம் என்பது பொருள்.தனித்தனி வேறுபாடு உடையதாய் கூறப்படும் பிரபஞ்சக்கூட்டம் உள்ளது ஆகிய காரணத்தில் நின்று தோன்றுகின்ற காரிய முறையில் தோன்றி நின்று அழிதலை உடையது ஆதலால் அந்தப்பிரபஞ்சத்தைத் தோற்றுவிப்பதற்க்கு ஒரு கர்த்தா வேண்டும்.அந்தக் கர்த்தா முன்பு ஒடுங்குவதற்க்கு ஏதுவாய் நின்ற சங்கார காரணனே ஆகும்.அக்காரணன் பிரபஞ்சம் ஒடுங்கிய பின்னும் " அநாதி முத்த சித்துரு "வாய் நிலை பெற்று நின்று அநாதி பெத்த சித்துருவின் பொருட்டு மீண்டும் அந்தப் பிரபஞ்சத்தை முன்போல்வே தோற்றுவிப்பன்.இவ்வாறு ஒடுக்கியும் தோற்றுவித்தும் செய்வதனால் அந்தச்சங்கார காரணனே உலகுக்கு முதற்கடவுள்.இதில் மூன்றுகூறுகள் அதாவது அசைக்கவியலா கருத்துக்கள் உள்ளது.

முதற் கூறு - ஒருவனோ ஒருத்தி - தருபவன் ஒருவன்
இரண்டாம் கூறு - ஈறும் ஆகி அநாதிமுத்த சித்துருவாய் மன் நின்று மருவி விடும்
மூன்றாம் கூறு - தானே முதல்வன்.

" பெருமைக்கும் நுண்மைக்கும் பேரருட்கும் பேற்றின்
அருமைக்கும் ஒப்புஇன்மை யான் "(திருவருட்பயன்)

நிறைவினாலும் அறிதற்க்கு அருமையினாலும் மிகுந்த அருளினாலும் ஒருவரால் பெருவதற்க்கு அருமையினா லும் சிவபெருமான் தனக்கு ஒப்பிலாதவர் ஆவார்.இந்தப் பூமி மிகப்பெரியது.சூரியனிலும் பெரிய எண்ணில்லாத நட்சத்திரங்கள் ஆகாயத்தில் விளங்குகின்றன.பூத அண் டங்களச்சேர்ந்த இவைகள் எல்லாம் ஒன்று சேர்ந்தாலும் சிவபெருமானுக்குமுன் அணுவாகவும் நிற்க்க முடியாது. அதனால் சிவபெருமான் எவ்வளவு பெரியவர் என்பதை ஒருவாறு ஊகித்து அறியலாம்.

"அன்பாக வந்து நின்தாழ் பணிந்து ஐம்பூதமொன்ற அறியாமல் " ( திருப்புகழ் )

அன்பால் மனிதனுக்கு ஏற்படுவது பணிவு.பணிவு வந்து விட்டால் மனிதன் மனிதன் என்ற நிலைபெற்று இறை யுணர்வு செயல்கள் புரியும் நிலைக்கு மனிதன் உயர்த்தப் பட்டு விடுவான் சி - என்றால் கடத்தல் நிலை,வ - என் றால் கலத்தல் நிலை. எனவேதான் இறைவன் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் உயிர்களுடன் கலந்திருக்கிறான் என்பது சைவசித்தாந்தத்தால் பேசப்படுகிறது.இதனை அருணகிரிப் பெருமானும் திருப்புகழில் உறுதிப்படுத்து கிறார்.

"சிவசிவ என்று தெளிவுறு நெஞ்சு திகழநடஞ்செய் கழல் தாராய் " " சிவயநம நமசிவய காரணன் " "நமசிவயப் பொருளோனே ரஜதகிரிப் பெருமாளே " இப்படிப்பட்ட இறைவனை பிறப்பெடுத்த நாம் அடைவதற்க்கு முயற்ச்சி க்கவேண்டும்.அதற்க்குத்தேவை பக்தி வைராக்கியம்.பக்தி வைராக்கியம் என்பது சிவபெருமானிடம் வைக்கும் மெய் அன்பு.

பக்தி - சிவபெருமானிடம் மக்கள் வைக்கும் அன்பு(HUMA NBEINGS KIND ON LORD )

வைராக்கியம் - நிலையில்லா உலகவாழ்க்கையில் பற்றின் மையால் ஏற்படும் வெருப்பு.(DISAPPEAR ON UNGURANT EED LIFE )

விசித்திரம் :-மக்கள்சிவபெருமானிடம் கொள்ளும் அன்பு . மற்றும் அவனது அருட்கருணை(GRACE OF LORD )

பக்திவைராக்கியத்தின் தலைப்புகள் 1.மெய்யுணர்தல் 2.அறிவுறுத்தல்,3.சுட்டறுத்தல்,4.ஆத்துமசுத்தி,5.கைம்மாறு கொடுத்தல்,6.அநுபோகசுத்தி,7.காருணியத்திரங்கல்,8.ஆனந் தத்தழுத்தல்,9.ஆனந்த பரவசம்,10ஆனந்தாதீதம் என்பது. தலைவனோடு கலந்து அடையும் பேரின்ப உணர்வு இவ் விதம் சொல்லப்படுகிறது.இதனை ஒரு சித்தர் பாடலும் உறுதி செய்கிறது.

" வேத மறைப் பொருளை வேதாந்த நுட்கருவை
ஓதி உனை அறிந்தார் உண்டோ "( குணங்குடிமஸ்தான்)

வேதங்களாகவும் வேதத்தின் பொருளாகவும் இருப்பவன் இறைவன் என்று முன்னமேயே விளக்கப்பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| 1.சுத்த தத்துவம் ஆகிய சிவ | சிவம் | லோக உலகு |
| 2.சிவபெருமான் குணிருத்திர | குணிருத்திர உலகு | அதிகாரிகள் உள்ள உலகம். |
| 3. நாரணனாகிய உறையும் பாற்கடல் | திருமால் உலகு. வைகுந்தம் | வைகுந்த வாசன் திருமால் உலகு |
| 4.படைப்புத் பிரம்மா உலகு | பிரம்ம தேவர் உலகு சத்திய லோகம் | தொழில் செய்யும் சத்திய லோகம் என்று பேர் பெரும் |
| 5.சகலர் வர்க்கமாகிய பூமி.பிரக்கிருதி | மனிதராகிய சகலர்வர்க்க பிரக்கிருதி மாயை | மனிதர்கள் வாழும் மாயா உலகம். |

அருவமும் உருவமுமாகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய் பிரம்மமாய் நின்ற சோதிப்பிழம்பு என்று அருணகிரியார் அறிவிப்பதில் இருந்தே எல்லாம் வல்லவனாகவும் ஆக்க வும் அழிக்கவும் முடிபவனாக இருப்பவன் சிவபெருமான் என்பது விளங்கும்.இறைத்தத்துவத்தை சற்று புரிந்து கொள்ள உதவுவது மேலே உள்ள படம்.படத்தில் உள் ளதுபோல் அவ்வுலகுகளுக்கு இடைப்பட்ட உலகுதான் தேவேந்திரன் உலகு,குபேரன் உலகு,சுவர்க்கம்,நரகம்,சூரி யன்,சந்திரன் நட்சத்திரங்கள் முதலான கோள்கள்பலவும் இயங்கிக் கொண்டு இருக்கின்றன.சிவம் இருக்கும் இடம் தான் நடு.

" வந்திருக்க வல்லான் மதியாதார் வல் அரணம்
செந்தழலில் மூழ்கச் சிரித்த பிரான் - அந்தம் இலா "
( நெஞ்சுவிடு தூது ).

தங்கத்தாலும்,வெள்ளியாலும்,இரும்பாலும் கோட்டைகள் அமைத்துக்கொண்டு மூன்று அரக்கர்கள் தேவர்களுக்கு துன்பம்செய்து வந்தனர்.இவர்களை முப்புராதிகள் என்பர். சிவபெருமான் இருப்பதையும் மறந்தனர்.சிவபெருமான் அவ்வரக்கர்களை அழிக்க தேரில் சென்றார்.அப்போது தேரின் அச்சு முறிந்துவிட்டது.சிவபெருமான் தன் நெற்றி கண்களை திறந்து அவ்வரக்கர்களை எரித்துவிட்டார்;முப் புரம் எரி செய்த அச்சிவன் உறை ரதம் அச்சது பொடி செய்த அதிதீரா என்கிறார் திருப்புகழில்.இதுபோல் மகா பாரத யுத்தத்திலும் கண்ணன் தன் ஆப்தநண்பனும் பக்த னுமான அர்ச்சுணனுக்காக தேர் ஓட்டினார்.அத்தேரின் விளக்கம் கீழே விளக்கப் படுகிறது.

1.மகாபாரத யுத்தம் - தர்மத்துக்கும் அதர்மத்துக்கும் நட ந்தது(உண்மைக்கும் பொய்யுக்கும்)
2.கண்ணன் செலுத்திய தேர் - நமது பூத உடல்
3.ஐந்து குதிரைகள் - காமம்,குரோதம்,லோபம்,மதம்,மாத் சரியம் என்னும் அசுத்தங்கள்
4.அர்ச்சுணன் - ஆன்மா ( உயிர் )
5.சாரதியாகிய கண்ணன் - அறிவு ( ஒளி )
6.கண்ணன் கையில் உள்ள சாட்டை - இயக்கம்

7.நான்கு தேர்ச்சக்கரங்கள் - நான்கு வேதங்கள்
8.தேர் ஓடும் பூமி - மாயை என்பது
9.தேர் ஓடும்போது கிழம்பும் தூசி - பாசம் எனப்படுவது
10.தேரின் ஓட்டம் - காலச்சக்கரம் என்னும் சுழற்ச்சி
11.தேரின்கொடி - பேரின்பம் என்னும் வெற்றி
12.தேர் நிலை நிற்றல் - அமைதி,ஒடுக்கம் என்று பேர்
13.கண்ணன் போதித்தது - ஞானம்
14.அர்ச்சுனன் பெற்றது - மலநீக்கம் / ஒளிவிளக்கம்
15.கண்ணன் ஊதிய சங்கு(பாஞ்சசந்நியம்) - முடிவு
16.கண்ணன் காட்டியது - தத்துவ உயர்வு(நெடியோன்)
17.யுத்தத்தில் அழிந்தது - உலோப குணம்
18.மனிதனைக் காப்பது - தர்மம் ( கர்ணன் )
19.யுத்தக் களத்தில் சிந்திய ரத்தம் - ஆசை
20.எண்ணிக்கை - ஜீவன்கள்

இங்கு கண்ணன் என்றாலும் கயிலைநாதன் என்றாலும் ஒன்றுதான்.தத்துவத்துக்கு பொருந்துவன.

வானத்தில் இயங்கும் கதிரவன் விண்மீன்கள் போன்ற வற்றின் ஒளிபோல அன்றி என்றும் அசைவு இன்றிநின்று இியங்கும் அருட்பெரும் சோதிவடிவினன்.அகத்தில் கண் கொண்டு காண்போர்க்கு அன்றி ஊனக்கண்ணினால் காணமாட்டாத தூயவன்.இவ்விதம் இருந்தாலும் ஈறைவ னுக்குரிய இலக்கணங்கள் சிலவுண்டு என்றும் பேசப்படு கிறது.

" விரிகதிர் ஞாயிறு அல்லர் மதி அல்லர் வேத விதியல்லர்
விண்ணும் நிலனும்
திரிதரு வாயு அல்லர் செந்தீயும் அல்லர் தெளி நீரும்
அல்லர் தெரியில்
அரிதரு கண்ணியாளை ஒரு பாகமாக அருள்
காரணத்தில் வருவர்
எரி அரவு ஆர மார்பர் இமையாரும்அல்லர் இமைப்பாரும்
அல்லர் இவரே " ( திருமுறை )

நுட்பமாக ஆராய்ந்து பார்த்தால் இப்பாடலின் பொருள் விளங்கும்.அன்பர்களுக்கு அருளவென்றே சக்தியை தன் இடப்பாகத்தில் கொண்ட சிவபெருமானின் கண்கள் இமைக்காது என்று பாடல் விவரிக்கின்றது.

இப்படிப்பட்டவனை அவனது அருள் கண்களால் கண்டால் காணலாமே தவிற் வேறு எதனாலும் காணமுடியாது.இறைவன் எளியவனுக்கு எளியவன்,பெரியவனுக்கு பெரியவன் சிரியதுக்கும் சிரியது பகுத்தற்க்கும் பகுத்தது உயர்ந்ததற்க்கும் உயர்ந்தது விரிந்ததர்க்கும் விரிந்தது பரந்ததர்க்கும் பரந்தது என்ற கண்ணோட்டத்தில் பார்க்க வேண்டும்.இச்செய்யுளையும் பாருங்கள்

" விளக்கொளி திகழ்தரு எங்கு உருமேவினன்
விளங்கொளி திகழ்தரு எங்கு உருமு ஏவினன்
விளங்கொளிது இகழ்தரு எம்குரு மேவினன்
விளங்கு ஒளி திகழ்தரு வெங்குரு மேவினன் "(திருமுறை)

1.விளாமரத்துக் கனியை கவண் எறிந்து பறித்த நாரணனை ஒளிபொருந்திய தூய தன் பெரிய திருமேனியில் ஒரு பாதியாக வைத்துள்ளான்.( சங்கரன்கோயில் நிகழ்ச்சி )
2.மாற்பட்டுக் கதறிய பௌத்தனது தலையிலே நெருப்பை சொரிந்து மிகுந்த அச்சம் கொள்ளுமாறு விழுகின்ற இடியை ஏவித்தண்டித்தவனும் சிவபெருமானே ஆவான்.
( சிதம்பரத்தில் நடந்தது )
3.எங்கும் பேரொளிப்பிழம்பாய் நிற்கின்ற சிவபெருமான் எளிமையான எனது பிறவியை ஒழித்தல் பொருட்டு குரு மூர்த்தியாய் எழுந்தருளி வந்து என்னைத்தன் முழு நிறைவில் எனது அடிமைத்திறம் குலையாமல் இரண்டற நிற்குமாறு செய்தருளினன்.( திருப்பெருந்துறை நிகழ்ச்சி )
4.அவன் எத்தன்மையன் என்றால் எங்கும் ஒளிப்பிழம்பாய் நின்ற பேரருளாளன்.இயமனால் பூசிக்கப் பட்ட திரு வெங்குரு என்னும் தலத்தை விரும்பி உறைபவன் ஆவன் இப்பாடலில் இறைவனது அருள் வெளிப்பாட்டு தன்மை பேசப்பட்டுள்ளது.மகாவிஷ்ணுவுக்கு அருள் செய்தது, பௌத்தர்களை தண்டித்தது,குருவாய் வருதல் என்னும் மூன்றுநிலைகளில் இறைவன் அருள் வெளிப்பாடு கூறப் பட்டுள்ளது.இவைகள் மூலம் காணப்பட முடியாத பரம் பொருள் சோதிசொரூபன் என்பது விளங்கும்.சொற்றுணை வேதியன் சோதிவானவன் என்கிறார் திருநாவுக்கரசு பெருந்தகை.இத்தகு இறைவனை நாம் வணங்குவதும் ஆராதிப்பதர்க்கும் பெற்றது நமது உறுப்புகள்.இதனை

விளக்குகிறது கீழ் வரும் பாடல்.

" சிந்தனை செய்ய மனம் அமைத்தேன்
செப்ப நா அமைத்தேன்
வந்தனை செய்ய தலை அமைத்தேன்
கை தொழ அமைத்தேன்
பந்தனை செய்வதற்கு அன்பு அமைத்தேன்
மெய் அரும்ப வைத்தேன்
வெந்த வெண்ணீறு அணி ஈசர்க்கு
இவை யான் விதித்தனவே " ( திருமுறை )

நாம் பெற்ற உடல் உருப்புகளின் செயல்கள் என்னவென் பதை தெரிவிக்கிறது இப்பாடல்.இறைவன் எல்லாவற்றை யும் தானே அறிவான்.அவனுக்கு அறிவிக்க வேண்டிய அவசியமில்லை.ஆனால் உயிர்களுக்கு அறிவிக்கும் தன்மையன்.இதனை கீழேவரும் திருமுறை விளக்கும்

" அறிவானும் தானே அறிவிப்பான் தானே
அறிவாய் அறிகின்றான் தானே - அறிகின்ற
மெய்ப்பொருளும் தானே விரிசுடர் பார் ஆகாயம்
அப்பொருளும் தானே அவன் " ( திருமுறை )

இறைவனுடைய அருஞ்செயல்களை எல்லாம் எண்ணிப் பார்க்க வேண்டும் என்கிறார் தாயுமானவ சுவாமிகள்.

" நேரேதான் இரவுபகல் கோடா வண்ணம்
நித்தம்வர உங்களை இந்நிலைக்கே வைத்தார்
ஆரே அங்கவர் பெருமை என்னே என்பேன்
அடிக்கின்ற காற்றே நீ யாராலே தான்
பேராதே சுழல்கின்றாய் என்பேன் வந்து
பெய்கின்ற முகில்கள் எம்பெருமான் நும்போல்
தாராள்மாய்க் கருணை பொழியச் செய்யும்
சாதகமென்ன சுருதி சாற்று மென்பேன் "

யார் கடமை தவரினாலும் சூரியன்,சந்திரன் வருவது இரவு பகல் வருவுது காற்று அடிப்பது மழை பெய்வது எல்லாம் தவருவது இல்லை.எம்பெருமானாய் விளங்கும் இறைவனுடைய கருணை அவனது அருள் வெள்ளம் என்று கண்டு கொள்வதே இறைவனுடைய இயல்புகள் ஆகும் என்பது தத்துவம் சொல்லும் உண்மையாகும். அவரவர் அறிவுக்கு எட்டியபடி இறைவழிபாடு அமையும்

என்பதை கீழ்வரும் திவ்விய பிரபந்தப் பாடல் தெரிவிக்கிறது.

" அவரவர் தமதம தறிவறி வகைவகை
அவரவர் இறையவர் என அடி அடைவர்கள்
அவரவர் இறையவர் குறைவிலர் இறையவர்
அவரவர் விதிவழி அடையநின் றாரே "

( திவ்விய பிரபந்தம் )

ஒவ்வொருவருடைய குணங்களும் அவர்களது விதிவழி அமையும் என்பது பொருள்.கண்ணிருந்தும் இல்லை என்பது போல்,கதிரவன் ஒளிஇருந்தும் இல்லைஎன்பதுபோல் இறைவன் இல்லை என்பாரும் உண்டு.அவர்களை கேட்கிறார் மாயூரம் வேதநாயகம் பிள்ளை அவர்கள்.

" கதிரவன் ஒளியின் றென்னக் கண்ணிலான் கழறல் போலும்
பவதிரர் பேராழி ஓசை மாறிய தென்னல் போலும்
எதிருறு பொருளைக் காணாது இடருது பித்தர் போலும்
மதியிலார் தேவன் ரென்ன மருலொடும் இயம்பு வாரே "

தெளிவு பெறாதவர்கள் கடவுள் இல்லை என்று கூறும் வார்த்தையாகும் என்று சவுக்கடி தருகிறார்.இதுகாறும் சொன்னவற்றால் எடுத்துக்காட்டியவற்றால் இறைவன் உண்டு என்பதை நாம் ஒருவாறு உணர்ந்து கொள்ள முடிகிறது அல்லவா.இதுவரை சொல்லப்பட்டமுறைகள் இறைவனுடைய அரசாங்கம் அவனது அருளாட்சி வியாபகம் ஆகியவற்றை தெரிந்துகொண்டிருக்கிறீர்கள்.அவனே ஞானவடிவினன்.

" அவனே இருசுடர் தீ ஆகாசம் ஆவான்
அவனே புவிபுனல் காற்று ஆவான்
அவனே இயமானன் அட்ட மூர்த்தி
அவனே ஞானம் மயன் ஆகிநிற்பான். "

( காரைக்கால் அம்மையார் )

எல்லாம் அவனே என்பதைப் புரிந்து கொள்வீர்களாக

"பஞ்சாங்கம் அஷ்டாங்கம் தசாங்கம் வரிசையில்
எஞ்ஞான்றும் இயங்குவது இறைவனது அரசாங்கம்
எஞ்சிநம் வாழ்வில் இருப்பது எதுவென்பீர்
தஞ்சமென சரண்புகுந்தால் சாதிக்கலாம் அவனிடம்."

( ஆசிரியர் )

# இன்பம்

இவ்வுலகில் உயிர்கள் அனைத்தும் நுகர வேண்டுவது இன்பமே.அதிலும் குறிப்பாக மானிடப்பிறப்பெடுத்தவர் கள் இன்பத்தையே விரும்புவர் என்பதும் உண்மை.துன் பத்தை எவ்வுயிரும் விரும்புவது இல்லை.நம்மை உலவ விட்ட இறைவனும் நமக்காக இன்பத்தையே ஆக்கி வைத்திருக்கிறார்.ஆனால் அறிய முடியாத காலகட்டத் தினாலேயே உயிர்களுக்கு இன்பம் துன்பமாக முடிகிறது இதனை நன்குணர்ந்தே நாவுக்கரசர் பெருமானும் இன் பமே எந்நாளும் துன்பமில்லை என்றார்.இவ்வுலகில் உள்ள அனைவர்க்கும் இன்பம் தருபவர் இறைவன்.

" இன்துணை பதுமத்து அலர்மகள் தனக்கும்
இன்பன் நற்புவி தனக்கு இறைவன் "

என்கிறார் திருமங்கை ஆழ்வார் அவர்கள்.இன்பமயமான இறைவனைப் பற்றி இறையருள் பெறமுடியாததும் முய லாததும் யார் தப்பு என்று சிந்தித்துப் பாருங்கள்.
இன் + பம் = இன்பம் என்று ஆகும். இன் என்றால் புலன்கள் என்றும் பம் என்றால் உணர்தல் என்றும் பொருள்.ஆக இன்பம் என்றால் புலன்கள் வழியாக நாம் உணர்கின்ற அனுபவிக்கின்ற ஒரு நிலை என்பது பொருள் என்று நன்கு புலப்படுகிறது.இதனையே சிலர் இன் + ப் + அம் என்றும் விரித்துச் சொல்வர்.இன்-புலன் ப்-வழி,அம்-உணர்தல் என்று.ஆக எப்படி நோக்கினும் இன்பம் என்ற சொல்லின் பொருள் மாறுபடுவதில்லை என்பதைக் காணுவதே சிறப்பு.இவ்வின்பத்தை பலவித மாகப் பிரிக்கலாம்.பொன்னில் இன்பம்,புகழில் இன்பம் பெண்ணில் இன்பம்,பெருமையில் இன்பம்,பொருளில் இன்பம்.மண்ணில் இன்பம்,மதிப்பில் இன்பம் என்று. ஆனால் எல்லாவற்றுக்கும் மேலான அருளில் இன்பம் காணுவதே அழிவில்லா இன்பமாகும் என்பது உறுதி.

உறுதி என்று அறிந்தும் உருதியற்ற மனத்தால் உருக்குலைந்து போகிறோம் ஏன்?அறிந்ததை கைக்கொ ள்ளமுடியாத காறணத்தால் மங்கையர்களால் பெரும் இன்பம் சதமல்ல.ஆடவர் தரும் பணத்தை வைத்தேதான்

மங்கையர்கள் சுகம் அமையும்.பணம் தீர்ந்துபோனதும் குப்பைபோல் அம்மனிதன் தள்ளப்படுவான்.மங்கையர்கள் நிலை பற்றி பட்டினத்துச்சாமிகள் பலவாறு கூறி இருக்கி றார் அவர்களிடம் மையல் கொண்டுவிடக்கூடாது என்ற காரணத்தால் அருணகிரிப் பெருமானும்

" மங்கையர் சுகத்தை வெகு இங்கித மெனுற்ற மனம்
முன்றனை நினைத்தமைய அருள்வாயே "(திருப்புகழ்)
என்கிறார்.மங்கையர் மோகத்தில் இருந்து மனம் விடுபட ஒரேவழி இறைவனை நினைப்பதும் அவனை வழிபடு வதும்தான்.இதனை திருஞான சம்பந்தரும் "இன்புறும் எந்தை இணையடி யேத்துவர் " என்று கூறுகிறார்.எனவே இவ்வுலக மாயையில் இருந்து விடுபடவேண்டும்.மா-என் றால் தோற்றம் என்றும் யா-என்றால் ஒடுக்கம் என்றும் பொருள்படும்..தோன்றுதலும் ஒடுங்குதலும் ஒரேபரம் பொருளினிடத்து நடைபெறும் இருவகைச் செயல்கள். நிலத்து நீர் ஆகாயத்துக்கு சென்று பின் அதுவே மழை யாக பூமிக்கு வருகிறது.அதுபோல் உயிர்களும் உடல் விட்டுப் பிரிந்து உடையவரிடம் சேர்ந்து பின் அவன் உத் திரவுப்படி அதே உயிர் வேறு வடிவு கொள்கிறது.

பலகோடிகளுக்கு அதிபதியான ஒரு முதலாளி கேழ்வரகு களி சாப்பிடுகிறான்.அவன் வேலைக்காரனோ நல்ல கிச்சடிசம்பா அரிசியின் சாதத்தில் முருங்கைக்காய் சாம்பார் நெய் ஊற்றி சாப்பிடுகிறான்.முதலாளியின் நாக் கில் எச்சில் ஊறுகிறது.ஆனால் சாப்பிட முடியாது.அதே வேலைக்காரன் பஞ்சுபோன்ற மிருதுவானவெண்மையான இட்டிலியில் சாம்பார் ஊற்றி குழைத்து சாப்பிடும்காட்சி காண்கிறார் முதலாளி.பாவம் அவர் என்ன செய்வார் அவ ருக்கு அத்தனை வியாதியும் உண்டு.அளவில்லா பணத் தால் முதலாளிக்கு இன்பம் வந்தடைந்ததா?இல்லை.

ஒரு வட்டிக்கடை சேட்டிடம் நிறைய தங்கமும் வெள்ளியும் சேர்ந்துவிட்டது.கல்லாப்பெட்டி உள்ளஅறை களுக்கு மூன்று தடித்த இரும்புக்கதவுகள் உண்டு.அப்படி யும் சேட் இரவில் தூங்குவதில்லை.அடிக்கடி எழுந்து வந்து கதவினை பரிசோதித்துச் சென்று படுத்துக்கொள்

கிறான் சேட்.பொன்னையே குவித்துவிட்ட இந்த சேட்டி டம் இன்பம் உண்டா என்றால் இல்லை.எப்பொது திரு டன் அடித்துச் சென்றுவிடுவானோ என்ற பயம்.

ஊருக்கே அதிபதியாகவுள்ள மிகப்பெரிய பண் ணையார் ஒருவர்.அவர் வெளியே எங்கு வந்தாலும் உடன் இருபது அடியாட்கள் ஆயுதங்களுடன் வருவார்கள்.கார ணம் இப்பண்ணையார் ஏழைகளது சிறு சிறு நிலங்களை எல்லாம் ஏமாற்றி பறித்துக்கொண்டவர்.சட்டமும் சர்க்கா ரும் அவருக்கே சாதமாக நின்றது.இருந்தாலும் நியாயம் சத்தியம் என்பது வேறு எந்த உருவத்திலாவது வந்து தன்னை தாக்கிவிடும் என்று பயந்து உயிரைக்காப்பாற்றிக் கொள்ளவே உடன் அடியாட்களை வைத்திருக்கிறார்.ஆக அதிகமான மண்ணுக்கு (ஏக்கர்கள்) சொந்தம் என்பதில் இன்பம் வந்ததா என்றால் அதுவும் இல்லை.மண் பெண் பொன் பொருள் எதிலும் இன்பம் இல்லை.ஆனால் ஒன் றில் மட்டும் இன்பம் நிலைக்கவும் சுகிக்கவும் கண்டார் கள்.அதுதான் தெய்வீகம் இறையின்பம் என்று கூறுவார் கள்.அது அரசனது ஆணையையும் சட்டை பண்ணாது என்பதறிக. துறவிக்கு வேந்தனும் துரும்பு என்பது மொழி

பல்லவ மன்னனுடைய காவலர்கள் வந்து திருநா வுக்கரசுப்பெருமானை அரசன் உத்திரவு வருக என்றனர் நாவுக்கரசரோ எம் ஈசன் ஆணைக்கல்லால் வேறு ஒருவர் ஆணைக்கும் பணிவோம் அல்லோம் என்று உருதியுடன் கூறுகிறார்."நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ் சோம் நரகத்தில் இடர்ப்படோம் நடலை யல்லோம் ஏமாப்போம் பிணியறியோம் பணிவோம் அல்லோம் இன்பமே எந்நாளும் துன்பமில்லை. "என்று திருநாவுக் கரசர் சொல்கிறார்.இறைவன் அருளடியார்களுக்கு பிணி இல்லை அதிகாரத்துக்கு பணியமாட்டார்கள்.அவர்களுக்கு எந்நாளும் இன்பம்தான்;துன்பம் என்பது அறவேயில்லை. உங்கள் மன்னவனுக்குச் சென்று செப்புக என்று ஆணித் தரமாக பதில் இருக்கிறார் நாவுக்கரசர்.இதன் மூலம் இன் பம் எங்குள்ளது என்று பாருங்கள்."ஈறில்லாப் பதங்களி யாவையும் கடந்த இன்பமே என்னுடைய அன்பே "மணி

வாசகப்பெருந்தகை சொல்கிறார்.மேலும் புவனியில் சேவடி தீண்டினன் காண்க சிவன் எனவே யானும் தேரினன் காண்க, அவனும் எனை ஆட்கொண்டு அருளினன் காண்க என்று தான்பெற்ற இன்பத்தை உணர்த்துகிறார் உலகுக்கு மணிவாசகர்.

இராமபிரான் வரவை எதிர்நோக்கி இருந்தாள் சபரி அன்னை.இராமபிரானைக்கண்டதும் தன்குடிலில்இருத்தி உபசரித்து அறுசுவைக்கனிகளையும் அன்போடுபடைத்து அந்த நீலமேக வண்ணன் உண்டபோது அந்தசபரித்தாய் அடைந்த இன்பத்தை வர்ணிக்கவும் வார்த்தைகள் கிடையாது என்று சொல்லலாம்.கண்கள் குளமாக ஆனந்தக் கண்ணீர் பெருக்கெடுக்க வணங்கி நின்றாள் சபரி.அத்தாய் பெற்றதல்லவோ உண்மையான இன்பம்.

பாட்டி சுட்டபழம் வேண்டுமா சுடாதபழம் வேண்டுமாவென்று முருகன் ஔவையாரைப் பார்த்து கேட்க அவ்வையார் சுடாதபழம்தான் போடு என்றுகூற முருகன் மரத்தை உலுக்க உதிர்ந்த பழத்தை எடுத்து ஔவையார் ஒட்டியுள்ள மண் போகும்படி ஊத என்னபாட்டி பழம் சுடுகிறதா என்று முருகன் கேட்க அதுகேட்டு ஔவையார் திகைக்க முருகன் தன்வடிவைக்காட்ட ஔவை அடைந்த இன்பத்தை எப்படிச் சொல்வது.

சாதாரண பிட்டு சுட்டு விற்க்கும் வந்திக்கிழவிக்கு சிவபெருமான் கூலிக்காரராக வந்து சேர்ந்தார்.வந்தி தந்த பிட்டை உண்டு வைகை கரை அடைக்க மண் சுமந்து போட்டுவிட்டு கரையடைத்த பாவம் கண்ட அந்த வந்தி கிழவி பெற்ற இன்பத்தை எவ்வாறு விளக்க முடியும்

காரைக்கால் அம்மையாருக்கு இறைவன் திருவாலங்காட்டிலே நடன தரிசனம் தந்து அருள்புரிந்தார்.அவ்வளவில்லா இன்பத்தை நுகர்ந்த அம்மையாரிடம் இறைவன் அம்மையே இன்னும் நீர் வேண்டுவது யாது என்று கேட்டது அம்மையாருக்கு அளவிலா இன்பத்தைக் கொடுத்ததாம்.அம்மை கேட்கிறார் பிறவாமை வேண்டும் மீண்டும் பிறந்தால் உம்மை மறவாமை வேண்டும் என்கிறார்.பெருமானை அடையும் இன்பத்தைவிட வேறு இல்லை.

" பலவும் கடந்து பரிந்து அருள்சேர் பண்பால்
குலவி விளங்கும் குணக்குன்றோன் "(நெஞ்சுவிடுதூது)
அருள் எல்லாம் ஒன்று சேர்ந்து அருள்பாலிக்கும் பண்பால் குணமே குன்றமாக அமைந்து விளங்குபவன் கடவுள் என்பது விளங்கும்..இறைவன் மலைமேல் குடியிருக்கக் காறணம் என்ன.அது திருவேங்கடமானாலும்சரி கயிலைமலையானாலும்சரி கலங்கரை விளக்கு.(LIGHT HOUSE)உயரத்தில் அமைந்திருக்கும் காரணம் என்ன கப்பல்கள் அவ்வெளிச்சம் கண்டு கரைசேர வேண்டும் என்றே.அதுபோல் கலங்களாக வந்தநாம் உலகமாயை என்னும் கடல்கடந்து முக்தி என்னும் கரைசேர வேண்டும் என்ற காரணத்துக்காகவே இறைவன் மலைமேல் அமர்ந்திருக்கிறான் என்று காணுதலே சிறப்பு ஆகும்.
" செய்ய தருமச் செழுங்கிரியின் மீது இழிந்து
வையம் பரவ மகிழ்ந்து எழுந்து அங்கு - ஐயம்

---

காடு அடங்க வேர் பறித்துக் கல்விக்கரை கடந்து அங்கு
ஓடு பல்பூதத்து உணர்வு அழித்து - நீடுபுகழ்

---

பந்தம் எனும் சோலை பறித்துப் பரந்து அலைக்கும்
அந்த மனம் புத்தியுடன் ஆங்காரம் - சிந்திவிழ

---

மாதர் மயக்கம் அறுத்து வளர் மண்டலத்துச்
சோதி ஒரு மூன்றினையும் சோதித்து - நீதியினால்

---

அவ்வறிவுக்கு அப்பாலும் சென்று அகண்டம் உள்ளடக்கி
செவ்வறிவே ஆகித் திகைப்பு ஒழிந்திட்டு - எவ்வறிவும்

---

தான் அந்தம் இல்லாத தண்ணளியால் ஓங்கி வரும்
ஆனந்தம் என்பதோர் ஆறு உடையான்(நெஞ்சுவிடுதூது)
தருமம் என்ற பச்சைப்பசேல் என விளங்கும் செழித்த மலையில் உற்பத்தியாகி சோலை காடு எல்லா நிலங்களிலும் பாய்ந்து விரைந்து செல்லும் ஆனந்தம் கருணை என்னும் ஆறு மயமானவன் இறைவன் என்பது இதன் சுருக்கமான விளக்கம் ஆகும்.அவ்விறைவனோபலமிகுந்த ஆனையைப் போன்று ஞானத்தால் பெருகிப் பரிணமித்து விளங்குபவன் இறைவன்.
"பருகிக் களித்து உயர்ந்து பன்மறை நாற்கோட்டால்
மருவித் திகழ் ஞான ஆணையான் "அவனது ஞானச்

சுடரே உலகெங்கும் கலங்கரை விளக்கின் ஒளிக்கதிர்கள் போல் உயிர்களிடம் பரவி மிளிர்கின்றது.அதனால்தான் அருணகிரிப்பெருமானும் அருள்ஞான இன்பமது புரிவாய் என்று இறைஞ்சுகிறார்.இறைவன் உயர்ந்த மலையாக இருப்பதினால்தான் குன்றிருக்கும் இடமெல்லாம் குமரன் இருக்கும் இடம் என்று வழக்கிலே வந்ததுபோலும். என் றும் எங்கும் எப்போதும் இன்பம் ஒன்றை மட்டும் பெருக்கும் இயல்பு உடையவன் இறைவன்.

" என்றும் இன்பம் பெருகும் இயல்பினால்
ஒன்று காதலித்து உள்ளம் ஓங்கிட " ( சேக்கிழார் )

உயிர்களுக்கு இன்பம் பெருக்கும் குணம் இறைவனது ஆகும். பாதமலர் மீதில் போத மலர்தூவி பாடிப்பரவும் அடியார்களுக்கும் அன்பர்களுக்கும் இன்பம் பெருக்கும் இறைவனைப் பெற்றிட்ட இப்பிறப்பில் பெருவது ஒன்றே பேரின்பம் எனல் பொருந்தும்.

பிறசமயங்கள் எல்லாம் பேச்சாலும்,எழுத்தாலும் மட் டுமே ஒரேஇனம்,ஒரேமதம்,கருணை,ஒரேகொள்கை,ஒரே குலம் என்றுகூறிக்கொண்டு விளம்பரம் தேடும்.ஆனால் நமது சமயம் அப்படி அல்ல.தான் விளம்பரம் ஆகவேண் டும் என்று வானம் மழை பொழிவதில்லை.விளம்பரத்துக் காக கதிரவன் உதிப்பது இல்லை.இறைவனது திருவருள் மழை போலும் கதிரவனொளி போலும் நம்மை வந்து அடைகிறது.எனவே இப்பிறப்பில் பெரும் இன்பம் இறை வனை அடைதல் ஒன்றே..அதற்க்கு அடிப்படை நன்றி என்பது."எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய் வில்லை செய் நப்றி கொன்ற மகர்க்கு " என்பது திருக் குறள்.இங்கு செய்நன்றி என்பது இறைவன் நமக்களித் துள்ள தனு கரண புவன போகங்களை நினைத்து அவன் பால் அன்பு செலுத்தி வழிபடல் ஒன்றே.இறைவன் நம்மி டம் ஏதும் கேட்பதில்லை மனத்தைத் தவிற. இந்த ரகசியத்தை புரிந்துகொண்ட நவுக்கரசர் நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன் நினையாது ஒருபோதும் இருந்தறியேன் என்கிறார்.அவர் கண்டது பேரின்பம்.அப் பேரின்பத்தை அனைவரும் பெறமுயலுதல் வேண்டும்.

" கற்றதினால் ஆன பயன் என்கொல் வாலறிவன்
நற்றாழ் தொழார் எனின் " ( திருக்குறள் )

எத்தனை பெரிய நூல்களைக் கற்றுத் தேர்ந்தவர் ஆனாலும் இறைவனது திருவடிகளை தொழவில்லை யானால் என்ன பயன்.இங்கே ஒருசூட்சுமம் அடங்கி உள்ளது. வாலறிவன் என்பது.மிருகங்களுக்கும் ஊர் வன இனத்துக்கும் இறுதியாக அமைந்த உறுப்பு வால் ஒருவாக்கியத்துக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டால் அது முடிந்துவிடும்.நம் தலையில் கேசத்துக்கு அப்புறம் வேறு இல்லை.எனவே முடியென்று வந்தது.திரைஅரங்குகளில் THE END போட்டதும் எழுந்து விடுகிறோம்.அதுபோல் இறைவனும் முடிந்த முடிபு என்பதுவே தத்துவச்சான்று ஆம் END TO THE END என்று கூறுவர்.நமது பிறவிக்கு அரு மருந்தாக இருப்பவர் இறைவன்.

" அம்பலத்தரசே அருமருந்தே ஆனந்தத் தேனே அருள் விருந்தே, பொதுநடத்தரசே புண்ணியனே புலவரெலாம் புகழ் கண்ணியனே " ( திருவருட்பா ) என்கிறார் இராம லிங்க அடிகள்.விருந்துகளில் பலவிதமான சுவையுள்ள பட்சணங்கள் பரிமாரப்படுகிறது.இனிப்பு காரம் புளிப்பு துவர்ப்பு இப்படி.ஆனால் அந்த உணவால் உண்மையில் பெருவது இன்பம்தானா என்றால் இல்லை.அவைகள் உடல் நலத்துக்கு கேடு விளைவிப்பனவேயாகும்.ஆக உண்மையான இன்பம் என்பது இறைவனை அடைவது அவன் அருளைப் பெருவது மட்டுமே என்பது விளங்கும். புலவர்கள் எல்லாம் போற்றும் தன்மை படைத்த கடவுள் படைக்கும் அருள் விருந்து ஆனந்தம் தரவல்லது என் பது உண்மை.

" அருள் வடிவான மருந்து - நம்முள்
அற்புதமாக அமர்ந்த மருந்து
இருளற வோங்கு மருந்து - அன்பர்க்கு
இன்புறு வாக இழிந்த மருந்து.

பிறப்பை ஒழிக்கும் மருந்து - பர
பேசப் படாத பெரிய மருந்து

இறப்பை தவிர்க்கும் மருந்து - என்னுள்
என்றும் மதுரித்தினிக்கும் மருந்து

நல்ல மருந்திம் மருந்து - சுகம்
நல்கும் வைத்தியநாத மருந்து. " ( திருவருட்பா )

இறைவனது அருள் மருந்தால் எவ்வித பக்கவிளைவு களும் இல்லை. SIDE EFFECT. மாந்தர்க்கு அனைத்தும் பயிற்றுவிக்கும் வைத்தியர் இறைவன்.ஆம் அவனுக்கு வைத்தியநாதன் என்று பேர்.அவன் இருக்கும் இடம் வைத்தீஸ்வரன் கோவில் என்பது.அருணகிரிப்பெருமான் வைத்திய நாதப்பெருமாளே என்று முருகனை அழைக் கிறார்.எனவே இறைவனது அருள் மருந்து அற்புதமான மருந்து.எவராலும் செய்ய முடியாத மருந்து.எங்கும் கிடைக்காத மருந்து என்பதைக் காண்பீர்களாக.
" இன்பம் தரும் பெருவீடு வந்தெய்திலேன் எண்ணிறந்த துன்பம் தரும் நிரயம்பல சூழிலென் தொல்லுலகில் மன்பல் பல்லுயிர்கட் கிறைவன் மாயனென மொழிந்த அன்பன் அனகன் " ( திவ்விய பிரபந்தம் )முக்தி எனும் இன்பம் தருவது அருளே.இவ்வருள் வந்து என்னைச் சேரும்போது எப்படிப்பட்ட துன்பம் வந்தால் என்ன துயர்கள் சூழ்ந்தால் என்ன.பல உயிர்களுக்கும் இறை வனாக காத்தருளும் தன்மையுள்ள அன்பனாக அவன் அருள் உள்ளபொது ஏன் கலங்கவேண்டும் என்று இந்த பிரபந்தம் கூறுகிறது.

" மயக்கும் இருவினை வல்லியில் பூண்டு மதிமயங்கித்
துவக்கும் பிறவியில் தோன்றிய என்னைத் துயரகற்றி
( திவ்விய பிரபந்தம் )

இருவினை என்பது நல்வினை தீவினையே.இவைகள் உயிர்க்கு மயக்கம் தருபவன்வேயன்றி நன்மை பயப்பன வல்ல என்பதை முன்னமே கண்டுள்ளோம்.இப்படிப்பட்ட மயக்கமில்லா பிறவி பெருவதர்க்கு அப்பெருமானுடைய பாதங்களைப் பற்றுவதாகும்.இதற்க்கு சரணாகதி தத்து வம், என்றும் அடிமைத்திறம் எனவும் விவரிக்கப்படும்.

" சரணாகதி மற்றோர் சாதனத்தைப் பற்றில்
அரணாகா தஞ்சனை தன் சேயை "
( திவ்விய பிரபந்தம் )

சரணாகதிபோல உயிர்க்கு காவலாய் இருக்கும் கோட்டை வேறு இல்லை.கோழியைத் தவிற வேறு அதன் குஞ்சுகளைக்காக்க முடியுமா.அப்படி உயிர்களுக்கு கோழியாகவும் கோட்டையாகவும் இருப்பவன் இறைவன்.

" மூவரும் முப்பத்து மூவரும் மற்றொழிந்த
தேவரும் காணாச் சிவபெருமான் - மாவேறி
வையகத்தே வந்திழிந்த வார்கழல்கள் வந்திக்க
மெய்யகத்தே இன்பம் மிகும் " ( மணிவாசகர் )

எல்லா மறைகளாலும் தேவர்களாலும் காணப்படமுடியாத திருப்பாதங்களையுடைய சிவபெருமான் தர்மம் என்னும் வாகனத்தின் மீதேறி ( விடை )இம்மண்ணுலகில் பாதம் பதித்தவன்.அப்பெருமானுடைய திருமலர்ப் பாதங்களை நாம் பற்றி வாழ்வதே உண்மையான இன்பம்மாகும் என்பதை அறிவோமாக.

---

" கன்மம் களைந்து கருத்தில் காணுமுயர்
ஜென்மம் எடுத்து சிறக்கும் - இன்பம்
பிறப்பிறப் பில்லா பெருமானைப் பேண
கறக்கும் பாலாகும் கருணையே " ( ஆசிரியர் )

# அன்பும் அருளும்

" அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு " ( குறள் )
" அன்பும் அறனும் உடைதாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது " ( குறள் )

காலத்திற்க்கேற்றவாறு நெறிகளைச் சொல்வதில் முன் னோடியாக இருப்பது திருக்குறள்.இவ்விரண்டு திருக்கு றள்களும் அன்பினது சிறப்பை பறை சாற்றுகின்றன.இவ் விரண்டையும் பாகுபடுத்திக் காணும்போது அதனுள் பொதிந்துள்ள பொக்கிசங்கள் நமக்குப் புலப்படும்..அன்பே சிவம் சிவமே அன்பு என்று ஒரே வார்த்தையில் சொல்வா ரும் உண்டு.அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிகிலார் என்னும் திருமந்திரப் பாடலாலும் அறியலாம்.ஆனால் கணக்கீட்டு அளவை முறையில் ஆவினை மேற்கொள் ளும்போது இன்பம் பிறப்பதும் இன்னும் பலப்பல அற் புதங்கள் தோன்ற வாய்ப்பு இருக்கிறது..அன்பும் அருளும் என்கிறபோது ஒன்று தருவது மற்றொன்று பெருவது என்று பொருல்படும்..அவ்வன்பைப்பெற்று இறைவன் தரு வது அருள் ஆகும்..உயிர்க்குத் தேவை அருள் இறைவ னுக்குத்தேவை அன்பு. நமக்கு வழிகாட்டியசான்றோர்கள் காட்டிச்சென்றதும் இதுவே..அன்பை உடைய பெருமக் கள் எதையும் தனதென்று பார்த்து வைத்துக்கொள்ள மாட்டார்கள்.இது எது என்று பார்க்கும்போது இறைத் தத்துவம் புலப்படும்.எல்லாம் இறைவன் தந்தது.நமது என்று சொல்வதற்க்கு எதுவும் இல்லை." அன்"என்னும் பகுதி அரியது உயர்வானது என்ற பொருள்தரும்."பு"என் னும் விகுதி புரிவது என்ற பொருள்.ஆக அன்பு என்ற சொல்லின் அழுத்தமான உண்மைப்பொருள் எவ்விதம் அமைந்தது பாருங்கள்.இல்லறத்தார்க்கு இருக்கவேண்டிய இரண்டு அணிகலன்கள் 1.அன்பு,2அறம்.இவ்விரண்டும் இரண்டு கண்களைப்போன்றது..அன்பைச் செலுத்தவிளை வது அறம்.அவ்வறத்தைப் பேண விளைவது பண்பு,பண் பால் விளைவது பக்தி.பக்தியினால் விளைவது முக்தி.

ஆக இல்லறத்தார்கள் அன்பையும் அறத்தையும் கைக் கொண்டு ஒழுகி இறுதியில் பெறவேண்டியது இறைவன் அருள்.கணவனும் மனைவியும் கூடி கலவியில் மகிழ்வ தல்ல இல்வாழ்க்கை.உண்மையான இறை அருளைப் பெருவதுதான் வாழ்வாகும் என்பதை இவ்வாறு மறைமுக மாக உணர்த்தப்பட்டுள்ளது.கண்ணப்பர் நிகரிலா அன்பு செலுத்தியே இறைவன் அருளைப் பெற்றார்.சிறுத்தொண் டர் அன்பினால் தான்பெற்ற குழந்தையை அறுத்து கறி சமைத்துப் படைத்து இறைவன் அருள் பெற்றார்.இயர் பகையார் தன்மனைவியையே இறைவனுக்குத் தந்து அருள் பெற்றார்.பாண்டுரங்கன் மீது கொண்ட பக்தியால் தன்கறங்களை வெட்டிக்கொண்டு குயவன் அருள் பெற் றார்.இராமபிரான் மீது கொண்ட பக்தியால் இராமதாசர் அருள் பெற்றார்.இவைகள் மூலம் இறைவன் மீது நாம் செலுத்த வேண்டியது அன்பு என்பது புலப்படும். அன்பெ னும் பிடியுள் அகப்படும் மலையே,அன்பர்மனத்தைக் கோவிலாகக் கொண்டவன் என்றெல்லாம் பேசப்படு கிறது.அன்புக்கு கட்டுப்படுவதுபோல் இறைவன் வேறு எதற்க்கும் கட்டுப்படுவது இல்லை..கண்ணபிரானுக்கும் சகாதேவனுக்கும் வாக்குவாதம் நடக்கிறது..சகாதேவனி டம் கண்ணன் என்னை உன்னால் கட்ட முடியுமா என்றுகேட்கிறார்.சகாதேவன் கட்டிக்காட்டட்டுமா என் கிறான்.முடிந்தால் பார்க்கலாம் என்று கண்ணன் பலப் பல வடிவங்களை எடுக்கிறார்.கண்ணனைக் கட்ட சகா தேவன் டாட்டா மில்லில் இருந்தா ஆயிரம் மீட்டர் கயிறு வாங்கிவந்தார் இல்லை.இருந்த இடத்திலேயே பத்மாசனம் இட்டு அமர்ந்தார்.ஓம் நமோ நாராயணா என்னும் மந்திரத்தை உச்சரித்தார்.கடைசியில் கண்ணன் ஒரே சிறு உருவாகி சகாதேவன் உள்ளத்திலே சென்று அடைந்தார்.இன்னும் ஒரு சம்பவம் திருப்பனந்தாழ் என் னும் ஊரில் நடந்தது.அந்த ஊரில் உள்ள ஆலயத்தில் இருந்தசிவலிங்கம் சாய்ந்திருந்தது சோழமன்னனுக்கு கவ லையாக இருந்தது..ஆனை முதலிய பலவற்றையும் கொண்டு சிவலிங்கத்தை நிமிர்த்த முயன்றார்.அங்கு குங்

கிலியக்கலய நாயனார் என்னும் அடியார் வந்தார்.மன்னனது முயர்ச்சி தோல்வி கண்டதறிந்து தம் கழுத்தில் கயிறுகட்டி சிவலிங்கத்தை நிமிர்த்த முயன்றார்.சிவலிங்கம் அடியாரது அன்புக்கு கட்டுப்பட்டு நிமிர்ந்தது.தூய்மையான நெறியாலும் வாழ்வாலும் அன்பு தானே பிறக்கும் தன்மையதுவாகும்.இதனையே திருவள்ளுவரும் கூறுகிறார்.

" தூய்மை என்பது அவா இன்மை மற்றது
வாய்மை வேண்ட வரும் " ( குறள் )தூய்மையால் வருவதுஅன்பு,அன்பால் வருவது வாய்மை,வாய்மையால் வருவது அருள்.

" அன்பே அன்பே என்று அன்பால் அழுது அரற்றில்
அன்பே அன்பாக அறிவு அழியும் - அன்பு அன்றித் "
( திருக்களிற்றுப் படியார் )

அன்பே உருவாகிய இறைவனை,பேரன்பு செலுத்துவதற்குரிய என் அன்பே என்று அவன்பால் அன்பு மீதூர்ந்து வர இவ்வாறு அன்பு செலுத்தாமல் இருந்த தவற்றினை நினைந்து நினைந்து அழுது அதையே சொல்லிச் சொல்லி தற்போதம் இழந்த நிலையில் அன்பிலேயே அன்பு அன்றி வேறு எதிலும் எண்ணம் இன்றி இருக்கும் நிலையில் நம்முடைய ஏகதேச அறிவு ஆகிய சுட்டறிவு நம்மை விட்டு நீங்கும்.அப்போது திருவருள்பேறு கிட்டும். மாந்தர்கள் பிறமனிதர்கள் மேலும் பிறௌயிர்கள் மேலும் காட்டுவது அன்பு.ஆண்டவனும் அரசனும் உயிர்கள்மேல் காட்டுவது அருள்.அன்பினைக் கொண்டவர்கள்அன்பர்கள் என்னும்பதம் இவ்விதமே வந்தது.

"அன்பாகவந்து நின்தாழ் பணிந்து "(திருப்புகழ்-அன்பாக)
"அன்புடன் ஆசார பூசை செய்து"(திருப்புகழ்-கொம்பனை)
"அன்பின் பண்பெங்கும்"(திருப்புகழ்-குன்றுங் குன்றுங்)
"அன்பான நூலிட்டு நாவிலே"(திருப்புகழ்-ஆசைகூர்)
"அன்பொடு துதிக்க மனம்"(திருப்புகழ்-ஐங்கரனை)

இருபதாம் நூற்றாண்டு மாந்தர்கள் வளம்பெறவேண்டும் என்று பதினைந்தாம் நூற்றாண்டில் பாடிப்பரவி வழிகாட்டிய பெருந்தகையாளர் அருணகிரியார்.

இப்படி இறைவன் அருளினைச் சுரப்பதும் வழங்குவதும் எதற்க்கு என்று யோசிப்போமேயானால் அத்தனையும் தன் அடியார்கள் இன்பம் அடைய வேண்டும் என்ற ஒரே காரணத்துக்காகவே தவிற வேறு இல்லை என்பதை திவ் வியபிரபந்தம் கூறுவதப்பாருங்கள்.

" அருள் கொண்டாடும் அடியவர் இன்பமுற
. அருளினான் அவ்வருமறையின் பொருள்
அருள்கொண்டு ஆயிரம் இன்தமிழ் பாடினான்
அருள்கண்டிர் இவ்வுலகினில் மிக்கவே "

இக்கருத்து திருநாவுக்கரசர் சொல்லிய இன்பமே எந் நாளும் துன்பமில்லை என்று கூறியதை நினைவு படுத் துவதாக உள்ளது.இதேபோல் சேவ்வேள் என்று அழைக் கப்படும் முருகனைப்பற்றியும் பரிபாடல் ஆசிரியர் சொல் வதைப்பாருங்கள்.

" பொருளும் பொன்னும் போகமுமல்ல நின்பால்
அருளும் அன்பும் அறனும் மூன்றும்
உருளினர்க் கடம்பின் ஒலி தாராயே "
( கடுவன் வெயினனார் )

முருகப்பெருமானே எனக்கு பொன்னும் பொருளும் போகமும் இன்பம் அளிக்காது.இவற்றின் நுகர்ச்சியில் வருவதும் இன்பம் அளிக்காது.எனக்குத்தேவை நிலை யான அருள்,உன்னிடம் வைக்கும் அன்பு,அவற்றால் விளையும் தர்மம் இந்தமூன்றையும் எனக்கு நல்குவீர் கடப்பமரத்தை இடமாகக் கொண்டு கடப்பமலர்மாலை அணியும் முருகப்பெருமானே என வேண்டும் நயம் நம் தமிழ் இலகியங்களில் எட்டுத்தொகையில் உள்ள பரிபா டல் உண்மையில் நம்நெஞ்சை பக்குவம் செய்யும் பாட லாக உள்ளது..பிரிதோர் இடத்தில் இந்நூல் சொல்கிறது டுறைவன் அருளையே தன்குடையாகக் கொண்டு விளங் குபவன் என்று..அப்படி அருளையே குடையாகக் கொண் டதினால்தான் வெயில் எனும் தீவினையில் வாடி கருகி வரும் உயிர்களுக்கு தன் அருள் குடையின்கீழ் இருக்கச் செய்து நிழல் த்ருகிறான் பெருமான் என்றும் பரிபாடல் கூறுகிறது பாருங்கள்.இதோ அப்பாடலைப் பாருங்கள்

" அருள் குடையாக அறங் கோலாக
இரு நிழல் படாமை மூவேழுலகும்
ஒரு நிழலாக்கிய ஏமத்தை மாதோ " ( பரிபாடல் )

இறைவன் அடியார்கள் அருள் வேண்டும்போது அங்கே போய் அவர்களுக்கு அருள் வழங்கும் தன்மை உடைய வன்.இதனை உருதிப்படுத்துகிறது திருப்புகழ்.

"வேண்டிய போதடியார் வேண்டிய போகமது வேண்ட
வேறாதுதவும் பெருமாளே " ( திருப்புகழ் )

அதுமட்டுமல்ல மாசில்லடியார்கள் வாழ்கின்ற ஊர் சென்று தேடி அங்ஙனே விளையாடி நின்று வாழும் மயில் வீரனே செந்தில் வாழ்கின்ற பெருமாளே எனவும் சொல்கிறார் அருணகிரியார்.

" முடிந்தது முடிவது முகிழ்ப்பது அவை மூன்றும்
கடந்தவை யமைந்த கழலின் நிழலவை
இருமை வினையுமில ஏத்துமவை " ( பரிபாடல் )

இப்பாடல் மூலம் முடிந்தது,முடிப்பது,முன்வருவது எல் லாம் இறைவனுடைய கடந்தநிலை,தடத்தசொரூபம் என் றும் இருவினைகளைக் கடந்தவனாய்,பாதிக்கப்படாத வனால் மட்டும் மனிதனுடைய வாழ்வை மலரவைக்க முடியும் என்பதை உறுதிபடச் சொல்லலாம்.

" பூட்டைத் திறப்பது கையாலே மனப்
பூட்டைத் திறப்பது மெய்யாலே
வீட்டைத் திறக்க முடியாமல் விட்ட
விதியிது என்கிறார் ஞானப் பெண்ணே "
( மதுரை வாலைசுவாமிகள் )

மெய்ஞானம் என்னும் சாவிகொண்டு நமது மனப்பூட்டை திறக்கவேண்டும்.ஞானம் உதித்தால் பிறப்பென்னும் வீடு திறக்கும்.அவ்வீட்டினைத் திறக்க இயலாதவர்கள் விதியை நோவுகிறார்கள் என்கிறது இப்பாடல்.மாதா உடல் சலித் தாள்,வல்வினையேன் கால்சலித்தேன் வேதாவும் கைசலித்து விட்டானே நாதா நான் ஈடேறுவது எப்படி என்று புலம்புகிறார் பட்டினத்தார்.இறைவன்பால் செலுத் தும்பக்தி இரண்டு வகை.1.அந்நியபக்தி 2.அநந்தபக்தி
அந்நிய பக்தி :-கடவுளை தன்னிலும் வேறாய் நினைத்து

தன்குறைகளை நீக்க வேண்டுவது.
அநந்த பக்தி :- இறைவன் தனக்குச் செய்துள்ள பெரு நன்மைகளை சிந்தித்து அப்பெருமானோடு தான் கலந்து கொள்ள வேண்டும் என்று வணங்கும் இடையறாத அன்பு உடையது அநந்த பக்தி.
எல்லாதேசத்து அரச்ர்களும் கூடியுள்ள சபையில் துரி யோதனன் கட்டளையால் துச்சாதனன் திரௌபதியின் துகில் உரிந்தான்.அப்போது நடந்தது என்ன?
"ஆறாகியிரு தடங்கணஞ்சன வெம்புனல் சோர அலிகஞ்சோர
வேறான துகில் தகைந்த கைசோர மெய்சோர வேறோர்சொல்
கூறாமல் கோவிந்தா கோவிந்தா வென்றுக் குளிர்ந்து நாவில்
ஊறாதஅமிழ்தூற வுடல் புளரித்துள்ளமெல்லாம் உருகினாள்
( வில்லி பாரதம் )
தன்னைக்காப்பதற்க்கு கோவிந்தனைத் தவிற வேறு நபர் இல்லை என்ற முடிவுக்கு வந்த பாஞ்சாலி வேறு ஒரு சொல்லும் சொல்லாமல் கோவிந்தா கோவிந்தா என்று கூவினாள்.உடனே கண்ணபிரான் அச்சபையில் இருந்த எவர் கண்ணுக்கும் தெரியாமல் திரௌபதியின் கண்கள் காணும்படி வந்து அருள் செய்தான்.
"அருமறை சொல்லிய நாமம் ஆயிரமும் உரைத்தழைக்க
அமரர் போற்றும்
திருமலர்ச் செஞ்சீரடியோன் திருச்செவியிலவள் மொழி
சென்றிசைந்த காலை
மருமலர் மென்குழல் மானின் மனம் நடுங்காவகை
மறைந்தே வந்து தோன்றி
கரியமுகி லணையானும் பிறர் எவர்க்கும் தெரியாமல்
கருணை செய்தான். ( வில்லி பாரதம் )
தன்னிலும் வேறுபட்ட சக்தி தெய்வச் சக்தி என்று கண்டு கூட முயர்ச்சித்து கூடினாள் பாஞ்சாலி.இது அந்நிய பக்திக்கு எடுத்துக்காட்டு.தான் பிறந்த நாள் முதலே ராமனைக்காண வேண்டும் என்று ராமா ராமா என உச் சரித்தவர் சபரித்தாய்.ராமா உன்னைக் காண்பது தவிற வேறு பாக்கியம் கிடையாது என்று கண்ணீர் உகுத்தவர் சபரித்தாய்.அந்த ஏக்கத்திலேயே வாழ்ந்தவர் சபரித்தாய். ராமரைக் கண்டதும் மாயப்பாசமும் பிறவியும் ஒழிந்தது.

"ஆண்டவன் அன்பின் ஏத்தி அமுதிழி அருவிக் கண்ணீர்
மாண்டதென் மாயப்பாசம் வந்தது வரம்பில் காலம்
பூண்டமா தவத்தின் செல்வம் போயது பிறவி என்பால்
வேண்டிய கொணர்ந்து நல்கவிருந்து செய்திருந்தவேளை
பின்னவள் உழன்று பெற்ற யோகத்தின் பெற்றியாலே
தன்னுடல் துறந்துதான் அத்தனிமையின் வீடு சார்ந்தாள்
( கம்ப ராமாயணம் )

இராமபிரானைக் கண்டதும் மாயப்பாசம் அகன்றது.பிறவி ஒழிந்தது.வரம்பிலா இன்பமெனும் முக்திநிலை தோன் றும் காலம் வந்தது.அதனால் தன்னுடல் விட்டு தனிமை என்னும் முக்தி வீடு எய்தினாள் என்று கவி விளக்குகிறது இனிநமக்கு வாழ்வில்லை வளமில்லை,சுகமில்லை,நல மில்லை நாடில்லை ஐயகோ என்விதி இப்படியாயிற்று என்று புலம்பித்தவித்தான் சுக்ரீவன் அவனுக்கு ஆறுதல் சொல்லி ஆஞ்சநேயர் வாலிக்கு காலன் வந்தார் என்று கூறி சுக்ரீவனுக்கு ராமபிரான் வருகையைச் சொல்லி அவ ருக்கு அறிமுகப்படுத்தி சுக்ரீவனை பயத்தில் இருந்து விடு விக்கிறார்.ராமர் லட்சுமணரைக் கண்டு சுக்ரீவன் வணங்கு கிறார்.தான் இழந்துவிட்ட வாழ்வு வளம் எல்லாம் மீண் டும் வரப்பெற்றதாக உணர்கிறான் சுக்ரீவன்.

" வையம் நீ வானும் நீ மற்றும் நீ பாரின்மேல்
ஐயன் நீ ஆழிமேல் ஆழிவாழ் கையன் நீ
செய்ய தீயனைய அத்தேவும் நீ நாயினேன்
உய்ய வந்துதவினாய் உலகம் முந்துதவினாய் '
( கம்பராமாயணம் )

என்றுகூறி சுக்ரீவன் ராமபிரான் திருவடியை வணங்கு கிறார்.இவ்வுலகும் மற்றெல்லா உயிர்களும் உவக்கும் வண்ணம் வந்த தேவன் நீயே என்று கூறிப்பணிகின்றார் சுக்ரீவன்.தாழ்ந்தவர் வாழ்வர் என்ற நீதியைப் புகட்டுகின் றது இச்சம்பவம்.இவ்விரண்டும் அநந்த பக்திக்கு எடுத்துக் காட்டு.இறைவன் அருளைப்பெற வேண்டுவோர் முதலில் சத்திநிபாதம் பெறவேண்டும்.சத்தி-என்றால் அருள். நிபாதம்-என்றால் பதிவு என்பது பொருள்.ஆக சத்தி நிபாதம் என்பது அருள் பதிவு என பொருள் தரும்.

" பற்றவா வேரோடு பசையறப் பிறவிபோய் முற்றவில் உயர்வு மேல் முருகினார் " என்கிறார் கம்பநாடர்.
யான் எனது என்பது திருவடி ஆகும்
பேரின்பம் என்பது திருமுடி ஆகும்.இவ்விரண்டும் இப்பிறப்பில் வாய்க்க இறைவன்பால் அன்பு செலுத்த வேண்டும்.அன்புக்கு விலையில்லை அருளுக்கு எல்லை இல்லை இரண்டும் பொருளுக்கு அலையாகாது.அன்பால் நாம் கடமை ( கருமம் ) ஆற்றும்போது விளையும் பலன் களை மூன்று வகையாகப் பிரித்தார்கள்.
1.ஆகாமியம் :-ஏற்கனவே செய்யப்பட்ட பணிகளால் விளைந்து இருப்பில் உள்ள பலாபலன்கள்
( GAINS THROUGH PREVIOUS ACTIVITY. STOCK )
2.சஞ்சிதம் :-தற்போது செய்யும் பணிகளால் விளையும் பலாபலன்கள்.( GAINS THROUGH PRESENT ACTIVITY )
3.பிரார்ப்த்தம் :- இவ்விரண்டில் இருந்துஎடுத்து ஆளப் பட்ட அல்லது நுகர்ந்து முடிக்கப்பட்ட பலன்கள்.
( DISPOSED OR WITHDRAWAL )
இறைவனிடமிருந்து பெறப்படும் அருளுக்கு அடித்தள மாக அமைவது இம்மூன்றுமாகும்.இறைவனிடமுள்ள அருளைப்பெறுவது எப்படி? வங்கியில் உள்ள பணம் உங்களுடையதுதான்.வங்கிக்குப் போய் செலான் தந்து டோக்கன் பெற்று கணக்கரிடம் போய் பதிவு பெற்றுப் பின் கவுண்டரில் சென்று டோக்கன் கொடுத்து பணம் பெறவேண்டும்.அதுபோல் இறைவனது அருள் பணம் பெற டோக்கன் ஆக் வந்து அமைபவர் குரு.நம்மைப் பாசங்களில் இருந்து விடுபடச் செய்பவர் குரு ஆகும்.
" தரையை அறியாது தாமே திரிவார்
புரையை உணரா புவி " ( திருவருட்பயன்-36 )
யமிதான் நமக்கு ஆதாரம் என்று எண்ணாமல் தனக் குத்தானே ஆதாரம்,வேறு ஆதாரம் ஏதும் இல்லை என சொல்பவர்களது அறிவீனத்தை எப்படிச் சொல்வது.எங் கும் இறையருள் பரவியுள்ளது.சுத்தமான நீருக்குள் நின்றி ருந்தாலும் நாவரட்சிக்கு வேறு நீர் கிடைக்குமா என்று பார்ப்பதுபோல்.விடிந்தபின்பும் வெளிச்சத்தைப் பார்க்காது

தடுமறுவதுபோல் மாயையால் நாம் உலகிலே தடு மாறுகிறோம்.
"வெள்ளத்துள் நாவற்றி எங்கும் விடிந்து இருளாம்
கள்ளத்து இறைவர் கடன் "( திருவருட்பயன் 38 )
வெயிலில் வருந்தியவன் குளிர்ச்சியான நிழலைக் கண்டதும் அங்கு போவென்று யாரும் சொல்லாமலேயே சென்று நின்று கொள்வதுபோல் மலமாசுகளால் துன்பப் பட்டவன் அருளைக்கண்டதும் தானே அதனை அடைய முற்படுவான்.
"தூநிழல் ஆர்தர்க்கு ஆரும்சொல்லார் தொகுமிதுபோல்
தான் அதுவாய் நிற்கும் தரம் "(திருவருட்பயன்-61 )
பித்தநோய் உள்ளவரால் பாலின் சுவை உணர முடியாது அதுபோல் அறியாமை என்னும் இருள் மூடியுள்ளவருக்கு அருள் தெரியாது.அறியாமை அகன்றதும் அருள் தெரிய முற்படும்.
"தித்திக்கும் பால்தானும் கைக்கும் திருந்திடும் நாப்
பித்தத்தின் தான் தவிர்ந்த பின் "(திருவருட்பயன்-62 )
இவ்வாரெல்லாம் புலப்படும் அருளைக் காண்பதற்கு வேண்டியது அன்பு..
அருள் பெறாதவர்கள் அடைவது - மரணம்
அருள் பெற்றவர்கள் அடைவது - கலத்தல்
கலத்தல் என்பது ஒன்றுக்குள் ஒன்றாய் நாம் இறைவனுடனேயே இறைத்தத்துவத்தைப் பெறுவது ஆகும்.இறவியொடு பிறவியற ஏகபோகமாய் நீயும் நானுமாய் இருகும் வகை பரம சுகம் அதனையருள் இடைமருதின்ஏகநாயகா லோகநாயகா என்று அருணகிரியார் கூறுவதை காண வேண்டியது. நாம் தர வேண்டியது --- அன்பு
நாம் பெறவேண்டியது ---- அருள்
வாழ்வின் அடிப்படை ----- அன்பு
வாழ்வின் அடைக்கலம் --- அருள்
உயர்வானது ---- அன்பு
உறுதியானது ----- அருள்
நிகழ்வது ----- அன்பு
நிலை பேறானது ------ அருள்

| | | |
|---|---|---|
| தூய்மையானது | ------- | அன்பு |
| வாய்மையானது | ------- | அருள் |
| முதிர்வது | ----- | அன்பு |
| முக்தி தருவது | ------ | அருள் |
| இவ்வுலகுக்கு | ------- | அன்பு |
| இறையுலகுக்கு | ------ | அருள் |
| பக்திக்குத் தேவை | ------ | அன்பு |
| பலனுக்குத் தேவை | ------- | அருள் |
| காட்டுவது | ------- | அன்பு |
| காண்பது | ------- | அருள் |
| சிவம் | ----- | அன்பு |
| சக்தி | ------ | அருள் |

இவ்வாறு அன்பும் அருளும் ஒன்றாய் பிணைந்துள்ள நிலை கண்டு ஒழுகுதலே பிறந்து விட்ட நாம் பெரும் பயன் ஆகும்..உங்கள் உள்ளம் சொல்வது எளியேனுக்கு கேட்கிறது.இவ்வருளை எதைச்சொல்லிப் பெருவது என்று இதற்க்கு விடை உமாபதிசிவம் பதில் சொல்கிறார்.
" அஞ்செழுத்தும் எட்டெழுத்தும் ஆறெழுத்தும் நாலெ ழுத்தும் " என்று கொடிக்கவியில் சொல்கிறார்.
ஐந்தெழுத்து -- சிவயநம,
எட்டெழுத்து --- ஓம் நமோ நாராயணா நம
ஆறேழுத்து --- ஓம் நமசிவய
நாலேழுத்து --- சிவ சிவ
இந்த மந்திரங்களில் எதையேனும் கைக்கொண்டு உச் சரித்து உய்வு பெறலாம்.அது அவரவர் வசதி தகுதிக்கு ஏற்றது.மருந்தும் மாயமும் செய்யமுடியாததை மந்திரம் செய்துவிடும்.அன்பு வாழ வைக்கும்,ஆசை மாழவைக்கும் ராமபிரான் மீது அன்பு வைத்த கோசலை வாழ்ந்தாள். அவர் மீது ஆசை வைத்த தயரதர் மாண்டார்.அருள் வீடு பேறு அளிக்கும் ஆணவம் மீண்டும் பிறக்க வைக்கும். அன்பு என்பது தந்தை,அருள் என்பது தாய்.இரண்டுக்கும் சேர்ந்தபேர்தான் பெற்றோர்கள்.(தாய் தந்தை )சிறந்த மனி தப் பிறப்பும் இறைவன் அருளால் வருவதே.தாயும் தந்தையும் கொள்ளும் கலவியால் ஒரு சிறு புல்லின் நுனி

யில் படியும் பனித்துளியளவே சுக்கிலம் சென்று இவ்வளவு பெரிய பருவுடல் வெளிவரச் செய்வதும் இறைவன் கருணையும் காப்பும் ஆகும்.இக்கருத்தையே அருணகிரிப் பெருமான் அழகாகச் சொல்கிறார் " அறுகுநுனி பனியனைய சிறியதுளி பெரியதொரு ஆகமாகியோர் பாலரூபமாய் " என்று.எனவேதான் இக்கருத்துக்கள் சித்தாந்த முறைகளாலும்,வேதாந்த நிலைகளாலும் இன்னும் பேசப்பட்டு வருபவைகள் ஆகும்.தாயின் கருவில் என்று நாம் நுழைகிறோமோ அன்றுதொட்டு இறைவன் நம்மை காப்பாற்றுகிறார் என்றால் உயிர்கள் மேல் இறைவன் வைக்கும் கருணை / அருள் என்று கூறாது வேறு என்னவென்பது..பிறவிக்கு அடித்தளம் அன்பு.நுழைவாயில் அருள்.பிறப்புக்கு சுவர் அன்பானால் மேலே பூச்சு அருள் ஆகும்.இவ்விதமாக உயிர்கள் செய்யும் கர்மங்களுக்கு கணக்கு எழுதி வைப்பதும் அருள்ளாகும்.இக்கணக்குப் புத்தகம் இறைவனிடம் உள்ளது.அதற்க்கு பட்டோலை என்று பேர்..இதனை திருநாவுக்கரசர் உறுதிபடுத்துகிறார்.

" தொழுது தூமலர் தூவித் துதித்து நின்று
அழுது காமுற்று அரற்று கின்றா ரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதும் கீழ்க்கணக்கு இன்னம்பர் ஈசனே "

இக்கணக்கில் இருந்து எவரும் தப்பமுடியாது.ஆகவே வாய்த்த இப்பிறப்பில் இறைவன்பால் அன்பு செலுத்தி அருளைப் பெற்று விடுவீர்களேயானால் நீங்களே பாக்கியசாலிகள் ஆவீர்கள்.இறைவன் உயிர்கள்பால் காட்டுவது கருணை / அருள் இரண்டு வகைப்படும். மறக்கருணை,அறக்கருணை என்று..<u>மறக்கருணை:-</u> உயிர்களுக்கு துன்பம்போல் படுமாறு செய்து இன்பத்தை தருதல்.<u>உதாரணம்:-</u> கசப்பு மருந்து தந்து நோய் தீர்ப்பது போல்..<u>அறக்கருணை:-</u> உயிர்களுக்கு இன்பம் தரும்படி செய்து இன்பத்தை வழங்குவது..<u>உதாரணம்:-</u> இனிக்கும் தேனில் மருந்து தந்து நோய் தீர்ப்பது போல்..எனவே நிகரில்லாஅன்பின் காறணமாக உயிர்கள் பெரும்பேறு சத்திநிபாதம் என்பதாகும்.REGISTRATION OF GRACE.

நாகமானது எப்படி தன் மணியை புற உலகுக்கு தெரியா மல் மறைத்துக் கொண்டிருக்கிறதோ அப்படியே இப்பூ உலக வாசனையால் நாம் அருளைக்காண முடியாமல் மறைக்கப்பட்டு உள்ளோம்.வயது ஆக ஆக நாகத்தின் மாணிக்கம் வேளிப்படும்.அதுபோல் இறைவன்பால் வைக்கும் அன்பு முற்ற முற்ற அருள்தானே வெளிப்பட்டு நின்று ஒளிரும்.எனவே அன்பு வலைப்பட்டவர்கள் கடை தேறுவர்.பாசவலைப்பட்டவர்கள் மயங்கித் துன்புறுவார்கள் என்று தெய்வப்புலவர் திருவள்ளுவர் கூறுவது காண்க.

"தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர் " ( குறள் )

பிறவியைக் கொடுத்த இறைவனையே எனக்கு வழிசொல் என்று கேட்பது உயரிய அன்பு ஆகும்.." புனத்துளாய் மாலையானே பொன்னி சூழ் திருவரங்கா எனக்கு இனிக் கதி என் சொல்வாய் என்னை ஆளுடைய கோவே"என்று கேட்கிறார் திருவரங்கனிடம் தொண்டரடிப்பொடி ஆழ் வார் அவர்கள்.இக்கட்டுறையில் அன்பு அருள் இரண்டை யும் விரிவாகவும் முற்பிறப்பு தற்பிறப்பு கருவுற்ற கால நிலை என அனைத்தும் விளக்கப்பட்டது..காலம் கடத் தாமல் இன்றே இறையருளை பெறுவதற்க்கு நம்மை ஆயத்தப்படுத்திக் கொள்வோமாக.

---

அன்பும் அருளும் அடைந்தார்க்கு அவலமில்லை
இன்பமே எய்துவர் இறையோடு — நன்புருகி
வேண்டுவார் பெறுவது வீடுபேறே விளங்கக்
கண்டவர் வாழ்வரே காண். ( ஆசிரியர் )

# பிறப்பு --- இறப்பு --- சிறப்பு

பிறப்பும் இறப்பும் நமக்கு இயற்க்கையாய் அமைந்தது. என்பார்கள்.இக்கூற்று உண்மையாயினும் உட்கருத்து இவ்விரண்டும் இறைவனது இயக்கத்தால் நிகழ்வது என் பதாகும்.பிறப்புற்ற உயிர்கள் இறப்பைக் கண்டே தீர வேண்டும்.ஆனால் சிறப்பு வாய்த்த இப்பிறப்பால் நாம் சேர்த்த பலன் என்ன என்று எண்ணிப்பார்க்கவேண்டும் அழியாப்புகழ் பெறுவதும் ஒறுவகை சிறப்பே.இன்னும் ஒறுவகை சிறப்பு உண்டு.அது இறைவனுடன் உயிரானது இரண்டறக்கலந்து முக்தி அடைந்து பேரின்பம் நுகர்வது. அதுவே பிறவாமலும் இறவாமலும் இருத்தல்.ஒருவர் பிறந் தார் எனக்கேட்ட மகான் அந்தோ இறக்கவல்லவோ பிறந்துவிட்டான் என்கிறார்.ஆக பிறப்பு உண்டானால் இறப்பு உண்டு.

"பிறப்பு என்னும் பேதமை நீங்கச் சிறப்பு என்னும்
செம்பொருள் காண்பது அறிவு " ( குறள் )

பிறப்பை நீக்க செம்மையான பொருளை நாம் அறிந்து பற்றுவது ஆகும்.அச்செம்மை பொருள்தான்சிவபெருமான்

செம்மை + பொருள் = செம்பொருள்

செம்மை என்றால் - நேர்மை - உண்மை - நன்மை என்று பொருள்படும்.இறைவனிடம் நேர்மையைத்தவிற வேறு இல்லை.இறைவன் ஒருவனே உண்மையானவன் இறைவன் ஒருவனே உயிர்களுக்கு நன்மை செய்ய வல்ல வன்.இப்படி செம்மையான இறைவன் விளங்கும் நாட் டிர்க்கு <u>அண்டர் நாடு</u> என்று பெயர்.நாம் வசிக்கும் நாடு பூலோகம் மண் உலகம் இறைவன் வசிக்கும் நாடு விண் உலகம்.அது அண்டர்நாடு என வழங்கும்.அவனே தயாபரன் கருணைக்கடல்.

" எவ்வெவர் தன்மையும் தன்வயின் படுத்துத்
தானே ஆகிய தயாபரன் எம் இறை "( திருவாசகம் )

நீங்கள் பிறந்தபோது விலைவாசிகள் வாழ்க்கை வசதிகள் எப்படி இருந்தது.இப்போது எப்படி இருக்கிறது.நீங்கள் சொல்லலாம் விலைவாசி உயர்வு காலத்தின் மாற்றம் என்று.இன்னும் 20 வருடம் 50 வருடம் ஆனால் விலைகளும் மனித வாழ்க்கையும் எப்படியிருக்கும் என்பதை நினைத்துப் பாருங்கள்.பயமாக இருகிறது அல்லவா.அதனால்தான் வந்துசென்ற மகான்கள் எல்லாம் பிறவி வேண்டாமென்றே சொல்லிச்சென்றுள்ளனர்.எனவே பிறவிவாய்க்காமல் இருக்க அப்பெருமானை மறவாமல் நினைப்பதும்,உள்ளம் உருகுதலும்,அவன்திருநாமத்தைச் சொல்லுதலும் பாடுதலும் ஆகும்.அதற்க்கு வழிகாட்டுவது பக்தி.பக்தியினால் நல்ல குருவைப்பெற்று திருவருளில் திளைத்து பேரின்பம் அனுபவிக்கலாம்.அதுவே முக்தி.
ஆனந்தம் -- பேரின்பம் ---MORE HAPPY
அதீதம் --- கடந்தநிலை --- PASSING THE BORDER
உயிர்களுக்கு ஆனந்தம் தருவதால் இறைவனுக்கு சச்சிதானந்தன் என்று பெயர்.சிறப்பு என்பது உயிர்கள் நால் வகை நெறிகளில் ஏதேனும் ஒன்றில் உறைப்புடன் நின்று அன்பு மீதுற அவர்களுக்கு உயர்ந்ததாகிய வீடுபேறு இறைவன் வழங்குவான்.அந்நால்வகை நெறிகள் சரியை கிரியை யோகம் ஞானம் என்பது,இதில் சரியை கிரியை யோகம் என்பது அன்பு நெறி என்றும் (PRINCIPLE OF KIND ) ஞானம் என்பது அறிவு நெறி என்றும் கொள்ளப் படும். ( PRINCIPLE OF GRACE POWER ) இந்நிலைகளிலே வரும் உயிர்கள் மலபரிபாகம் நீக்கப்பட்டு பிறப்பையும் இறப்பையும் கழிக்கும் என்று காணுவதே சிறப்பு.நம்மை என்றும் ( சதா ) இன்பத்தில் வைப்பவன் இறைவன். "யாவரும் பெற்றறியா இன்பத்துள் வைத்தாய் " என்று மணி வாசகர் சொல்கிறார்.இறைவன் உயிர்களுக்கு அருள் செய்வதை உறுதி செய்கிறது சிவப்பிரகாசம் என்னும் நூல்.

" வானோர் பிரான் என்னை ஆண்டிலனேல்
நான்யார்? என் உள்ளம் யார்? ஞானங்கள் யார்?
என்னை யார் அறிவார்? ( சிவப்பிரகாசம் )

இத்தகு உயிர்த்துடிப்புள்ள கருத்தும் கொள்கையும் நம் சமயத்துக்கு மட்டுமே உண்டு.எல்லாச்சிறப்பும்பெற்றவன் இறைவன் ஒருவனே.அப்பெருமானைப் பற்றுவதே உயிர் கள் பெறும் சிறப்பு ஆகும்..காரணம் இறைவன் அநாதி யாய் உள்ளவன்.
அநாதி :- என்பது ஆதி அற்றது.அதாவது இன்ன காலத் தில்தான் தொடங்கியது என்று எவராலும் கூறமுடியாதது கணக்கிட முடியாதது ஆகும்.இது இருவகைப்படும்.
( NO SEEDS TO GROW.NOT POSSIBLE TO SAY WHEN THE GROW STARTS. THIS IS TWO TYPES )
1.பிரவாக அநாதி :-படைத்தல் முதலிய ஐந்தொழில்கள் ஆகும்.இவ்வைந்தொழில்கள் என்று தொடங்கி என்று முடியும் என்று கணக்கிடமுடியாது.( FIVE TYPE OF WORKS OF GOD.WE CAN NOT SAY WHEN IT STARTS WHEN IT WILL END )
2.சொரூப அநாதி :- இது இறை,உயிர்,தளை,( பாசம் ) ஆகிய முப்பொருளும் என்றிலிருந்து இருக்கின்றன என்று கூறமுடியாது.( NOT POSSIBLE TO SAY FROM WHEN THE THREE OBJECTS OF LORD SOUL AND WAPPER ARE FOUND.)
"பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்
பிறவா துறுவது பெரும் பேரின்பம்
பற்றின் வருவது முன்னது பின்னது
அற்றோர் உறுவது. " ( மணிமேகலை )
பிறந்தவர்கள் அடைவது பெரும் துன்பம்.பிறவாதிருத்தல் பேரின்பம்.இப்பிறப்பானது நமக்கு பற்றுகளால் ஆசை களால் விளைவது. ஆகவே ஆசையை அகற்றினால் அவன் திருவடியை அடையலாம் என்று மணிமேகலை கூறுகிறது.
"பிறந்தது உண்டானால் அன்றோ பிறகு சாவதுதான் உண்டாம் பிறந்ததே இல்லை என்னும் பிரம்மம் ஆவ துவும் நானே." ( கைவல்ய நவநீதம் )பிறப்பு ஒன்றைப் பெற்றுவிட்டோமே யானால் இறப்பதும் உருதிப்படுத்தப் படுகிறது.பிறப்பு இல்லையானால் நாம் பிரம்மமாய் நின்று

ஒளிரலாம்.பிரம்மத்துக்குப் பின்பும் பிறப்பு இருக்குமே யானால் அது நானாக இருக்க முடியாது.அது உண்மை யான திருவருளையும் பெற்றதாக ஆகாது.பிறப்பை நீக்கு பவன் இறைவன்.பிறப்பறுக்கும் பிஞ்சகன்தன் பெய்கழல் கள் வெல்க என்று திருவாசகத்தில் பேசப்படுகிறது. அவ்விறைவன் வாழ வேண்டும்.அவன் வாழ்ந்தால்தானே நாமும் வாழ முடியும் என்ற தத்துவத்தை நமக்களிப்பது தான் நமது சமய வழியாகும்.

---

பிறப்பும் இறப்பும் பிணைந்தே பெற்றதினால்
சிறப்பாம் இறையை சிந்தித்து -- வரப்பிலா
ஆனந்தம் அனுபவிக்கும் அருள்கூட்டும் தன்மையினை
மனமதில் பெறுவது மகிழ்வு. ( ஆசிரியர் )

# காட்சி

முகவுரை :-காட்சிகள் பலப்பலவாய் பவனிவரும் இந்
நாளில் பயனுள்ள காட்சி என்று எதைத்தான் சொல்
வது.படக்காட்சி,கண்காட்சி,அரங்ககாட்சி,அவைக்காட்சி
நடனக்காட்சி என்று எத்தனையோ காட்சிகளை எழுத
லாம்.ஆனால் அத்தனைக்காட்சிகளாலும் நமக்கு பலன்
ஏதேனும் உள்ளதா என்று பார்ப்பது மனிதன் பெற்ற
அறிவுடைமை ஆகும்.இக்காட்சிகளால் எல்லாம் மனமும்
புத்தியும் கெட்டுப்போவதுடன் பொருள் நட்டமும் ஏற்
பட்டு வாழ்விலே மிகப்பெரிய பலவீனங்கள் எல்லாம்
வந்துவாய்த்து நிலை தடுமாறும் சந்தர்ப்பங்களைக்
கொடுப்பதே மேற்கூறிய காட்சி வகைகள்.

நற்காட்சி :- சிந்தையும் செயலும் தடுமாறாது நல்ல
பலன்களை விளைக்கும் காட்சிகள் நற்காட்சிகள்.இத்
தகு நற்காட்சிகளால் மனம் தடுமாறுவது இல்லை.அத்
துடன் இறையன்பை பெறவைக்கும் பக்தியை கூட்டுவன
வாகவே அமையும்.இத்தகு நற்காட்சிகளை கீழ்கண்ட
வாறு பகுத்துக் கூறலாம்.1.திருக்காட்சி 2.அகக்காட்சி
3.அருள்காட்சி 4.மெய்காட்சி 5.ஞானக்காட்சி முதலியன
வாகும்.பிறவிப்பிணி தீர்க்கும் காட்சிகள் எல்லாம் நற்
காட்சிகள் ஆகும்.

திருக்காட்சி :-ஏதோஒரு ஆலய கும்பாபிசேகத்திற்க்குச்
செல்கின்றீர்கள்.கோபுரத்தில் உள்ள கலசத்துக்கு வார்க்
கும் கும்பநீர் உங்கள் மேனியில் பதுகிறது.அதன் பின்பு
மூலவர் தரிசனமும் செய்கிறீர்கள்.இதுவே திருக்காட்சி
ஆகும்.பன்னிரண்டு ஆண்டுகள் சுவாமி தரிசனம் செய்த
புண்ணியம் இந்த ஒரே ஆண்டில் நீங்கள் பெற்றுவிட்டீர்
கள் என்பது பொருள்.இவ்வகையிலேயே ஆண்டுதோறும்
நடைபெறும் கோவில் பிரம்மோற்சவம் திருத்தேர் ஓட்
டம் உற்சவமூர்த்தி வலம் வருதல் ஆகிய காட்சிகளைக்
காண்கிறீர்கள்.புனிதம் வாய்ந்துள்ள ஒரு சாது அல்லது
தவச்சீலர்களைக் கண்டு வணங்குதலும் திருக்காட்சி
வரிசையில் அடங்குவனவாகும்.

அகக்காட்சி :- அகக்காட்சி என்பது இறைவனை தன் உள்ளத்திற்குள்ளேயே மானசீகமாக கண்டு தரிசித்து இன்புறுவது ஆகும்.சகாதேவன் கிருஷ்ணபரமாத்மாவை தன் உள்ளத்தில் எழுந்தருளப் பண்ணி கண்டு தொழு தார்.பஞ்சபாண்டவர்கள் காட்டில் இருக்கும்போது அவர் கள் இருப்பிடத்துக்கு தூருவாச முனிவர் தன் சீடர் களுடன் வர அவர்களுக்கு உணவு படைக்க இயலா தரு ணம் கண்டு பாஞ்சாலி கண்ணபிரானை தன் மனத்துள் நினைத்து அழைத்து குறை நீங்கினாள் என்பது நமக்கு பாரதம் கூறும் வரலாறு ஆகும்.அர்ச்சுணன் தீர்த்தயாத் திரை முடிந்து துவாரகைப் பகுதிக்கு வந்து கிருஷ்ண பரமாத்மாவை நினைக்க அவரும் உடனே வந்து தன் மைத்துணருக்கு வேண்டியவாறு எல்லாம் அருள் புரிந் தார்.ஏகலைவன் தன் குருநாதர் துரோணாச்சாரியார் போல் காட்டிலே பதுமை செய்து வைத்து வணங்கி அதன்மூலம் வில்வித்தை கற்றார்.சீர்காழிப்பதியில் இருக் கும் திருஞான சம்பந்தரது பெருமையை சென்னையில் உள்ள செட்டியார் கேழ்விப்பட்டு சம்பந்தப்பெருமானை அப்படியே மனத்துள் வரிந்துவைத்து வணங்கி மகிழ்ந்து வீடு பேறு அடைந்தார்.இப்படி வரும் சம்பவங்கள் அகக் காட்சிகள் வரிசையில் அடங்கும்.

அருட்காட்சி :-இறையருள் துணைக்கொண்டு பேதாபேத மின்றி எப்பொருளையும் சமமாக ஒன்றாகக் காணும் காட்சி அருட்காட்சி எனப்படும்.அப்பர் சுவாமிகள் ஆல யத்தில் உழவாரப்படை கொண்டு சுத்தம் செய்யும் பணி யில் ஈடுபட்டிருந்தார்.அப்போது இறைவன் அவரை சோதிக்கக் கருதி முத்து,பவளம்,மாணிக்கம்,ரத்தினக்கற் கள்,பொற்காசுகள் முதலியன அவர் கண்ணில் படும்படி தரையில் சிதரி பரவச்செய்தார்.அப்பர் சுவாமிகள் தம் உழ வாரப்படையால் கற்களோடு கற்களாக சேர்த்து பெருக்கி தள்ளிவிட்டார்.இதுவே அருட்காட்சி எனப்படும்.இவ்வருட் காட்சியானது சிலவிடங்களில் புறக்காட்சி என்றும் திரக் காட்சி என்றும் இருவகைப்பட்டு தெரியும்..ஆண் துறவி யும் பெண்துறவியும் ஆற்று மணலில் நடந்து சென்றனர்.

ஆண்துறவி சற்று முன்னும் பெண்துறவி சற்று பின்னும் நடந்து சென்றனர்.அப்போது ஆண்துறவி மணலில் ஒரு தங்கநகை இருப்பதைக் கண்டு தன் கால்விரல்களால் மணலை தள்ளி மூடிவிட்டுச் சென்றார்.இதனை பின்னால் வந்த பெண்துறவி கவனித்து விட்டார்.அவர் ஆண்துறவியைப் பார்த்து என்னங்க செய்தது என்றார் அதுவா வேறுஒன்றும் இல்லை இங்கே மணலில் ஒரு தங்கசெயின் கிடந்தது.அது உங்கள் கண்ணில் பட்டால் ஏதாவது நினைப்பு வரும் என்று மணலால் மூடினேன் என்றார் ஆண்துறவி.துறவிகளுக்கு பொன்னும் மண்ணும் ஒன்றுதானே.அது எப்போது உங்கள் கண்ணுக்கு தங்க மாகவும் மண்ணாகவும் தெரிய ஆரம்பித்ததோ நீர் துற வறத்திலும் ஞானத்திலும் முழுமை பெறவில்லை.ஆத லால் இனி அடியேன் உங்களுடன் சேர்ந்து யாத்திரை செய்வதில் பயனில்லை.உமது வழி உமக்கு என் வழி எனக்கு என்று கூறி பெண்துறவி கணவனாரை விட்டு தனியே சென்றுவிட்டார்.

ஒரு குருவானவர் தன்சீடர் குழுவோடு ஒரு ஊருக்குச் சென்றுகொண்டு இருக்கிறார்.அப்போது குரு தன்சீடர் களை சோதிக்கக் கருதுகிறார்.எதிரே ஒருநாய் இறந்து கிடக்கிறது.அதன் துர்நாற்றம் எங்கும் வீசுகிறது.குரு தன் சீடர்களை ஒவ்வொருவராக அழைத்து இறந்துகிடக்கும் நாயின் மாமிசத்தை உண்ணும்படி சொல்கிறார்.சீடர்கள் அனைவரும் குருவை கடிந்துபேசி அகல்கின்றனர்.எப் போதும் குருவுக்கு சிறந்தசேவை செய்துகொண்டு பணி வோடு குருவின் திருவடியை சிந்தித்துக்கொண்டு இருக் கும் ராமன் என்னும் சீடன் குருவை வணங்கி நிற்கிறான் இறுதியில்,அக்குரு ராமனைப்பார்த்து சீடனே நீ சென்று அந்த நாய் மாமிசத்தை உண்ணுக என்று கூறுகிறார். ராமன் என்னும் அச்சீடன் குருவின் திருவடியை தொட்டு வணங்கிச்சென்று அந்த நாய் மாமிசத்தை உம்கிறான் அது அவனுக்கு பால்பாயசமாக இனிக்கிறது.இறந்த நாய் மாமிசம் ராமனுக்கு பால்பாயாசமாக்கப்பட்டதுதிரக்காட்சி

மற்ற சீடர்களுக்கு நாய் மாமிசமாகப் பட்டது புறக்காட்சி ஆகும்.இவ்விதம் அருட்காட்சியானது இரண்டு பிரிவாகப் புலப்படும்.ஒரே அருட்காட்சியாகத்தெரிய குருவருளோ திருவருளோ வேண்டும்.

மெய்க்காட்சி :-தனிப்பட்ட ஒருவருக்கோ அல்லது பல பேர்கள் காணும் வண்ணமோ அகக்கண்ணாலும் புறக் கண்ணாலும், கண்டு தெளிவது மெய்க்காட்சி யாகும். மெய் என்னும்போது மேனியில் என்ற பொருளோடு உண்மையாக விளங்கியது அல்லது விளங்குவது என் னும் பொருளும் ஆகும்.மெய்க்காட்சி வெளிப்படும்போது பொய்க்காட்சிகள் ஓடி மறைந்துவிடும்.ஏகலைவனிடம் துரோணாச்சாரியார் கண்டது மெய்க்காட்சியாகும்.குடுமித் தேவர் கண்களில குருதிவழிவதைக்கண்டு கண்ணப்ப நாயனார் உள்ளமும் உடலும் துடித்தது மெய்க்காட்சி ஆகும்.சீதையை பிரிந்தராமன் மனைவியை இழந்த சோகத்தை உலகுக்கு காட்டியது மெய்காட்சியாகும்.அபி ராம பட்டரது அன்புக்கு கட்டுண்டு அமாவாசையில் பௌர்ணமி நிலவை காட்டியது மெய்க்காட்சியாகும்.அர்ச் சுணனுக்கு சிபெருமான் பாசுபதாஸ்திரம் வழங்க உமா தேவியுடன் வந்து அருள்புரிந்தது மெய்க்காட்சியாகும். பாஞ்சாலியின் பிடிவாதத்தால் பனிரண்டு வருடங்களுக்கு ஒருமுறை காய்க்கும் கனியை அர்ச்சுணன் அறுத்துத்தர பின்பு அதில்வர விருந்த துன்பம் கண்டு அது கண்ணன் அருளால் நிவிர்த்தியானதும் மெய்க்காட்சியாகும்.திருவண் ணாமலையில் பிரபுடதேவராஜன் அவையில் எல்லாரும் காணும்படி முருகப்பெருமானை வரவழைத்துக் காட்டி யது மெய்க்காட்சியாகும்.ஆனாய நாயனார் புல்லாங்குழல் ஓசை கேட்டு ஆநிரைகள் மட்டுமன்றி தேவர்கள் எல் லாரும் கூடிநின்று கண்டுகளித்தனர் என்பதுமெய்க்காட்சி யாகும்.

ஞானக்காட்சி:-மகான் ஒருவர் காசியில் இருக்கிறார்.அவர் தீடீரென அபச்சாரம் அபச்சாரம் என்று மடத்தில் இருந் தபடியே கூவுகிறார்கள்.அருகில் உள்ளவர்கள் சுவாமி தங் கள் கதறலுக்கு காரணம் என்னவென வினவுகின்றனர்.

அதுவா வேறு ஒன்றும் இல்லை.சிதம்பரத்தில் கருவரை யில் உள்ள திரைச்சீலை தீ பற்றிக்கொண்டது என்று கூறுகிறார்.இது ஞானக்காட்சியாகும்.ஒரு தபசி காஞ்சி புரத்தில் ஏகாம்பரரை தரிசித்துவிட்டு வருகிறார்.அப்போது அடடா என்று புலம்புகிறார்.உடன் இருந்த சீடர்கள்சாமி ஏன் என்று கேட்கிறார்கள்.அதுவா பத்ரிநாத்தில் உள்ள ஆலயத்தில் அர்ச்சகர் தீபாராதனைத் தட்டை கீழே போட்டுவிட்டார் என்கிறார்.இவைகள்ஞானக்காட்சியாகும் இத்தகு ஞானம் கைவரப்பேற்றவர்கள் மோனவீடு ஏகுவது திண்ணம்.

கருணைக்காட்சி :- மகான்கள்,தவச்சீலர்கள் கீழ்நிலை யில் இருக்கும் உயிர்களுக்கு அவர்கள் துன்பத்தைக் கண்டு இறங்குவதே கருணைக்காட்சி யாகும். திருஞான சம்பந்தர் பாம்புகடித்து இறந்தவரை எழுப்பியதும்,மயி லையில் சாம்பல் எலும்புகள் பானையில் இருந்து பூம் பாவையை உயிர்பெற்று வரச்செய்ததும்,சுந்தரர் முதலை வாயில் இருந்து இறந்த குழந்தையை மீட்டதும்,அப்பர் சுவாமிகள் பாம்புகடித்து இறந்த பாலகன் விடத்தை நீக்கி உயிர்பெற்று வரச்செய்ததும் கருணைக்காட்சியாகும் பேகன் மயிலுக்கு ஆடைபோர்த்தியதும்,பாரி முல்லைக்கு தேர் தந்ததும் இவ்வரிசையில் இடம்பெருவனவாகும்.வழி யில் விபத்தில் சிக்கிய ஒருவருக்கு உதவி அவரை மருத் துவமனையில் சேர்ப்பதும் இவ்வகையில் அடங்கும்.

வெருங்காட்சி:-தர்மத்திற்கும் சத்தியத்திற்கும் புறம்பாக உள்ள காட்சிகள் எல்லாம் வெருங்காட்சியே.இன்று கண்டுகொண்டிருக்கும் எல்லாகாட்சியும் வெருங்காட்சி எனப்படும்..கண்ணுக்கு விருந்தளிப்பவையும் உடலுக்கு இன்பம் பயப்பவையும் வெருங்காட்சிகளே.இவைகளால் பிறவிக்கு எப்பயனும் இல்லை.வாய்த்த வாய்ப்பினைக் கொண்டு கடைத்தேற முயல்வதே அறிவுடைமையாகும்.

முடிவுரை :- உங்கள் பார்வைக்கு காட்சிகள் விதம் செயல்கள் விளக்கிக் காட்டப்பட்டது.விளக்கங்கண்டு வீடுபேறு அடைவதே அறிவுபெற்ற நமது கடமை ஆகும் காலங்கள் மாற்றத்தால் எதிர்காலக் கடுமைகள் இப்போ

தேதெரிய ஆரம்பித்துவிட்டது.அதிலிருந்து விடுபடுவது என்றால் நாம் ஆண்டவனின் திருவதியைப் பெருவதே ஆகும்.பக்தியும்,பக்தியால் அன்பும்,அன்பால் அருளும் பெற்றுவிடுவீர்களெயானால் நீங்களே இம்மண்ணில் சிறந்தவர்கள்.

---

காட்சிகள் பலவும் காணலாம் காண்பவை
மோட்சம் நல்க முடியுமோ - மாட்சியாம்
இறையருளை பெற்றார்க்கு எந்நாளும் இன்பம்
குறைவரப் பெறுதல் குறியே. " ( ஆசிரியர் )

# உயிர்

உலகில் உற்பவித்த அனைத்து பொருள்களும் ஏதாவது பிரிதொன்றை மூலமாகவோ துணையாகவோ பெறுவதற்க்கு உயிர் என்று பேர்.பஞ்ச பூதங்களும் ஒன்றை ஒன்று துணைக்கொண்டு இயங்குகின்றன. ஒரு மலர் இருந்தால் அதற்க்கு உயிராவது செடி.இப்படி யெல்லாம் திகழ்வதை நாம் அறிவினால் அறிந்து அனுபவத் தால் பெறமுடியும்.இவ்வுடலுக்கு ஆதாரம் உயிர்.உயிருக்கு யார் ஆதாரம் யார் என்றால் இறைவன் நீராய் உருக்கி என் ஆருயிராய் நின்றானே என்கிறது திருவாசகம்.இறைச்சக்தி இல்லாத இடமும் நிறையாத பொருளும் இல்லை.இந்த உயிரின் முக்கிய குணங்கள் என்னவென்பதே இங்கு விரிக்கும் ஆய்வு ஆகும்.

உய்+இர் = உயிர். உய்=என்றால், இயங்குதல்.இர்-என்றால் இருத்தல்.ஆக உயிர் என்பது நம்முடலில் இருந்து இயங்குவது,நம்மை இருத்துவது நம்மை வாழவைப்பது என்ற பல்பொருளும் ,பலசுவையும் தருவதாகும்.இவ்வுயிர் உடல் விட்டு நீங்கினால் உடலுக்கு ஏற்படும் பெயர் பிணம் என் பதாகும்.

பிண் + அம் = பிணம்,

பிண் = என்றால் பிறிவது,பிறிந்த,நீங்குதல்,என்று பொருள் படும்.

அம் = என்றால் அழிவது,கழிவது,சிதைவது என்று பொருள் படும்.உயிர் உடலைவிட்டு நீங்குகிறது.உயிர் நீங்கிய உடல் அழிக்கப்படுகிறது.ஆக பிணம் என்ற சொல் எவ்வளவு பொருத்தமாய் நமது சமயத்தில் அமைந் திருக்கிறது என்பதைப் பாருங்கள்.எதற்க்குமே இல்லாத ஒரு சிறப்பு உயிர்க்கு உண்டு என்றால் அது அழியாமல் இருப்பதே.அது அநாதி என்று சித்தாந்திகளும் வேதாந்தி களும்.இவ்வுயிரை இறைவன் படைக்கிறானா என்றால் அதுவும் இல்லை.ஆனால் இவுயிரின் உள்ளிருந்து இயக் குகிறான்.அதனால்தான் கடவுள் என்ற பெயர் வந்தது. சிவம் என்ற் சி யில் உள்ள கொம்பு போனால் வருவது

சவம் பேர். உயிர்க்கு கொழுகொம்பாய் இருப்பது சிவம் என்பதறியவும்.சதசத்து ஆகவே உயிர்கள் இருக்கும் சத் தால் சத்தை அறியவேண்டும்.அசத்தால் அசத்தை அறிய வேண்டும்.இதனை விளக்கும் பாடல் இதுவாகும்..
"சத்து அசத்தைச் சாராது அசத்து அறியாது
அங்ஙன் இவை உற்ற சதசத்தாய் உயிர் '
( திருவருட்பயன் )
இரும்பை இரும்பு அறியாது மனிதர்கள் அறிகிறோம் அல்லவா?இது ஸ்டீல் ( STEEL ) இது வார்ப்பு ( CAST IRON ) என்று அது போலத்தான்.ஆனால் இந்த உயிர் இரண்டும் அறிவதைப் போல உலகின்கண் படரும் ஒளி யையும் அறியும்,இருளையும் அறியும் தன்மையது ஆகும்.
ஒளி = இறைவன் / திருவருள்
இருள் = ஆணவ மலம்.
ஒளியும் இருளும் எப்போதும் இணைந்துதான் இருக் கிறது.காலை வந்தால் ஒளிவரும்.ஒளி இருளை மறைக் கும்.மாலை வந்தால் இருள் வரும்.இருள் ஒளியை மறை த்து விடும்.அதுபோல் திருவருள் உயிர்க்கு இறைவனைக் காட்டி உலகை மறைக்கும்.உயிர்க்கு ஆணவமலம் உல கைக்காட்டி இறைவனை மறைக்கும்..இதனை கூறும் அழகிய பாடல் இது.
" ஒளியும் இருளும் ஒருமைத்துப் பன்மை
தெளிவு தெளியார் செயல் " ( திருவருட்பயன் )
இப்படி காலநிலைகளால் உயிர் தனக்கு உடமையான இறைவனை அறிய முடியாதவாறும் அறிந்து பற்றமுடி யாதவாறும் பற்றி வீடுபேறு அடைய முடியாதவாறும் மறைக்கும் செயலுக்கே மாயை என்று பெயர்.இதனைப் பாசம் என்றும் கூறுவார்கள்.பதியினைப்போல் பசு பாசம் அநாதி என்கிறார் திருமூலர்.இங்கு பசு என்று சொல்லப் படுவதே உயிர் ஆகும்.பாசம் என்பதுதான் மாயை ஆகும் உயிர்கள் மாயையை கடந்து பதியாகிய இறைவனை அடையவேண்டுவதே கடமையாகும்..ஒருவன் எனக்கு பால்பாயசம் உயிர் என்றான்.மற்றொருவன் எனக்கு சிக் கன் என்றால் உயிர்.மற்றொருவன் எனக்கு பிராந்தி உயிர்

என்றான்.உயிருக்கும்,உணர்வுக்கும்,உள்ளத்துக்கும் ஊறு விளைவிக்கும் இவைகள் எப்படி உயிர் என்று சொல்ல முடியும்.ஒருவன் மனைவிதான் எனக்கு உயிர் என்றான். ஆனால் அம்மனைவியோ அவனை நடுத்தெருவில் நிருத் திவிட்டாள்.ஒருவேளை சாப்பட்டுக்கும் வழியில்லை.ஆக இவைகள் எப்படி உயிராகும்..உலகிலுள்ள உயிர்களுக்கு எல்லாம் உயிர் இறைவன்.என்பது உண்மை..எண்ணகத் தாய் உலகுக்குயிரானாய் என்கிறார் மணிவாசகர்.எனவே உயிர்கொண்டு உலவிடும் நாம் உணர்வால் அறிந்து உரி யவரான இறைவனோடு கலக்க வேண்டும்..அதற்க்காக வாய்த்தது தான் இந்த மானிடப்பிறவி.உடலை விட்டு உயிர் பிரிந்த பின்பு உயிர் மூன்று விதமான உடல்களை எடுக்கிறது.

1.பூத பௌதீக சரீரம் - பூலோகம். ( மண் ) EARTH
2.பூத யாதனா சரீரம் - எமலோகம். NARAG
3.பூதசாத சரீரம் - தேவலோகம். SUWARG

மண்ணுலகில் பூதௌடலை நீத்த உயிர்,தான் வாழ்ந்த காலத்தில் செய்த நல்வினை தீவினைகளுக்கு ஒப்ப எம லோகத்தையும் தேவலொகத்தையும் அடைகிறது என்பது உறுதி.எம லோகத்தில் துன்பமும் தேவலோகத்தில் இன் பமும் துய்க்கிறது.இம்மண்ணுலகில் உயிர்க்கு அதிகமான துன்பம் தரும் வசதியும் இல்லை.அதுபோல் அதிகமான இன்பம் தரும் வசதியும் இல்லை இங்கு அனுபவித்த துன்பம் நீக்கி மீதம் அனுபவிக்க நரக லோகமும்.இங்கு அனுபவித்த இன்பம் நீக்கி மீதம் அனுபவிக்க சுவர்க்க லோகமும் இறைவனால் ( பதி ) அமைக்கப் பட்டது. இதை எப்படி நம்புவது என்று நீங்கள் கேட்கலாம்.ஒரு வன் இம்மண்ணில் ஒண்பது கொலை செய்தவன் என்று வைதுக்கொள்ளுங்கள்.நீதிபதியால் விதிக்கப்படும் மரண தண்டனைமூலம் ஒன்று நீங்குகிறது.மீதம் உள்ள எட்டு துன்பங்களை அனுபவிக்க உயிர்க்கு எமலோகத்தில் உயிர்க்கு பூதயாதனா சரீரம் வழங்கப்படுகிறது.அதை அனுபவித்த பின்புதான் உயிர்க்கு விடுதலை ஏற்படுகிறது அதுபோல் நற்கருமங்கள் செய்த உயிர்களுக்கும் இங்கு

அனுபவித்தது போக மீதமுள்ள இன்பங்களை அனுப விக்க உயிர்க்கு பூதசார சரீரம் வழங்கப்பட்டு இன்பம் நுகர்விக்கப் படுகிறது.இப்படி அமைவதும் ஒருவகை பிறப்புதான்.அதனால்தான் எல்லா பிறப்பும் பிறந்திளைத் தேன் எம்பெருமான் என்கிறார் மணிவாசகப்பெருந்தகை.

" - ஏற்ற பிறப்பு
எல்லாம் பிறந்தும் இறந்தும் இருவினையின்
பொல்லாங்கு துய்க்கும் பொறியிலியேன் - கல்லா"
( நெஞ்சுவிடு தூது )

அயர்ந்தும்,அழிந்தும்,ஆகியும் அந்தோ இந்த உயிர்கள் படும் துயரம்சொல்லொண்ணாதது ஆகும்.இருவினையின் பயனால் உயிர்கள் மீண்டும் மீண்டும் பிறப்பு எய்தும் என்பது உண்மை.

"காயத்துள் மெய்ஞானக்கள் உண்ண மாட்டாதே
மாயக்கள் உண்டார் என்று உந்தீபற
வறட்டுப் பசுக்கள் என்று உந்தீபற " ( திருவுந்தியார் )

மெய்ஞானக்கள் என்பது இறைவனது திருவடி.மலர்களை யும் வறட்டுப்பசுக்கள் என்பது உயிர்களை ஆட்டுகின்ற ஆணவமலத்தை குறிக்கும்.அதனால்தான் அருணகிரிப் பெருமான் "பதிஞான வாழ்வைத் தருவாயே " என்று முரு கனிடம் வேண்டுகிறார்.பசுவான உயிர்கள் பதியாகிய இறைவனுடன் சேர்ந்து வாழ்வதே உண்மையான வாழ்வு என்று பேசப்படும்.உயிர் கொண்டிட்ட இவ்வுடலால் ஒரு பயனும் இல்லை என்று உணர்வீர்.

" மங்கையழுது விழவே யமபடர்கள் நின்று சருவ
மலமே ஒழுக உயிர் மங்கு பொழுது கடிதே
மயிலின் மிசை -- வரவேணும். " ( திருப்புகழ் )

மனைவியும் பிறரும் அழுதுவிழ நம் உறுப்பில் மலம் வெளிவர இஉயிர் உடல்விட்டுப் பிறியும்.அப்போது நீ மயிலில் வந்து காக்கவேண்டும் என்று வேண்டுகிறார். ஞானம் பெற்றவர்களுக்கு இந்த உபாதை இருக்காது என்பது பொருள்.

"ஊங்கிருமல் வந்து வீங்கு குடல் நொந்து ஓய்ந்துணர்
வழிந்து உயிர் போமுன் " ( திருப்புகழ் )

உயிர்கொண்ட இவ்வுடலால் இருமல் வரும்.குடல் உபாதை ஏற்படும்.உணர்வு அழியும்.அப்போது உயிர் உடல்விட்டு போகும்.இவ்வுடலால் உயிர்கள் பெறுவது இத்தகு நிலையே.இவ்விதம் நமக்கு வராதிருக்க இறைவன் திருவடிக்கழல் பற்றுவதே சரியான வழியாகும். எல்லா உலகுக்கும் எல்லா உயிர்களுக்கும் இறைவனே உயிர்.ஆகவே ஒப்பற்ற உயிரானவனை இவ்வுயிர்கள் பற்றி பயன் பெருவதே சிறந்த உபாயமாகும் எனக்கண்டு தெளிவோம் பிறர்க்கும் தெரிவிப்போம்.

வாழ்க வளமுடன் . வாழ்க நலமுடன்.

---

உயிர் உயிரை உற்றால் உயிராகும்
உயிர் உவக்க உளமுடனே – பயிர்
செழிக்கக் காணலாம் சிந்தையால் இதனை
வழியாய்க் காண்பவர் வாழ்வரே " ( ஆசிரியர் )

# அறிவு

அறிவு அறிவு அறிவு எங்கும் எதிலும் இதே பேச்சு.இவ்
வறிவானது எப்படி இருக்கும்.அதன் நிறம் மணம் குணம்
என்ன என்பது எத்தனையோ பேருக்கு புரிந்தும் புரியாத
வண்ணமாகவே விளங்கக் காணலாம். அறி + வு = அறிவு
என்றாகும். அறி = என்றால் உணர்தல்,தெளிதல்,அனுப
வித்தல் என்பது பொருளாகும்..வு = என்றால் உரைத்தல்
உணர்தல் உவத்தல் என்பது பொருள்.ஆக அறிவு
என்றால் அறிந்ததை அதாவது தெரிந்து கொண்டதை
மற்றவர்களுக்கு உணர்த்துவது என்பதும் பொருளாகும்.

ஒரு கிராமத்தான் ஒருவன் தன் மகனுடன் இறவில் ஒரு
சத்திரத்தில் நுழைகின்றனர்.படுக்க இடம் தேடுகின்றனர்
கூடம் முழுவதும் நிறையபேர் படுத்துள்ளனர்.இவர்கள்
இருவரும் ஒரு மூலையில் எப்படியோ இடம்பிடித்து
படுக்க துவங்குகின்றனர்.பக்கத்தில் ஒரு சந்நியாசி படுத்
திருக்கிறார்.தூக்கத்தில் இருவரும் சாமியார் மீது கால்
தூக்கிப் போடுகின்றனர்.துறவி தூங்காமல் எழுந்து உட்
கார்ந்துகொண்டு அறிவு இல்லாத ஜன்மங்கள் என்று
புலம்புகிறார்..இது கிராமத்தான் காதில் விழுகிறது.விடிந்
ததும் கிராமத்தான் தன் மகன் கையில் பணம்
கொடுத்து கடைக்குச் சென்று அரைகிலோ அறிவு வாங்கி
வா என்று அனுப்புகிறான்.பையனும் பணம் வாங்கிக்
கொண்டு கடைக்குப் போகிறான்.கடைக்காரர்கள் அப்
போதுதான் கடைகளை திறக்க ஆரம்பிக்கின்றனர்.சிறு
வன் கடைக்காரனிடம் அறிவு இருக்கிறதா என்று கேட்
கிறான்.கடைக்காரன் முறைக்கிறான்.பையன் பயந்து
அடுத்த கடைக்குச் சென்று அரைகிலோ அறிவு கொடுங்
கள் என்று கேட்கிறான்.அந்த கடைக்காரன் அச்சிறு
வனை நய்யப்புடைத்து அனுப்புகிறான்,அவன் அழுது
கொண்டு அப்பாவிடம் வருகிறான்.

ஒரு ஊரில் அறிவாளி என்ற பெயரில் ஒருவன் இருந்தான்.அவ்வூர் மக்களும் அடுத்த வூர் மக்களும் எதுகேட்க வேண்டுமானாலும் அவனிடம் வருவார்கள்.ஒருவன் வந்து அந்த அறிவாளியிடம் என்கைவிரலில் புண் வந்திருக்கிறது என்ன செய்யலாம் என்று கேட்டான்.அறிவாளி சட்டென்று விரலை வெட்டிவிடு சரியாய்ப் போய்விடும் என்று சொன்னான்.மற்றொருவன் அறிவாளியிடம் ஐயா எனக்கு மூன்று நால் ஜுரம்.நிற்க்கவே இல்லை.என்ன செய்யலாம் என்றான்.அறிவாளி பேதிக்கு சாப்பிடு ஜுரம் வெளியே வந்துவிடும் என்றான்.ஒருபெண் வந்து ஐயா அறிவாளி அவர்களெ என்பெண்ணை புருசன் கைவிட்டு விட்டான் என்ன செய்யலாம் என்றாள்.அப்படியா நீயும் விட்டுவிடு என்றான்.இவனுக்கு அறிவாளி எனப்பெயர்.

உண்மையான அறிவை அதாவது இறை அறிவை அறிகின்ற அறிவுதான் அறிவு ஆகும்.." அறிவால் அறிந்து இருதாழ் இறைஞ்சும் அடியார் இடைஞ்சல் களைவோனே " என்கிறார் அருணகிரிப் பெருமான் அதாவது ஒன்று அறியும் பொருள்,மற்றொன்று அறியப் படும் பொருள்.

அறியும் பொருள் --- ஞானம் ( அறிவு )

அறியப்படும் பொருள் -- கடவுள்

உள்ளக்கண்கொண்டு உள்ளத்தை நோக்க அருள்வாயே என்கிறார் அருணகிரியார்.நெருப்பு எரிந்துகொண்டிருக்கிறதுஅது நெருப்பு என்பது அனைவருக்கும் தெரியும் ஆனால் அதில் பொதிந்துள்ள மூலப்பொருளை சரியாக விளங்கிக்கொண்டோம் இல்லை.அப்படி விளங்கினால் அதுவே அறிவு.

அதாவது நெருப்பின் நிறம் -- காட்சி அறிவு ( SIGNIFICIANCE ACT )

நெருப்பின் ஒளி--- விலக்கும் அறிவு.(AVOIDING ACT )

நெருப்பின் சூடு --- மெய்யறிவு / புலன் அறிவு ( TROUTH OR BODY ACT )

நெருப்பின் வடிவம் --- மயக்க அறிவு ( CONFUCING ACT )

நெருப்பின் புகை —உறுதி அறிவு.( DETERMINATION ACT ) இவ்வகையாக அறிவின் வகைகளைப் பிரித்துப்பொருள் கொள்வார்கள்.இதன் விளக்கம் இவ்வாறு அமையும்.
HERE THE SENCE IS MENTIONED AS ACT .
<u>காட்சி அறிவு</u> :- கண்ணுக்குப் புலப்படும் ஒன்றை அவ் வளவில் உருவம்,நிறம்,திரம்,இவைகளைக் கொண்டு இன்னது என்று உணர்ந்து கொள்ளுதல். காலையில் ஒருவன் அடிபட்டு வீழ்ந்திருக்கிறான்.அது பார்த்தவுடன் தெரியும் விபத்து.( ACCIDENT ) நடந்து உள்ளது என்று புரிந்து கொள்கிறோம்.இதுவே காட்சி அறிவு.
<u>விலக்கும் அறிவு :-</u> விளக்கு எரிந்ததும் இருள் விலகுவது போல் உணர்வினால் விலக்கி காண்பது விலக்கு அறிவா கும்.அதாவது சாலையில் விபத்துக்குள்ளானவரிடம் செல்லக்கூடாது தொடக்கூடாது என்று நம்மை விலக்கு கிறதல்லவா இதுவே விலக்கு அறிவு.
<u>மெய் அறிவு அல்லது புலன் அறிவு :-</u>உண்மையை அறிந்துகொள்ளப் பயன்படுவது மெய் அறிவு ஆகும்.அல் லது புலன்களால் அறிவது.மெய்,வாய்,கண்,மூக்கு,செவி களால் அறியப்படும் அறிவு புலன் அறிவு ஆகும்.விபத்துக்குள்ளான் மனிதன் எந்நிலையில் எப்படி எதற்காக ஆனான் என்று துல்லியமாக அறிதல் மெய் அறிவு ஆகும். அவ்விபத்துக்குள்ளான மனிதனிடமிருந்து வெளிப்படும் நாற்றமும் புலன் அறிவாகும்.
<u>மயக்க அறிவு :-</u> இங்கு காணும் காட்சி உண்மையோ பொய்யோ என்று விளங்க முடியாமல் காண்பது மயக்க அறிவு ஆகும்..விபத்துக்குள்ளான மனிதன் உயிர் இருக் கிறதோ அல்லது பிறிந்து விட்டதோ என்று கருதுவது மயக்க அறிவு ஆகும்.
<u>உறுதி அறிவு :-</u> காணும் காட்சியின் உறுதிப்பொருளை தீர்க்கமாக முடிவெடுக்கும்படி உணர்வது உறுதி அறி வாகும்.அதாவது விபத்துக்குள்ளான மனிதன் பேருந்தில் அடிபட்டு ஈழ்ந்துள்ளான். அடிபலமாக பட்ட காரணத்தி னால் உயிர் பிறிந்து விட்டது.பாவம் அவனது விதி முடிந் துவிட்டது என்று விளங்க வைப்பது உறுதி அறிவாகும்.

இவ்வைந்தையும் அப்படியே நேர்மாறாகப் பாருங்கள்.இன்னும் பல உண்மைகள் உங்களுக்கு புலப்படும்.

1.இவ்வுலகும்,தனு,கரண,புவன,போகங்களும்,உயிர்களும்., கடவுளால் உண்டாக்கப் பட்டது,என்று நாம் அறிவால் காண்பது காட்சி அறிவு.

2.இவ்வுலக மாயையில் சிக்கக்கூடாது.ஆணவ மலத்தில் இருந்துவிடுபடவேண்டும்.பாசபந்தங்களால் சிக்காது இறையருளைப் பெறவேண்டும். என்று உணர்த்தி இவ் உலக பந்தத்தில் இருந்து நம்மை தூரப்படுத்துவது விலக்கும் அறிவு ஆகும்.

3:உடலும் உடலுக்குள் உயிரும் இருப்பது மெய்.இவ்விரண்டுக்கும் உடமை ஆனவர் இறைவன்.கடனாகப்பெற்ற உடம்பு இறுதியில் கடவுளுக்கே சேர்வது என்ற உண்மையை உணர்த்துவது மெய்யறிவு ஆகும்.

4.ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களால் ஆட்கொள்ளப்பட்டு உயிர்கள் மயங்குகின்றன.பிறவிப் பெருந்துன்பம் நீக்க இயலாமல் தவிக்கும் நிலையே மயக்க அறிவு.

5.புகை வந்தால் நெருப்பு இருக்கும் என்று உறுதிப்படுத்துகிறோம்.அதுபோல் உலகமும் உயிர்களும்,உண்டான போதே அவைகளுக்கு உடையவனாக இருப்பது இறைவனே.அவ்விறைவனை. சென்று சேறுதல் நிலைபேறு ஆகும். இதுவே உறுதி அறிவு ஆகும்.இவ்விதம் பேரின்ப பெருமைகளைப் பேசுவதற்க்குப் பிறப்பிக்கப்பட்டவையே இவ்வைந்தறிவு ஆகும்.இவைகள் தவிற ஆறாவது அறிவு ஒன்று உள்ளது.அதுவே ஞான அறிவு ஆகும்..மனிதனுக்கு மட்டுமே பகுத்தறியும் ஆறாவது அறிவு உண்டு. அதுவே ஞான அறிவு ஆகும்.ஞான அறிவு என்கிறபோது உலககர்மங்களில் ஈடுபடும்போது விளையும் நன்மை தீமைகளை மட்டும் உணர்ந்து வெளிப்படுத்துவதுடன் அனைவரும் அறியப்படும் பொருளாக இருக்கும் இறைவனை எல்லாரும் அறிந்து கோள்ளச்செய்வது ஞான அறிவு ஆகும்.ஞானம்பெற்றவன் மாயையிலிருந்து விலகி நிற்பான்.அந்நிலையே அவனை அறியும் அறிவு.

உலக போகங்களையும் உலக அனுபவங்களையும் அறி யும் அறிவு வேறு.,உடையவனாய் இருக்கும் இறைவனை அறியும் அறிவு வேறு.இதனையே சித்தாந்தமும் வேதாந்த மும்,பதிஞானம்,பசுஞானம்,பாசஞானம் என்று கூறுவார் கள்.அழகான இயற்க்கைக் காட்சியை உங்கள் கண்களை துணியால் கட்டிவிட்டு காணும்படிச்சொன்னால் எப்படிக் காண்பீர்கள்.அப்படி இயற்க்கைக் காட்சியாக இருப்பவர் இறைவன்.( பதி )அவரைப் பார்க்கும் கண்களை உடைய நீங்கள் (பசு)உயிர்.உங்கள்கண்களை கட்டிய துணிமாயை (பாசம் )இம்மூன்றையும் கண்டு தெளியும் அறிவே சிறந்த அறிவாகும்.(FILTERD SENCE )இவ்வறிவு கைவரப்பெற்றால் அப்புறம் உங்களது யோகப்பயிர்ச்சிக்கும் ஞானமார்க்கத் துக்கும் யாரும் தடைவரமுடியாது.

" அறிவெனில் வாயில் வேண்டா அன்றென்னில் அவை தாம் என்னை,அறிவதையுதவும் என்னில் அசேதனம் அவைதாம் எல்லாம் அறிபவன்,அறியுந்தன்மையருளுவன் என்னில் ஆன்மா அறிவிலதாகும் ஈசன் அசேதனத்து அளித்திடானே " ( சிவப்பிரகாசம் )

உயிர் எதனையும் தானாக அறியும் தன்மைபெற்றது அல்ல.இறைவன் அறிவிக்க அறிவது உயிர்.அறிவித்தபடி புலன்கள் வழி நுகரும் செயலுக்கு அசேதனம் என்று பேர்.ஆன்மாக்கள் நன்மை பெற வேண்டும் என்னும் கரு ணையால் இறைவன் அறிவிக்கின்றார் என்னும்போது பிறந்த உயிர்கள்மேல் ஏன் இறைவன் கருணை இரக்கம் வைக்க வேண்டும் என்பது கேள்வி.இவை இல்லாவிட் டால் அச்சக்திக்கு இறை என்ற பேர் இல்லை என்று பொருள். அறிவை ஆய்வு செய்து ( RE-SEARCH ) செய்வது எங்ஙனம். என்பது பொருள்.பிறப்பிக்கப்பட்ட நானோ அறிவிலா மனமுடையவன் என்கிறார் திருநாவுக்கரசு சாமிகள்." அறிவிலங்கு மனத்தானை அறிவார்க்கன்றி அறியாதார் "இறைவன் ஒருவனைத்தவிற வேறு யாரும் அறிய முடியாது என்பது இதன் பொருள்.இவ்விதம் சொல்லப்பட்டவைகளால் அறிவு என்பது உயர்ந்த பொரு ளாகும்.அது இறைவனால் உணர்த்தப்படுவது.

உயிரானது இப்பிறப்பில் அறியப்படும் செம்பொருள் இறைவனே ஆகும்..அவ்வுணர்வே பிறவிப்பிணியை தீர்க்கவல்லது என்று நம்மை அறியவைப்பதும் அவன் தந்த அறிவேயாகும்.உலகு 93 தத்துவங்களாலும் உடல் 36 தத்துவங்களாலும் ஆக்கப்பட்டது என்ற உண்மையை அறிந்து கொள்வதும் நமது சமயம் நமக்கு காட்டும் பெருமை ஆகும்.வேற் சமயங்களில் இல்லாத சிறப்பு நமது சமயத்துக்கே உண்டு என்று காணும்போது உள் ளம் இரும்பூதெய்துகிறது.ஆம் அறிவால் அவனை அறிந்து அனுபவிப்போம் ஆனந்தப்படுவோம்.

பிறிவறியாப் பெருமானைப் பிறிவின்றி கூடியே
செறிவினைக் கொண்டால் செழிப்பு – பரிவுடன்
அறிவானவன் அடிக்கமலம் அடைந்து அன்பால்
அறியக் காண்பதே அறிவு. " ( ஆசிரியர் )

# உறவு

உறவில்லா மானிடப்பிறவி இல்லை.எல்லாரும் ஒருவித மான உறவுடன் இங்கு வந்துள்ளோம்.மண்ணின் உறவு அப்பா,அம்மா,தங்கை,அண்ணன்,தம்பி சிற்றப்பா,பெரி யப்பா என்று வருவதுமகான்களும ஞானிகளும் இங் கிருந்து கொண்டே விண்ணில் இருப்பவர்களுடன் தொடர்பு வைத்துக்கொண்டனர்.அதற்க்குச்சாதமாக அமைந்தது ஆன்மீகம்.ஊன்றுகோலாய் கிடைத்தது பக்தி.விஞ்ஞானத்தின் கண்டுபிடிப்பான ராக்கட்டின் மூலம் கூட மேலே சென்று வருகின்றனர்.அதனால் மானிடப்பிறவிக்கு வாய்த்த நன்மை என்ன வென்று பார்த்தால் ஒன்றுமில்லை.விஞ்ஞான வளர்ச்சியால் இன்று நாட்டில் அமைதி உண்டா என்று பார்த்தால் இல்லை. எங்கு பார்த்தாலும் போராட்டம்,வன்முறை,கலவரம்,சுய நலம்,நீதியின்மை,தர்மம் சாகடிக்கப்படுதல் இப்படிப் பட்டியல் நீண்டு கொண்டே போகும்.இவைகளுக்கெல் லாம் காரணம் மனிதர்களுக்குள்ளே நல்ல உறவு ஏற் படாததே யாகும்.

அருணகிரிப்பெருமான் அக்காலத்தில் அரசனாக இருந்த பிர்புடதேவ மன்னனது கண் பார்வை போய்விட்டதறிந்து தேவலோகம் சென்று பாரிஜாத மலர் கொண்டுவந்து அரசனது கண் பார்வை வரச்செய்தார்.அவர் என்ன ராக் கெட்டிலா சென்றார் இல்லை.இறைவனோடு வைத்துள்ள உறவினால் சென்று திரும்ப முடிந்தது.உறவு என்ற சொல்லில் இருந்துதான் உறவினர் என்ற சொல் வந்தது. உறவினர் என்றால் உதவுபவர்கள் என்பது பொருள்.இக் காலகட்டத்தில் இப்பொருள் விளங்க உறவினர்கள் உள் ளார்களா என ஆய்வு செய்வதை உங்களுக்கே விடப்படு கிறது.உற + வு = உறவு ஆகும்.உற என்றால் உற்றது என்றும், வு-என்றால் உதவுதல்,உவத்தல்,உபசரித்தல் இப் படி பல பொருள் தரும்.கோவிந்தனுடன் கொள்ளும் உறவுதான் உண்மையனது என்கிறார் ஆண்டாளம்மை.

"அறிவொன்றும் இல்லாத ஆய்குலத்து உன்தன்னை
பிறவிபெருந்தனை புண்ணியம் யாமுடையோம்
குறைவொன்றும் இல்லாத கோவிந்தா உன்தன்னோடு
உறவேல் நமக்கிங்கு ஒழிக்க ஒழியாது "( திருப்பாவை )
இவ்விதமே உறவு என்னும் சொல் வந்தது.நாளடைவில்
நாம் இறைவனோடு வைத்துக்கொள்ளும் பற்றை உறவை
விலக்கிக் கொள்வதாலேயே வாழ்வில் நமக்கு இன்னல்
கள் வந்து சேர்கிறது.இறையுறவு வைத்துக்கொண்டால்
இன்னல் இருக்காது.தவறானவர்களுடன் வைத்துக்கொள்
ளும் உறவாலே வாழ்க்கை நிலை தடுமாறிவிடும்.
"உறவு கொள் மடவார்கள் உறவாலே " ( திருப்புகழ் 0
இப்படிப்பட்ட உறவுகள் உறவாகாது.
"மகவாவினுச்சி விழியாசனத்தில் மலைநேர் புயத்தில்
உறவாடி " ( திருப்புகழ் - செகமாயை )
என்றும் எப்போதும் உயர்ந்ததாக இருக்கும் ஈறைவனு
டன் அன்பால் வைத்துக்கோள்லும் உறவே உயர்வான
தாக இருக்கும் என்று இத்திருப்புகழ் கூறுகிறது.
"உறவொடு புனைதர நினை தரும் அடியாரொடு ஒன்றாக
என்று பெறுவேனோ ' ( திருப்புகழ் - கரையரவருகுதல் )
உன்னையே நினைந்து போற்றும் நின் அடியார்களோடு
ஒருவனாக சேர்ந்து உறவாடும் நிலை என்று பெறுவேன்
என்கிறார் அருணகிரிநாதர்.ஆன்றோர்கள் எல்லாரும்
இறைவனுடன் வைக்கும் உறவே சிறந்தது என்று சொல்
லிச்சென்றுள்ளனர்.அதை உணராதது மானிடரே.தியாகப்
பிரமம் அவர்கள் இராமபிரானிடம் வேண்டுகிறார் இராமா
"தொலசின பவமு சூடக நன்னு கலசிக்கோ "என்று
இறைஞ்சுகிறார்.செய்த பாவங்களைக் கணக்கிடாமல் என்
னைஏற்றுக்கொள்வீர்களாக என்று வேண்டுகிறார்

ஒருபட்டணத்தில் சாதாரண குடும்பத்தில் வந்த ஒருவன்
இருந்தான்.அவன் ஒரு குமாஸ்தா.அவன் மனைவிபெயர்
பத்மா.தினசரி கணவன் அலுவலகத்தில் இருந்து வரும்
போது எல்லாம் பத்மா கணவனிடம் சண்டை போடு
வால்.பணத்துக்கும் பட்டுப்புடவைக்கும் பஞ்சாய்ப் பறப்

பாள்.எதிர்வீட்டில் அதே அலுவலகத்தில் பணிபுரியும் அதி காரி இருந்தார்.அவர் சம்பளத்துடன் கிம்பளமும் வாங்கு வதால் வசதியுடன் வாழ்ந்தனர்.நம் கணவர் அதுபோல் இல்லையென ஆதங்கப்பட்டாள். மூன்றாவது தெருவில் உள்ள ஒருபெண் பத்மாவிடம் வந்து அம்மா உங்கள் கணவர் வேலைபார்க்கும் அதே அலுவலகத்தில் வேலை காலி இருக்கிறதாம்.அதற்க்கான இண்டர்வியூ வந்துள் ளது. உங்களுடைய கணவருக்குச் சொல்லி எப்படியாவது அந்தவேலை என்மகனுக்கு கிடைக்கும்படி செய்ய வேண் டும்.அதற்காக பிடியுங்கள் பத்தாயிரம் ரூபாய் என்று பத் மாவின் கையில் திணித்தாள் அப்பெண்.இன்னும் வேண்டுமானாலும் தருகிறேன் வேலை முடியட்டும் என்று அப்பெண் போவிட்டாள்.மாலை வீடு திரும்பிய கணவரிடம் பத்மா நடந்ததைக் கூறினாள்.பணம் பெற்று விட்டதற்க்கு மனைவியை கடிந்து கொண்டான்.இரண்டு நாட்களுக்குப்பின் அவனையும் அவன் மனைவியையும் காவலர்கள் வந்து இழுத்துச்சென்றனர்.இது ஒருவகை கணவன் மனைவி உறவு.

சிவதீட்சை பெற்ற ஒரு உத்தமர் காலைவேளையில் ஒரு சோலையில் அமர்ந்து பூஜை செய்கிறார்.அப்போது ஒரு வன் அவ்வழியே ஓடி வருகிறான்.அவனை பலர் துரத்தி வருகின்றனர்.அவன் பூஜை செய்பவரிடம் வந்து என்னை பலர் துரத்தி வருகிறார்கள்.நான் ஊர் மக்களுக்கு பல விதத்தில் துன்பம் செய்து விட்டேன் அதனால் என்னை துரத்துகின்றனர்.நான் அதோ அந்த பாறைக்குப்பின்பு ஒளிந்து கொள்கிறேன் என்னைக் காட்டிக் கொடுத்து விடாதீர்கள் என்று சொல்லி பாறைக்குப்பின்புசென்று ஒளிந்து கொண்டான்.சிறிது நேரத்தில் அவ்னை துரத்தி வந்தவர்கள் அங்கு வந்தனர். சுவாமி இப்பக்கம் ஒருவன் ஓடிவந்தான் அவனைப் பார்த்தீர்களா.அவன் பலபேர் வாழ்விலே விளையாடியவன்.அவனை சும்மா விடமாட் டோம் என்றனர்.ஐயா நான் ஒருமணி நேரமாக இங்கு அமர்ந்துதான் பூஜை செய்துகொண்டிருக்கிறேன்.இப்பக்

கம் யாரும் வர வில்லை என்றார்.ஆகட்டும்சாமி என்று வந்த கூட்டம் திரும்பி விட்டது.

ஒரு பெரிய ரத்தின வியாபாரி.ஒரு மூடனை சேர்த்துக் கொண்டு நிறைய பண மூட்டைகளுடன் மாலை நேரத் தில் ஒரு ஊருக்கு பயணம் செய்துகொண்டிருந்தனர் அமாவாசை இருட்டு.இரவில் ஒரு காட்டில் சிக்கிக் கொண்டனர்.அங்கு கள்வர்பயம் அதிகம் என்பது வியா பாரிக்குத் தெரியும்.இருவரும் பாதையை விட்டு விலகி பக்கத்தில் இருக்கும் புதரில் ஒளிந்து கொண்டார்கள். அப்போது கள்வர்கள் அப்பக்கம் வந்தனர்.வியாபாரி யுடன் வந்த மூடன் தன்சட்டைப் பையில் கைவிட்டு தான் வைத்திருந்த ஒருரூபாய் நாணயம் காணவில்லை என்று வியாபாரியிடம் சொல்லிவிட்டு பதிலுக்குகாத் திராமல் புதரைவிட்டு வெளியே வந்து தனதுஒருரூபாய் நாணயத்தை தேடினான்.அப்போது கள்வர்கள் அவனைப் பிடித்துக்கொண்டனர்.மூடன் கள்வர்களிடம் என்னை மட்டும் ஏன் பிடித்துக்கொள்கிறீர்கள்.அங்கு புதர்மறை வில் வியாபாரி நிறையபண மூட்டையுடன் ஒளிந்துள்ளார் என்று கள்வர்களிடம் கூறினான்.என்னவாகியிருக்கும் என்று நீங்களே யோசித்துக்கோள்ளுங்கள்.

ஒருஉத்தமரை துணைக்கொண்டதால் ஒரு அயோக்கி யன் உயிர் தப்பினான்.ஒரு முழுமூடனை வியாபாரி துணைக்கொண்டதால் தன்பொருள்கள் அத்தனையும் டூழந்தான்.இதுவும் ஒருவகை உறவுகளே.இவ்வாழ்வில் மனைவி நட்பு சொந்தம் பந்தம் முதலியவற்றால் விளை வது எல்லாம் தீமையாகத்தான் முடியும். என்பது லௌ கீகக் கணக்கீட்டுக் கணனி ஆகும்..(COMPUTER CALCU LATION )பிறவிக்கு நன்மை பயக்கும் உறவுகளே உண் மையான உறவுகள் ஆகும்.பட்டினத்துச்சாமி துணைக் கொண்டு பத்ரகிரியார் பயன் பெற்றார்.பரந்தாமன் துணை கொண்டு பார்த்தன் நலம்பெற்றான்.கோவிந்தன் துணை யால் குசேலர் தன் வருமை நீங்கினார்.உபமன்யு முனிவர்

துணைக்கொண்டு கண்ணபிரான் சிவபூஜை முடித்தார். ராமபிரான் துணைக்கொண்டு சுக்ரீவனும் விபீசனப்பெரு மாளும் ஆட்சி பெற்றனர்.இவைகள் மூலம் உத்தமர்கள் உறவு நன்மை பயக்கும் என்று காணமுடிகிறதல்லவா. இறைவனோடு பெறும் உறவே நமக்கு இகபரங்களை விளைவிக்க வல்லது.என்பதறியவும்."உறவனாய் நிறைந் துள்ளங் குளிர்பவன் " என்றும் " உறவார் உருத்திரபல் கணத்தினோர்கள் " என்கிறார் திருநாவுக்கரசு சுவாமிகள் மண்ணில் வளரும் உறவுகள் மண்ணோடு நின்றுவிடு வனவாகும்.ஆனால் மண்ணில் வந்து இறைவனோடு கொள்ளும் உறவு விண்ணில் சேர்ந்து வருவனவாகும். இதனையே சூட்சுமமாக காலஞ்சென்ற கவிஞர் கண்ண தாசன் அவர்கள் கூறினார்கள்.வீடுவரை உறவு,வீதிவரை மனைவி,காடுவரை பிள்ளை கடைசிவரை யாரோ என்று இதில் கடைசிவரை யாரும் இல்லை என்று முற்றுப்புள்ளி வைக்கிறார்.ஆனால் முற்றுப்புள்ளியை மாற்றி அதனைத் தொடர்புள்ளியாக மாற்றும் பொருளை யாரும் உணர்வ தில்லை.ஆம் கடைசிவரை வருபவர் கடவுளின் அருள் என்பது உண்மை..செய்திட்ட நல்வினைப்பயனால் இறை யருள் தொடர்ந்து இறுதிவரை வந்து காக்கும்.அதன்பின்பு வானுலகு வரை வந்தும் காக்க வல்லது என்பதே உண் மைக்கருத்து.எங்கும் எப்போதும் எந்நிலையிலும் இயக்க வைப்பது இறைச்சக்தி யாகும்..அது இல்லாத இடமே இல்லை.இறுதிவரை வருவது இறைச்சக்தி என்பது புல னாகும்.இதைவிட இன்னொரு பாடலைப் பாருங்கள்.அது வும் கவிஞர் கண்ணதாசன் பாடல்தான்.

" ஆயிரம் இரவுகள் வருவதுண்டு -- ஆனால்
இதுதான் முதல் இரவு
ஆயிரம் உறவுகள் வருவதுண்டு -- ஆனால்
இதுதான் முதல் உறவு. " தம்பதிகளின் முதல் இரவு காட்சியை வர்ணிக்கிறது இப்பாடல்.இதனை சிற்றின்பப் பாடல் என்றும் சொல்வார்கள்.தத்துவரீதியாக இதைக் கண்டால் இது பேரின்பப் பாடல் ஆகும்.ஆயிரம் இரவு களை சந்தித்து இருந்தாலும் இந்த இரவே நீங்கள் விழிப்

பாக இருக்கவேண்டிய இரவு.ஞானிகள் பசித்திரு விழித்திரு,தனித்திரு என்று கூறியிருப்பதால் இறைப்பசி என்னும் உணர்வோடு ,மோட்சம் என்னும் வீடுபேறு அடைய மோகவலையில் சிக்காது இருக்கவேண்டிய இரவே இந்த முதல் இரவு ஆகும்..அடுத்து ஆயிரம் உற்வு முறைகளை பார்த்திருந்தாலும் மனைவி என்னும் மாயவலையில் சிக்க வைக்கும் முதல் உறவு இதுவாகும்..கல்யாணத்தை கால் கட்டு என்றுகூட கூறுவார்கள்.இவ்வுறவில் சிக்கி அறிய முடியாத உண்மைகள் இறையுறவைப் பெறமுடியாது செய்துவிடும்.எனவே இந்த முதல் உறவில் எச்சரிக்கை யாக இருக்க வேண்டும். என்பதை இப்பாடல் தெரிவிக்கிறது என்பதைக் காணவேண்டும்.உடலுக்கும் உயிருக்கும் உறவுக்காரர் இறைவனே ஆகும் என்பது தெளிவு. கடன்பட்டார் நெஞ்சம்போல் கலங்கினான் இலங்கை வேந்தன் என்பார்கள்.இந்த வுடல் இறைவனிடம் இருந்து கடனாகப் பெற்றது.என்றாவது ஒருநாள் அதை இறைவனுக்குத் திருப்பித்தந்தே ஆகவேண்டும்.இதனை உணர்வதே உண்மை உறவு ஆகும்.

"உறவெல்லாம் பிறவிக்கு உறவாமோ -- நின்
உறவுக்கு உலகில்வேறு நிகராமோ
மரமெல்லாம் நிழல்தரும் மரமாமோ -- நின்
அருளெனும் நிழலுக்கு இணையாமோ. " என்று ஒரு கன்னடக் கவிஞர் புலம்புகிறார் பாருங்கள்.இதுவரை கூறியவற்றால் இறையருளைப் பெறுவதே சரியான உறவு என்பது புலப்படும்.அவனைஅறிவோம் அருள்பெறுவோம்

---

" பரவும் பிணிகள் பலவினும் பிறவி
உறவினைக் களைந்து உறுத்துமே --- இறை
சிந்தனை கொண்டார் செழிப்பர் என்றும்
நிந்தனை நிலத்தில் நில்லா. " ( ஆசிரியர் )

# பாசம்

பாசம் என்பது மானிடரைப் பற்றும் ஒருவித பந்தம். கொடி,ஆசை என்று பல்பொருளால் விளங்குவதாகும். இப்பாசங்களைக் களைந்தவர்கள் மட்டுமே எமதர்மனது பாசத்தி இருந்தும் தப்ப முடியும் என்பது உறுதி.
"சூலம் பிடித்து எமபாசம் சுழற்றித் தொடர்ந்து வரும்
காலன் தனக்கு ஒருகாலும் அஞ்சேன்கடல் மீது எழுந்த
ஆலம் குடித்த பெருமான் குமாரன் அறுமுகவன்
வேலும் திருக்கையும் உண்டே நமக்கு ஒரு மெய்த்
துணையே " ( கந்தர் அலங்காரம் )
எமதர்மன் பாசக்கயிற்றை சுழற்றி வீசி உயிர்களைப் பற்றுவது அவன் தொழில்.அப்போது ஏற்படும் வேதனைய தவிர்க்க வேண்டி நாம் ஒரு உண்மையான துணையை வாழ்கின்றபோது கொண்டுவிட வேண்டும்..மந்திரி மகன் அல்லது உறவினர்களை காவல் துறைபிடிக்க முடியுமா அதுபோல் இறைத்துணை உள்ளவரை எமதர்மன் . நெருங்கமாட்டான்.

பா + ச் + அம் = பாசம்.

பா -- என்னும் பகுதியின் பொருள் பிடித்தல் பற்றுதல் என்பது. ( CATCH )

ச் -- என்னும் இடைநிலையின் பொருள் இருத்துதல் என்பது. ( STAND )

அம் -- என்னும் விகுதியின் பொருள் அழுத்துவது என்பது.. ( DEFUND )

ஆக பாசம் என்பது நம்மைப் பற்றி இருத்தி அழுத்தி துன்புறச்செய்யும் ஒருவகைக் கொடி என்பது விளங்கு கிறது அல்லவா.இந்தப்பாசத்தின் கிளைகளாக கருதத் தக்கவைகள் பாகுபடுத்தி காணும்போது இவ்வாறு பிரிந்து நின்று தோன்றும்.இவைகள் எல்லாம் உயர்ந்ததா இறை அருள் உயர்ந்ததா என்று நீங்களே சிந்தியுங்கள்.உங்கள் மனத்துக்குள்ளேயே தெளிவு பிறக்கும்.கீழ் வருவனவே பாசத்து முதல் அதிப்படைத்தடம் என்பது புரியும்.

1.உறவுகள் :- தாய்,தந்தை,சகோதர,சகோதரிகள்,குழந்தை அத்தை மாமா இப்படி.( RELATIONSHIP )

2.ஆசைகள் -- வாழ்க்கைக்கு அதுவும் வசதியான வாழ்க்கை வாழ்வதற்க்குத் தேவைப்படும் எல்லா பொருள்கள் மீதும் உள்ள பற்றுக்கோடு ( ENJOYMENTS )

3.செல்வம் :- நிலையான செல்வம் முதல் பலைடங்களுக்கும் மாற்றும் பொருள் உட்பட.மண் பொன் உள்பட. ( PROPERTIES )

4.பதவிகள் :- சாதாரண சிறிய பதவி முதல் பெரிய முதல் மந்திரி பிரதம மந்திரி பதவி வரை. ( POSTS & PRESTIGES )

5.புகழ் :- ஒருவர் படிப்பில் கணக்கில்லா பட்டங்கள் பெறுவது முதல் நாட்டு மக்கள் அனைவருக்கும் தெரிந்த நபராக மாறுவது வரை. ( WIDE PUBLICITY )

இவ்விதம் படரும் ஆசைகள் பற்றியும் அவைகள் தரும் இடர் பற்றியும் நம் அருணகிரிப்பெருமான் சொல்கிறார்

" <u>பெண் ஆசை பற்றியது</u> '

" அரிய பெண்கள் நட்பைப் புணர்ந்து பிணி யுழன்று
சுற்றித் திரிந்த அதமையுமுன் க்ருபயைச் சித்த
மென்று பெறுவேனோ " ( திருப்புகழ் )

"தெரிவையர்கள் ஆசை மிஞ்சி வெகு கவலையாய்
உழன்று திரியும் அடியேனை யுன்றன் அடி சேராய் "
( திருப்புகழ் 0

" <u>உறவு பாசம் பற்றியது</u> "

" உலக பசு பாசதொந்த மதுவான
உறவுகிளை தாயார் தந்தை மனைபாலர் "
( திருப்புகழ் )

" <u>பிறவி பற்றியது</u> "

"தோலோடு மூடிய கூரையை நம்பிப் பாவையர்
தோதக லீலை நிரம்பிச் சூழ்பொருள்
தேடிட வோடி வருந்திப் புதிதான "(திருப்புகழ்)
எலுப்புத்தோல் மயிர் நாடி குழாமிடை இழுக்குச்சீபுழு

வோடடை மூளைகள் இரத்தச்சாகர நீர்மலமேவிய கும்பி யோடை. ( திருப்புகழ் )

<u>'பொருள் தேடுதல் பற்றியது'</u>

"இக்கார் சரத்து மதனுக்கே இளைத்துவெகு வாகக்
கலம்ப வகை பாடிப்புகழ்ந்து பலதிக்கோடு
திக்குவரை மட்டோடி மிக்க பொருள்
தேடிச்சுகந்த அணை மீதிற்றுயின்று சுகமட்டார் தரத்
துருகி விட்டார் முலைக்குளிடை மூழ்கிக்கிடந்து
மயலாகித் தொலைந்து சில பிணியது மூடிச்
( திருப்புகழ் )

இவ்விதம் வகைப்படுத்தி ஆயிரக்கணக்கான பாடல்களில் சொல்லிய பெருந்தகை அருணகிரிப்பெருமான்.அவர் வாக் கெல்லாம் அமுத வாக்கே என்பது உறுதி.இப்படி மானி டரைப்பிணிக்கும் தளையாகிய பாசத்துக்கு ஏழுவகை யான குணங்கள் உண்டு என்கிறார் அருள்திரு சகல ஆகம பண்டிதர் ஆகிய அருள்நந்தி சிவம் அவர்கள்.

1.அஞ்ஞானம் ;-நிலையான பொருள் எது நிலையற்ற பொருள் எது என்பது பற்றிய அறிவு இல்லாமை.
( WHICH IS CORRECT WHICH IS TROUTH .CAN NOT ABLE TO DECIDE BY SENCE )

2.பொய் :-உண்மையற்ற வற்றை கூறுதல்.
( BREATHING WITH BLUFF )

3.அயர்வு :-அறிந்த ஒன்றை மறந்து மயங்கி வருந்துதல்.
( FEELINGS BY FORGETTING THE REAL FACT )

4.மோகம் :-இழிவான பொருள்களில் விருப்பம் கொள்ளு தல்.( ATRACTION WITH BAD THINGS )

5.பைசாசூனியம் :-வளமாய் இருந்தும் கருமியாய் இருத் தல்.LIVING WITH ALL WEALTH BUT NOT WITH CURTESY

6.மாற்சரியம் :-பிறரிடத்துப் பொறாமை கொள்ளுதல்.
( GELUS WITH OTHERS )

7.பயம் :- அஞ்ச வேண்டாத வற்றிக்கு அஞ்சுதல்
( UNNECESSARY FEARS AT ANY WHERE )

இவ்வாறு பாசத்தின் குணங்கள் ஏழு என்று பகுத்துக் காட்டப் படுகிறது.உண்மையை ஆய்ந்தறியும் அறிவு

தேவை.இங்கு ஒரு பழமொழி நினைவுக்கு வருகிறது. இலுப்பை பூத்தென்ன ஈயாதான் வாழ்ந்தென்ன.என்று அதனால்தான் ஞானிகள் கூறினார்கள் அற்றது பற்றெ னில் உற்றது வீடு என்று.வள்ளுவப்பெருந்தகையும் சொல் கிறார்" ப்ற்றுக பற்றற்றான் பற்றினை பற்றி அப்பற்று விடர்க்கு என்று "இப்பற்றுகளே பாசம் தளை என்ப தாகும்.

ஒருவன் கடற்கரையில் அமர்ந்திருந்தான் கடலைப்பார்த்த படி.அவனைப்பார்த்து வேறு ஒருவன் கேட்டான் ஏன் இப் படி உட்கார்ந்திருகிறாய் என்று.அதற்க்கு அமர்ந்திருந்த வன் சொன்னான் கடலில் குளிக்க வேண்டும்,அலைகள் அடங்கட்டும் என்று அமர்ந்துள்ளேன் என்று கூறினான். அலைகள் எப்போது அடங்குவது எப்போது குளிப்பது. அதுபோல்தான் குடும்பப்பாசங்களும் மாயைகளும் எப் போது விலகுவது எப்போது இறைவனைக் காண்பது.இப் பிறப்பில் முதலில் செய்யவேண்டியது பாச நீக்கம் ஆகும். பைவரும் கேழும்பதியும் கதறப் பழகி நிற்க்கும் ஐவரும் கைவிட்டு மெய்விடும்போது ஐயா உன் அடைக்கலமே. என்று அருணகிரியார் கூறுகிறார்.மேலும் பாசமாம் பற்று அறுத்து பாரிக்கும் ஆரியனே என்று மணிவாசகரும் கூறு கிறார்.பாசம் என்பது ஒரு கட்டு.அது வினையின் மூன்றா வது பாகமாகிய மாயையில் இருந்து விளைவது.மாயை மயக்கமும் செய்யும் என்பது உண்மை.அந்த மயக்கம்தீர இறைவனை மந்திரத்தால் ஜபிக்க வேண்டும். " உலகபசு பாசதொந்தம் அதுவான உறவுகிளை தாயார் தந்தை மனை பாலர்."என்று அருணகிரிநாதர் கூறுகிறார்.உல்கில் உள்ள பாசங்கள் வீடு ம்னைவி மக்கள் தாய் தந்தை இப் படிப்பெருகும்.இறைச்சிந்தனைமேற்பட மேற்பட இவை கள் மறக்க முற்படுகிறோம்.பாசம் நீங்கும். மாயை நீங் கினால் பிறவி நீங்கும்."மாயப் பிறவி மயக்கம் அறுத்து திருந்திய முதல் ஐந்தெழுத்தும் தெளிவாய் பொருந்தவே வந்தென் உளம் தனில் புகுந்து "என்கிறார் ஔவைப் பிராட்டியார் தமது விநாயகர் அகவலில்.ஆகவே நம்

பிறவி நீங்கவும் துணை வருவது சிவயநம என்னும் ஐந் தெழுத்து மந்திரமே என்றும் கூறப்படுகிறது.

"ஆசையறாய் பாசம் விடாய் ஆனசிவ பூசைபண்ணாய்
நேசமுடனைந் தெழுத்தை நீ நினையாய் --சீ சீ
சினமே தவிராய் திருமுறைகள் ஓதாய்
மனனே உனக்கென்ன வாய். " ( திருவருட்பா )

ஆசைகளை விடவேண்டும்,ஆண்டவனைப் போற்றிப் பாடவேண்டும்,திருமுறை ஓதவேண்டும்,சினம் தவிர்க்க வேண்டும் இப்படி பட்டியல் இட்டு காட்டுகிறது திரு வருட்பா.இம்மண்ணில் நாம்பிறப்பது அவரவர் வினைவழி என்று ஏற்கனவே காட்டப்பட்டுள்ளது.இதோ கீழ் வரும் திருவருட்பாவும் அதை உறுதிப்படுத்துகின்றது.

" அவரவர் வினைவழி அவரவர் வந்தனர்
அவரவர் வினைவழி அவரவர் அநுபவம்
எவரெவர்க் குதவினர் எவரெவர்க் குதவிலர்
தவரவர் நினைவது தமையுணர் வதுவே "
( திருவருட்பா )

நாம் செய்யும் கர்மங்களாலும்,அதனால் விளையும் பாவ புண்ணியங்களாலும் நாம் மண்ணில் பிறப்பெடுக்கிறோம் இதற்க்கு நாமே காரணமன்றி வேறு யாரும் காரணமாக மாட்டார்கள்.இப்பிறப்பு தவிர்க்க வேண்டுமானால் பேசா அநுபூதி பிறக்க வேண்டும் என்கிறார் அருணகிரியார்.

"தூசா மணியும் துகிலும் புனைவாள்
நேசா முருகா நினதன் பருளால்
ஆசா நிகழம் துகழாயின பின்
பேசா அநுபூதி பிறந் ததுவே. " ( கந்தர் அநுபூதி )

ஆசை எனும் கொடிய பாறையை வெடிவைத்து தகர்க்க வேண்டும்.இன்னும் ஒருவர் சொல்கிறார் பாருங்கள்

"பேசா அநுபூதி பிறக்க என துள்ளத்தில்
ஆசா பசாசை அகற்றுவாய் --- தேசாருஞ்
சிற்பரானந்தா திருவால வாயுறையுந்
தற்பரா சொக்க நாதா "
( குருஞானசம்பந்த சுவாமிகள் )

ஆசையை பேய்க்கு ஒப்புமை காட்டுகிறார் சுவாமிகள்

பிறவிக்கு இடையூறு வகுக்கும் பாசத்திரைகளை விலக்க வேண்டும் ஆசைகளைக் கொல்ல வேண்டும்.ஒருவர் சொல்வார் எல்லாம் விதிப்பயன் என்று..எதுநடந்தாலும் விதியேதான் என்று.உண்மை என்னவெனில் நாம் செய் வதுதான் விதியே தவிர விதி அல்ல செயல் என்பது,

"உலகினில் என்செயல் எல்லாம் உன்விதியே நீயே
உள்நின்றும் செய்வித்தும் செய்கின்றாய் என்னும்
நிலவுவதோர் செயல் எனக்கு இன்று உன்செயலே
என்றும்
நினைவார்க்கு வினைகள் எல்லாம் நீங்குந்தானே "
( சிவஞான சித்தியார் )

எனவே விதியும் மதியும் இறைவன் தருவது ஆகும். அவன் தரும் மதி கொண்டு பாசப்பந்தங்களை களைந்து அவனடி சிந்தித்தால் சித்திக்கும் வீடு பேறு. ( முக்தி ) என்பதில் ஐயமில்லை என்றறிவோமாக.

" வாசமது மலரிலுண்டு வாழ்வது அன்பிலுண்டு
பாசமது நீங்கவே பலனுண்டு --- நேசமுடன்
வேண்டிட இறையருள் விளைந்து வந்தேதான்
ஈண்டிய இன்பம் ஈனும் " ( ஆசிரியர் )

# அறம்

அன்பு + அறம் இவ்விரண்டும் ஆண்டவன் திருவடியடை வதற்க்கு வேண்டிய இரண்டு சாதனங்கள் ஆகும்.இவ் விரண்டும் கைக்கொள்வோர் வாழ்விலே பக்திநெறி பண் பட்டு நிற்கவும் இறைவனைக்காணவும் துணை புரிகின் றன.இறைவனை வணங்க அவன் அருள் வேண்டுவது போல் தருமம் செய்யவும் அவன் தயவு வேண்டும்.அரி தான இப்பிறப்பில் தானமும் தவமும் தான்செய்வராகில் வானவர் நாடு வழி திறந்திடுமே. என்று தமிழ் மூதாட்டி யாகிய ஔவைப்பிராட்டியார் சொல்கிறார்கள்.மகாபாரதத் தில் வருகின்ற உன்னத பாத்திரமான கர்ணன் சுமார் 25 தவறுகள் செய்துள்ளான்.அத்தனையும் அடிபட்டுவிட்டது அவன் செய்த தான தருமத்தால்.தர்மம் செய்வதையும் இறைவனுக்கு அர்ப்பணித்து விட்டுச் செய்யவேண்டும். இறைவனுக்கு அர்ப்பணித்து செய்யும் தருமம் மோன வீட்டிற்க்கு வழிவகுக்கும்.இத்தருமத்திலும் சிறந்தது அன்னதானமாகும்.அதிலும் அடியார்களுக்கு அன்னம் பாலிப்பது ஆனந்தமான பலன்களைத் தரும்.

"மண்ணில் பிறந்தார் பெறும் பயன் மதிசூடும்
அண்ணலார் அடியார் தமை அமுது செய்வித்தல்
கண்ணினால் அவர் நல்விழாப் பொலிவு கண்டார்தல்
உண்மையா மெனில் உலகர் தம்முன் வருக என்பர் "
( திருநாவுக்கரசர் )

பிறைசூடிய பெருமானுடைய அடியார்களுக்கு அமுது படைக்க வேண்டும்.அப்பெருமானுடைய விழாக்கள் செய்து கண்குளிரக் காணவேண்டும்.தருமம் தலை முறை தலைமுறைகளை காக்கவல்லது என்பதை யாரும் சிந்திப்பது இல்லை.

"பொருளுடையான் கண்ணதே போகம் அறனும்
அருளுடையான் கண்ணதே ஆகும் -அருளுடையான்
செய்யான் பழிபாவம் சேரான் புறமொழியும்
உய்யான் பிறர் செவிக்கு உய்த்து. " ( சிறுபஞ்சமூலம் )

போகத்தை அனுபவிப்பவர்கள் செல்வம் உடையவர்கள் தர்மம் செய்கிறவர்கள் இறைவனுடைய அருளை அனுபவ விக்கும் தகுதி பெறுகிறார்கள்.தவிர அருள் பெற்றவர்கள் மண்ணில் கண்டிப்பாக பழிபாவம் செய்ய மாட்டார்கள் இவ்வருளுக்கு அடித்தளமாக அமைவது அறம் ஆகும் அருள் இல்லார்க்கு அவ்வுலகில்லை 'பொருள் இல்லார்க்கு இவ்வுலகில்லை என்று ஔவைப்பிராட்டியார் சொல்லி யுள்ளதை கவனிக்கவும்.

" உடம்பொழிய வேண்டின் உயர்தவம் ஆற்றீண்டு
இடம்பொழிய வேண்டுமேல் ஈகை -- மடம்பொழிய
வேண்டின் அறிமடம் வேண்டேல் பிறர்மனை
யீண்டின் இயையுந் திரு. " ( சிறுபஞ்சமூலம் )

தவம்,தானம்,பிறர்மனை விளையாமை, உள்ளத்தூய்மை இறைச்சிந்தனை இத்தனையும் உள்ள்வர்க்கு வானுலகு செல்ல வழிபிறக்கும் என்பது இதன் கருத்து.இவைகள் மனிதனுக்கு புகழைச் சேர்க்கும். இங்கும் ஔவையார் வாக்கு தானமும் தவமும் தான்செய்வராகில் வானவர் நாடு வழி திறந்திடுமே. என்பது ஒப்பு நோக்கவேண்டி யுள்ளது,

" பற்றென்னும் பாசத் தனையும் பலவழியும்
ப்ற்றறா தோடும் அவாத்தேருந் -- தெற்றெனப்
பொய்த்துரை யென்னும் பகையிருளும் இம்மூன்றும்
வித்தற வீடும் பிறப்பு " ( திரிகடுகம் )

பற்றையும்,அவாவையும்,பொய்யையும் நீக்கினால் வீடடை யலாம்.அதேபோல் எல்லா விளக்குகளும் விளக்கல்ல சான்றோர்க்கு பொய்யா விளக்கே விளக்கு என்று உறுதி செய்யப்பட்டுள்ளது.பொய் இருள்போன்றது என்பது இங்கு உவமை..பற்றுகள் இருவகைப்படும்.1.அகப்பற்று.. 2.. புறப் பற்று..தான் என்று கூறி தன் முனைப்புடன் இருப்பது அகப்பற்று.. எனது என்னும் உணர்ச்சியுடன் இருப்பது புறப்பற்று..அவா என்பது வித்து.பற்று என்பது விளைந்தி ருக்கும் செடி..இங்கு அற்றது பற்றெனில் உற்றது வீடு என்னும் பழமொழியும் ஒப்புநோக்க வேண்டியுள்ளது. இவ்விர்ண்டும் உயிர்க்கு பிறப்பைத் தரவல்லது.அதைப்

போக்குவது தருமம் ஆகும்.அதனால்தான் கணவன் மனைவி வாழ்க்கைக்கு கூட இல்லறம் என்று பெயர் வந்தது.கணவன் மனைவி செய்யும் தருமம் மற்றவர்கள் மெச்சிடுவதற்க்கல்ல.மட்டில்லா மகிழ்ச்சியும் இறைவன் அருளை அடையவேண்டும் என்பதற்க்காகவேதான்.

" தானங் கொடுக்குந் தகைமையும் மானத்தார்
குற்றங் கடிந்த வொழுக்கமுந் -- தெற்றெனப்
பல்பொரு ணீங்கிய சிந்தையும் இம்மூன்றும்
நல்வினை யார்க்குங் கயிறு " ( திரிகடுகம் )

கிராமத்து மூலிகை வகையில் சுக்கு,மிளகு,திப்பிலி இம் மூன்றும் திரிகடுகம் என்று அழைக்கப்படும்.அதுபோல் ஆன்மீகத்திலும் மூன்றுவகை கருத்துக்களைச் சொல் வதால் இதற்க்கும் திரிகடுகம் எனப்பட்டது..தானங்கொடு ப்பதலாலும்.மானங்கெடா ஒழுக்கத்தாலும், பொருள்கள் மேல்சிந்தனை இல்லாதிருப்பதாலும் நல்வினைகளே மென்மேலும் செய்யலாம்.கொடையிலே இருவகை உண்டு.தானம்,தருமம்.தானம் உடையவர்களுக்குத் தரு வது,தருமம்--இல்லாதவர்களுக்குத் தருவது.இவ்விரண்டும் வாழ்விலே ஒவ்வொருவரும் கடைப்பிடிக்க வேண்டியது. அதுபோல் இறைவனுக்குச் செய்வது தானம் என்ற அடிப் படையில் வந்தாலும் அது நன்றிக்கடன் என்ற அடை மொழியில் சிக்கிவிடும்.ஆம் இறைவனுக்கு நன்றிபாராட்டு வதே வணங்கலும்,வாழ்த்துதலும்.வழங்கலும்,வடிப்பதும், வர்ணிப்பதும்,வரிசைப்படுத்துவதும்,வழிமுறை தேடலும் என்று ஆகிவிடும் என்பார்கல் ஆன்றோர்.

வணங்கல் :- ஆலயத்திலோ அல்லது வீட்டிலோ பிற இடங்களிலோ பிறவி தந்த இறைவனை நினைத்து உள்ளம் உருகி வேண்டுதல் /நினைத்தல் என்பதாகும்.

வாழ்த்துதல் :- இறைவனது அருட்பெருங்குணங்களைக் கண்டு வாழ்த்தவேண்டும்.இங்கு வாழ்த்தவாயும் தாழ்த்த சென்னியும் தந்த தானைத்தலைவனை என்று அப்பர் பெருமான் கூறியிருப்பது அறியலாம்.

வழங்கல் :-இறைவன் ஆலயத்துக்கு பொருள்,நிலம்,வீடு பசு முதலியன்வைகளைத்தருதல்.அல்லது உற்சவம்

நடப்பதற்க்குறிய வழி வகைகளை செய்தல்.பண உதவி செய்தல்,இறைவனது நித்திய பூசைகள் நடப்படற்குரிய திட்டங்களை வகுத்தல் முதலியன,
வடிப்பது :-இறைவனது திரு உருவங்களைச் செய்தல், திருஉருவம் செய்வதற்குரிய பொருள்களைத் தருதல், திருஉருவங்களை ஓவியமாக வரைதல்,சமயச்சடங்குகள் முதலியன செய்தல் இதில் அடங்கும்.
வர்ணிப்பது :-இறைவனது கல்யாண குணங்களைவர்ணித் துச்சொல்லி பக்தியைப் பெருக்குவது.புரியாதவர்களுக்கும் தெரியாதவர்களுகும் இறைவன் பெருமை தெரிவிப்பது. நூல்கள் சாற்றும் தத்துவங்களையும் உண்மைகளையும் எடுத்துச் சொல்லுதல் விளக்குதல் முதலியன அடங்கும்
வரிசைப்படுத்துதல் :-ஆலயங்களில் தினசரி செயல்கள் அல்லது உற்சவ காலச்செயல்கள் ஓமம் முதலியன இப் படித்தான் செய்யவேண்டும் என்று வழிகாட்டி அல்லது வகுத்து வைப்பதாகும்.இதில் வைதீக நெறிகள் அல்லது ஆகம நெறிகள் என்று கூறுவதும் அடங்கும்.இறைவன் ஆகமத்துக்கு உட்பட்டவன் என்பதையும் கவனிக்கவும் ஆகவே இவைகள் மூலம் எல்லாம் நாம் தெரிந்து கொள் ளவேண்டியது யாதெனில் தருமம் செய்பவரை கருமம் பற்றாது என்பதுவே.செல்வம் சக்கரம் போன்றது.அது உருண்டு ஓடிவிடும்.ஆகவே இறைவன் பெயரால் இறை வனுக்கும் இல்லாதவர்களுக்கும் செய்யும் தருமம் பாறை யில் பொறிக்கப்படும் எழுத்துக்கள் போல் அல்லது செப் புப்பட்டயம் போல் என்று வர்ணிக்கப்படுகிறது.

"திருப்பதி மிதியாப் பாதஞ் சிவனடி வணங்காச் சென்னி
இரப்பவர்க் கீயாக் கைகள் இனிய சொற் கேளாக் காது
புரப்பவர் தங்கள் கண்ணீர் பொழிதரச் சாகா தேகம்
இருப்பிலும் பயனென் காட்டி லெரிப்பிலும் இல்லைதான்
( விவேக சிந்தாமணி )

ஸ்ரீ வெங்கடேசப்பெருமாள் இருக்கும் திருப்பதிமலை மிதியாதவன் பாதம்,சிவபெருமானுடைய திருவடிகளை வணங்காதவனுடைய தலையும்,கேட்பவர்களுக்கு தராத வனுடைய கைகளும்,இனிய சொற்களைக் கேட்காதவன்

காதுகள் தங்களைக் காப்பாற்றுபவர்கள் கண்களில் இருந்து வடியும் கண்ணீரைக் கண்டும் உயிர் பிரியாத வனுடைய தேகம் இருந்தும் பயன் இல்லை சுடுகாட்டில் எரித்தாலும் பயன் இல்லை என்று மேலே உள்ளபாடல் தெரிவிக்கிறது.இதில் ஒரு அற்புதமான் கருத்து பெறப் படுகிறது.கைகள் பெற்றது பிறர்க்கு கொடுப்பதற்க்குத் தானே தவிற பிறர்பொருளை எடுப்பதற்க்காக அல்ல, "அன்னிய பரத்துக் கீந்தாலாருயிர்க் குதவியாமே "ஆக பிறப்புக்கும் பிறந்த உயிர்க்கும் துணை பயப்பது தரு மம் என்பது விளங்கும்..

வையிற்கதிர் வடிவேலொனை வாழ்த்திவறிஞர்க்கென்றும்
நொய்யிர் பிளவணுவேனும் பகிர்மின் கணுகக் கிங்கண்
வெய்யிர்க் கொதுங்க உதவாதவெறுஉடம்பின்நிழல்போல்
கையிற் பொருளும் உதவாது காணும் கடை வழிக்கே
( கந்தர் அலங்காரம் )

ஒரு ஊரில் ஒரு கணவனும் மனைவியும் இருந்தனர். மனைவிக்கு கருமித்தனம்.அவ்வூர்மக்கள் வந்து பள்ளிக் கூடம் கட்ட பொருள்கேட்டபோது அந்த அம்மா ஒரு ஐந்து ரூபாய் தந்து பெரியவர்களது முகம் சுளிக்கவைத்து விட்டாள்.கணவனுக்கு அது மனப்புண்ணை ஏற்படுத்தி யது.மனைவிக்கு பாடம் புகட்ட எண்ணி அவளை உச்சி வெயிலில் வெளியூருக்கு கோவிலுக்கு என்று மணல்நிறை வுற்ற காட்டுப்பாதையில் காலில் செருப்பு இல்லாமல் அழைத்துச்சென்றார்.அம்மையால் கால் சூடு தாங்க வில்லை.கணவரைப் பார்த்து கேட்டாள் நிழல் உள்ள இடம் காட்டுங்கள் என்று.கால்சுடுகிறது தாங்க முடிய வில்லை என்றாள்.கணவர் சொன்னார் அதோ உன்நிழல் விழுகிறது.அதில் நின்றுகொள்.கால்சுடாது என்றார்.என் னங்க விளையாட இதுவா நேரம் என்றாள் மனைவி. கணவர் சொன்னார் உன் நிழல் உனக்கு உதவவில்லை உன் பணமா உனக்கு உதவப்போகிறது என்றார்.புரியுது நான் தருமம் கேட்டு வந்தவர்களுக்கு சரியாகத் தராத காரணத்தால் இப்படி பழி வாங்குகிறீர்கள் அல்லவா என கேட்டாள் மனைவி..கடவுள் நமக்கு பணம் கொடுத்தது

தருமம் செய்வதற்க்குத்தான் என்பதை புரியவைக்கவே உன்னை இப்படி அழைத்து வந்தேன்.நொய்யளவாவது தருமம் செய்யவேண்டும் என்று புரிந்தது.நம்மிடம் உள்ள பணத்தை எல்லாம் தருமம் செய்துவிடுங்கள்.எனக்குபுத்தி வந்தது.என்னை மன்னித்து விடுங்கள் என்றாள் மனைவி கணவர் மறைத்து வைத்திருந்த செருப்பை எடுத்து மனைவியிடம் கொடுத்து போட்டுக்கொள் என்று ஆதங்க மாக அணைத்தார்.இந்த அழகான கதையைச் சொல் கிறது மேலே உள்ள கந்தர் அலங்காரப்பாடல்.அருணகிரி யார் வாக்கெல்லாம் அருள்வாக்கே.காரணம் இறைவனை நேரில் கண்ட சித்புருடர்களில் அவரும் ஒருவர்.முருகன் மூன்று பேருக்கு உபதேசித்தார்.

1. சிவபெருமான் ---- தேவ சிரேஸ்ட்டர்
2. அகத்தியர் ----- முனி சிரேஸ்ட்டர்
3. அருணகிரிநாதர் --- நரசிரேஸ்ட்டர்.

இப்படி முருகன் அருள் பெற்ற காறணத்தினால் அருண கிரிநாதர் வாக்கு அருள்வாக்கானது.

1. ஆன்மா -- மனைவி
2. வெயில் -- துன்பம்
3. காலணி --- அருள்
4. கணவன் ---- தெய்வம் ( கருணை )

தருமம் செய்யும்போது அதன்பலன் செய்பவருக்கு வந்து சேராது இருப்பதற்க்கு அதை அர்ப்பணம் செய்ய வேண் டும்.தருமத்தின் சிறப்புக்களை இதுவரை அறிந்த நீங்கள் கீழ்வரும் ஔவையார் பாடலையும் பாருங்கள்.இப்பாடல் நம்மை பயப்படும்படி செய்கிறது.

"கருங்குளவி சூரைத்தூற் றீச்சங் கனிபோல்
வருந்தினர்க் கொன்றீயாதான் வாழ்க்கை --அரும்பகலே
இச்சித் திருந்த பொருள் தாயத்தார் கொள்வரே
எற்றோமற் றெந்றோமற் றெற்று " ( ஔவையார் )

ஒருபேயானது ஔவையாரைத் தாக்கச் சென்று தோற்றுப் போய்விட்டது.அப்பேய் ஔவையாரைப் பார்த்துக் கேட் டது நான் யாரைச் சென்று தாக்கவேண்டும் என்று.அள வற்ற பணத்தை மூட்டை மூட்டையாக சேர்த்து வைத்து

யாருக்கும் பயன்படாவண்ணம் காத்து வருகிறானே,பல வயிறுகள் பட்டிணி கிடக்கும்படி ஒருவருக்கும் கொடுக் காது பாதுகாத்து வருகிறானே அவனைச் சென்று தாக்கு என்று பேக்கு கட்டளை யிடுகிறார் ஔவையார்..தருமம் செய்யாதவனை பேய் என்ன நாய் நரிகள் கூடஎளிதில் கொன்றுபோட்டு விடும்.கொடுக்கும் குணத்துக்கு உதா ரணம் வாழை மரம்.வாழைமரம் தன் அடிக்கிழங்கு முதல் தண்டு,காய்,கனி,இலை,பூ என்று அனைத்தையும் வளர்த்தவருக்கு தருகிறது.அதனால்தான் பெரியவர்கள் வாழ்த்தும்போது "வாழைபோல் வாழ்ந்து " என்று வாழ்த் துவார்கள்.கும்பகோணம் நகரிலே வடிகட்டிய கஞ்சன் ஒருவன் இருந்தான்.எச்சில் கையால் காக்கைகூட ஒட்ட மாட்டான்.அவன் வீட்டு தோட்டத்திலே ஒருவாழை மரம் இருந்தது.அதில் இலையும் இல்லை.பூ, காய், கனி, தண்டு என எல்லாவற்றையும் கொடுத்துவிட்டு மொட்டையாய் நின்றது.இப்போது பாடலைப் பாருங்கள்.

"திருத்தங்கி தன்வாழை தேம்பழுத்து நிற்கும்
மருத்தன் திருக்குடந்தை வாழை -- குருத்தும்
இலையுமிலை பூவுமிலை காயுமிலை என்றும்
உலகில் வருவிருந்தோ டுண்டு " ( ஔவையார் )

செல்வம் அதிகமாக பெற்றிருந்தும் பிறர்க்கு கொடுக்கப் பழகாமல் சேமித்து புதைத்து வைத்தாலும் அதன்பலன் ஒருவருக்குமில்லை.இங்கு அந்த எஜமானனைவிடவாழை மரம் உயர்ந்தது என்னும் பொருள் விளங்கும். அன்பு இல்லாதவரிடம் நான் சேராதபடியும் வகை செய்துநிலை கும்படிக்கான் செல்வத்தை தருவாய் சிதம்பரத்தில் உறையும் தேசிகப்பெருமானே என்று வேண்டுகிறார் பட்டினத்துச்சாமிகள்.

வாதுற்ற திண்புய ரண்ணாமலையார் மலர்ப்பதத்தை
போதுற் றெப்போதும் புகலு நெஞ்சே இந்தப் பூதலத்தில்
தீதுற்ற செல்வமென் தேடிப் புதைத்த திரவியமென்
காதற்ற ஊசியும் வாராது காணும் கடை வழிக்கே

கோடிக்கணக்கான செல்வங்களை ஒரு நொடியில் துறந் தவர் பட்டினத்தார்.செல்வங்களை தேடி புதைத்து வைத்

தாலும் இறுதிகாலத்தில் வருமோ என்று ஊசியைக்காட்சிக்கு வைத்து ஞானத்தைப் போதித்தவர் பட்டினத்துச் சாமிகள்.

" அறமிலாவதி பாதக வஞ்சத் தொழிலாலே அடியனேன்
மெலிவாகி மனஞ்சற் றிளையாதே " ( திருப்புகழ் )

அறம் இல்லாமல் செய்யப்படும் தொழில்கள் கருமங்கள் எல்லாம் பாதகமாகவே முடியும்.அவ்வாறு பாதகமாக இருந்தாலும் அது வஞ்சத்தை உடையதாகவே இருக்கும் என்று சொல்கிறார் அருணகிரியார்.பாதகமும் வஞ்சமும் ஏற்படும்போது மனம் நொந்து மெலிவாகிவிடும்ஆகவே தருமம் செய்யும்போது கடவுள் பெயர் சொல்லி செய்ய வேண்டும்.இதனையே வள்ளுவரும் சுருக்கமாக சொல்கிறார்." அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை பண்பும் பயனும் அது."என்று.பண்பட்ட நிலத்திலே பயிர் செழித்து வளரும்.பக்குவப்பட்ட ஆன்மாவிடத்திலே இறையருள் செழித்து மலரும் என்பது தத்துவங்கள் சாற்றும் உண்மையாகும்.தமிழ் இலக்கியங்கள் தர்மம் செய்தவர்கள் பட்டியலை நீட்டுகிறது.ஔவைக்கு அதிகமான் நெல்லிக்கனி தந்தது,செத்தும் கொடைகொடுத்த சீதக்காதி,சகோதரனுக்காக தலை தந்த குமணன், முல்லைக்குத் தேர்தந்த பாரி,மயிலுக்கு ஆடைதந்த பேகன் இப்படி வரலாறுகள் தர்மத்தை படம்பிடித்துக் காட்டுகின்றன.

அவ்வள்வு ஏன் சடையப்ப வள்ளல் ஆதரவில் வாழ்ந்தவர் கவிச்சக்ரவர்த்தி கம்பர்.உலகிலே இன்று கம்பராமாயணம் நின்று விளங்குவதற்க்கும் இராமன் பெருமை பேசுவதற்க்கும் சான்றாக திகழ்வது கம்பராமாயணம்.சடையப்ப வள்ளல் கம்பருக்கு எண்ணற்ற உதவிகள் தருமங்கள் செய்தார்.ஆனால் கம்பர் சடையப்ப வள்ளலுக்கு என்ன செய்யமுடியும். ஆயினும் தந்தார் எதை என்றால் நன்றி பாராட்டி உயர்ந்த சீரும் சிறப்பும் தந்து விட்டார்.அப்படி பாராட்டாவிட்டால் அவர்களுக்கு உய்வு என்பதில்லை.
எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்நன்றி கொன்ற மகர்க்கு. ( திருக்குறள் )நன்றி

பாராட்டுதல் என்பது மனிதனுடன் பிறந்தது என்பது குறிப்பிடவேண்டியது ஆகும்.செய்த உதவியையும் கரு ணையையும் ம்றந்தவர்கள் இந்த உலகில் வாழ்ந்தும் பயனற்றது. இது பிறவி தந்த கடவுளுக்கும் பொருந்தும் சடையப்ப வள்ளல் செய்த உதவிக்கு அவரை உயர்ந்த இடத்தில் வைக்கவேண்டும் என்று நினைத்தார் கம்பர். அது தலைபோலவும் த்லையாயதாகவும் இருக்க வேண் டும் என்று கருதினார்.ஆம் அவர் தேர்வு செய்த இடம் இராமர் முடிசூட்டுவிழா.( பட்டாபிசேகம் ) காட்சி. என்றால் எப்படிப் பட்டது.இப்போது பாடலைப் பாருங்கள்.

அரியணை அநுமன் தாங்க அங்கதன் உடைவாள் ஏந்த
இருவரும் கவரிவீச பரதன் வெண்கொற்றக்குடைகவிழ்க்க
விரைசெறி குழலி ஒங்க வெண்ணை நல்லூர்ச் சடையன் தங்க:ள்
மரபினோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மெளலி

( கம்பராமாயணம் )

இராமபிரான் மகுடாபிசேகத்தில் ராமனுக்கு சூட்டிய திரு முடி ( கிரீடம் ) வெண்ணை நல்லூர் வாழும் சடையப்ப வள்ளல் மரபினர் கொடுக்க வாங்கி குல குருவானவசிட்ட மக்கரிசி இராமபிரானுக்குச் சூட்டினார்கள்என உயர்ந்த இடத்திலே வைத்து தன் நன்றிக்கடனைநிரூபித்துவிட் டார் கம்பர்.இதன் மூலம் தானமும் தருமமும் செய்பவர் கள் வரலாறுகளில் உயர்ந்த இடத்தைப் பெறுவார்கள். எல்லா உலகுக்கும் உயிர்களுக்கும் தலைவனாக இருக் கும் இறைவனது அங்கீகாரத்தையும் பெற்று அதன்மூலம் பயன் பெறுவர் என்று நிரூபிக்கப்படுகிறது.

ஆகவே மானிடப்பிறப்பு மாறவேண்டும்.இறைவன் தந்த செல்வத்தை இல்லாதவர்களுக்குத் தரவேண்டும்..அப் போதுதான் வானவர் நாடு வழிவிடும் என்ற ஔவையார் பாடலையும் நினைவுகூற வேண்டும்.இவைகள் மூலம் பிறப்பெடுத்த நாம் தானமும் தவமும் செய்து தலை

வனைக்கூடவேண்டும் என்பது நியதியாக சாத்திரங்க ளால் பேசப்பட்டுள்ளது என்பது கண்கூடு.அறம் ஆண்டவனை காட்டுவிக்கும் கண்ணாடியாகும்.அருள் பெருவதற்க்கு மூலதனம் அறம் ஆகும்.அரிதான மனி தப்பிறவியில் தானமும் தவமும் செய்துவிட்டால் வான வர்நாடு வழிதிறந்துவிடும் என்பது மேலோர் வாக்கு.. ஆகவே பக்தி அன்பு அறம் பாவனை பூசை நல்வழி இவைகள் எல்லாம் எடுத்திட்ட இப்பிறவிக்கு நற் பயனை ஊட்டி பேரின்பப் பெருவாழ்வு நல்குவது உறுதி என்று நம்புவோமாக நலம் பெறுவோம்.

---

அறம் ஒன்றே அகிலத்தில் பெரியதென
திறம் செய்வது சிறப்பெனும் --- வரம்
கொண்ட கொள்கையால் குலம் விளங்கும்
திண்மை படைத்தது திலகம் " ( ஆசிரியர் )

# கதம்பம்

நன்றி :-பெற்றிட்ட இப்பிறப்பு இறைவனை வணங்குவ தற்க்குத்தான் என்ற நியதியை ஒவ்வொருவரும் தெரிந்து கொண்ட நல்ல சமுதாஅம் எதிர்காலத்தில் உருவாகும் என்பதில் ஐயமில்லை.

" எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்நன்றி கொன்ற மகர்க்கு "என்று திருக்குறள் செப்பு கிறது.இவ்வுலகில் நாம் அன்பவிப்பதற்க்கு வேண்டிய எல் லாவித கருவிகரணங்களையும் போகங்களையும் நமக்குத் தந்தது இறைவன் தானே.அவ்விறைவனுக்கு நன்றி செய் வது நமது கடமை.தலையே நீ வணங்காய் தலை மாலை தனையணிந்து,கண்களே நீ காணாய், கைகளே நீ குவிப் பாய், வாயே நீ அவன் நாமத்தைச் சொல்வாய்,காதுகளே நீ அவன் புகழ் கேட்பாய் என்று திருமுறைகளால் பேசப் படுகிறது..அதுமட்டுமல்ல அவனைபெசாத நாள் எல்லாம் பிறவா நாளே என்றும் திருமுறைகளால் பேசப்படுகிறது.

அரியானை அந்தணர்தம் சிந்தையானை அருமறையின்
அகத்தானை அணுவற்க்கணுவாய்
தெரியாத தத்துவனை திகழ்ஒளியை தேனைப் பாலை
தேவர்கள்தங் கோமானை மற்றைக்
கரியானை காற்றைக் கனலை கணகடலை குலவரையை
கலந்து நின்றப்
பெரியானை பெருபற்றப் புலியூரானைப் பேசாத நாள்
எல்லாம் பிறவா நாளே

என்று தமிழ் வேதத்தில் சொல்லப்பட்டுள்ளது.எனவே இப்பிறவி தந்த பெருமானை அப்புண்ணியனை பூசிக்க வேண்டும்.புண்ணியம் செய்தோர்க்குப் பூவுண்டு நீருண்டு என்றும் தமிழ் வேதங்களால் பேசப்படுகிறது.தாயும் தந்தையுமாய் இருந்து உயிர்களைக் காப்பாற்றும் இறை வனுக்கு நன்றி செலுத்துவதென்பது பிறவிபெற்ற ஆன் மாக்களது தவிர்க்க முடியாத கடமையாகும். இக்கடமை

செய்வதுதான் பிறவி பெற்ற ஆன்மாக்கள் பெறும் சிறப்பு ஆகும்.
தீப ஆராதனை :- தீப ஆராதனை பலவிதமாய் அமையும் மந்திரங்களைச் சொல்லி ஆராதித்தல் ஒருவகை.தியானத் தால் ஆராதனை உயர்வானது.ஆலயங்களிலும் வீட்டி லும் நடக்கும் ஆராதனை உன்னதமானது உயர்வானது, ஒளிமயமானவன் இறைவன்.ஒளியை ஏற்றினால் இருள் விலகும்.மனிதர்களுக்குள் உறையும் அறியாமை இருள் விலக இறைவனது ஒளி அவசியமாகும்.அறிவு மயமான ஒளியைத்தருபவன் இறைவன்.இதை உணர்த்துவதுதான் தீப ஆராதனை.
தீப மங்கள சோதி நமோ நம
தூய அம்பல லீலா நமோ நம
தேவ குஞ்சரி பாலா நமோ நம -- அருள்தாராய் என்று முருகனிடம் வேண்டுகிறார் அருணகிரிநாதர்.கதிரொளி தீபம் கலசமுடனேந்தி என்கிறார் ஆண்டாள் அம்மை இல்லக விளக்கது இருள்கெடுப்பது சொல்லக விளக்கது சோதியுள்ளது என்கிறது தமிழ் வேதம்..தீபத்தில் ஒளியும் உண்டு சூடும் உண்டு நிறமும் உண்டு..இவைகள் கலந் ததுவே தீபம். நெருப்பு வீட்டையும் எரிக்கும் ஊரையும் எரிக்கும்.ஆனால் அதேசமயம் நெருப்பு வைத்து சமையல் செய்கிறோம்..ஆகவெ நெருப்பை பயன் படுத்தும் விதத்தி லுள்ளது என்பதைக்காண வேண்டும்..இன்னும் ஒரு விளக்கம் நீர் வேறு உப்பு வேறு.இந்த இரண்டும் ஒன்றாய் கலந்தது கடல் நீர்.ஆகவே எப்பொதும் சிவம் சக்தி ஒன் றாய் இணைந்தது பிரிக்க முடியாதது என்பது தெளிவு. எரியும் தீபம் -- இறைவன் ,சூடு -- அருள் சக்தி, பரவும் ஒளி -- உயிர்களது வினைகள், எர்யும் வடிவம் -- உயிர் கள் பெறும் பலன்,செம்மை நிறம் -- உயிர்களது அனுபவ நிலை என்பது பெறப்படும். ஆகவே ஆலய தீபாராதனை நமக்கு வழிகாட்டும் ஞான தீபம் இருள்விலக்கும் ஒளி தீபம் என்றளவில் புரிந்துகொடால் போதுமானதாகும். மொத்தத்தில் தீபம் தீமைகளைக் குன்றச்செய்வது என் னும் பொருளிலும் பேசப்படும். அதுவும் சரியே

இறைவனது திருநாமங்களும் மந்திரங்களும் -- உயிர் களுக்கு வைட்டமின் மாத்திரை போல் என்பதறிக.
( VITTAMIN CAPSULES )
இறைவனைப் பற்றிய நூல்கள்,ஆகமங்கள்,பாசுரங்கள் தமிழ்வேதம் உட்பட அனைத்தும் உயிர்களுக்கு தேவைப் படும் உணவு ஆகும். ( FOOD )
திருமுறைகளையோ, பசுரங்களையோசெய்யுள்,பாடல் இவைகளை படனம் செய்வது ( பாராயணம் ) உயிரில் உள்ள நார்ச்சத்து போன்றது. ( FIBROUSMATTER )
தீபாராதனையை தொட்டு வணங்குதல் உயிர்களுடைய உடல் ஆரோக்கியத்திற்கு பெறப்படும் டானிக் போன்றது. ( GLUCOS TRIPS ) ஆகவே ஆலயங்களில் தீபாராதனை தரிசனம் பெறுவது வணங்குவது நமது பலவீனத்தை அகற்றி பலத்தைப் பெறுவது போலாகும்
கடமை :-கடமை என்கிறபோது நாம் நமது தினசரி வாழ்வில் தெய்வத்துக்கு பயந்து அல்லது இறைச்சிந் தனையோடு செயல்படுவது.இறைச்சிந்தனையோடு காரி யம் ஆற்றும்போது தீங்கு ஏற்படுவது இல்லை.அத்துடன் அச்செயலை இறைவனுக்கு சமர்ப்பணம் செய்துசெய்தால் அதன்மூலம் விளையும் பலாபலன்கள் உயிர்களுக்குச் சேராது என்பதையும் அறியவும்..ஆம் இதனால் விளை யும்சஞ்சிதவினை கணக்கில் சேராது.இப்படி கணக்கில் வராத செயலே இனிமறுபிறவிக்கு இடம் இல்லாமல் செய்துவிடும்.. கட -- என்றால் கடவுள், மை -- என்றால் சேவை.கடவுளுக்கு செய்யும் சேவையே கடமை என்று பேர்பெற்றது.
தமிழ் வேதங்களால் சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் வாயில் படிகள் கடமைக்கு இலக்கணம் சொல் கிறது.மண்ணில் பிறந்தவர்கள் ஆற்றும் கடமை இறைவ னுடைய அடியார்களுக்கு அமுது செய்வித்தல்.அத்துடன் பெருமானது திருவிழாக்களை கண்டு களித்தல் என்று பறைசாற்றப்படுகிறது.சமயக் குறவர்கள் ஆகிய நால்வர் பெருமக்கள் ஆற்றியது எல்லாம் இவ்வகையே.அதுவே சீரியனவாகவும் வியக்கத்தக்கனவாகவும் இருந்தது.

இரக்கம் :-பிறருடைய துன்பங்களைக் கண்டு அவர்பால் இரக்கம் காட்டவேண்டியது ஒவ்வொரு மனிதனுடைய கடமையாகும்.

யாவர்க்குமாம் இறைவர்க்கொரு பச்சிலை
யாவர்க்குமாம் பசுவிற்க்கொரு வாய்யுறை
யாவர்க்குமாம் உண்ணும்போது ஒருகைப்பிடி
யாவர்க்குமாம் பிறர்க்கு இன்னுறைதானே "
( திருமுறை )

மற்றவர்களுக்காக நாம் பொருள் கொடுக்க முடியாவிட்டாலும் நாம் இரக்கத்தை யாவது கொடுக்கலாம்..இந்த இரக்கமானது எடுக்க எடுக்க குறையாதது ஆகும். எவராலும் தடைபோட முடியாது.அதை வழங்கினாலே போதுமானது.ஆண்டவன் நமக்கு இரங்குவான்.திருச்சிராப்பள்ளியிலே இறைவன் அடியாரான ஒரு மூதாட்டியிருந்தார்.அவர் மகளுக்கு தலைப்பிரசவம்.வீட்டில் இருந்தாள்.மூதாட்டி காவிரிநதி கடந்து அப்பால் தென்கரைக்கு சென்றுவிட்டார்கள் ஏதோ பொருள் வாங்க.அந்த நேரத்தில் நல்ல மழை மணிக்கணக்கில் பெய்கிறது.காவிரிநதியில் வெள்ளம் கரைபுரண்டு ஓடுகிறது.அந்த நேரத்தில் வீட்டில் இருந்த மகளுக்கு பிரசவ வேதனை ஏற்படுகிறது வலி துடிக்கிறாள்.தனக்கிருந்த ஒரேதாய் அக்கரையில். தாயும் பதறுகிறாள் மகளுக்கு என்ன ஆகுமோ என்று அந்த நேரத்தில் சிவபெருமான் அப்பெண்ணின் தாய் வேடம் பூண்டு வீட்டுக்குள் நுழைந்து மகளுக்கு பிரசவம் பார்த்து வேண்டிய பணிகள் உதவிகள் செய்து அம்மகள் ஒய்வு பெறச்செய்கிறார்.அதேசமயம் மழையும் நிற்கிறது ஆற்றில் வெள்ளம் வடிகிறது.வேகமாக வீட்டை அடைகிறாள். அங்கு மகளுக்கு சுகப்பிரசவம் ஆகி குழந்தை அருகில் படுத்திருக்கக் காண்கிறாள்.மகளைக் கேட்கிறாள் தாய் யாரம்மா இங்கிருந்து உனக்கு பிரசவம் பார்த்தது என்று.என்னம்மா இப்படி கேட்கிறாய் நீதானே அம்மா அத்தனையும் செய்தது.இப்போது நீயே இப்படி கேட்கிறாயே என்று. தாய்க்கு புரிந்துவிட்டது எல்லாம் பெருமான் கருணை என்று.அம்மா மகளே நீ பாக்கிய

சாலி என்று.உனக்கு பிரசவம் பார்த்தது நான் அல்ல
சாட்சாத் சிவபெருமானே என்று..தாய் வடிவில் வந்து
இறைவன் பிரசவம் பார்த்ததால் திருச்சியில் உள்ள
இறைவனுக்கு தாயுமானவர் என்று பெயர்.
நன்றுடையானை தீயதிலாதானை நரை வெள்ளை
ஒன்றுடையானை உமையொரு பாகம் உடையானை
சென்றடையாத திருவுடையானை சிராப்பள்ளி மேவும்
குன்றுடையானை கூறவென் உள்ளம் குளிருமே
( திருமுறை )
இதன் மூலம் இரக்கம் காட்டுபவரிடம் இறைவன் எப்போதும் இருப்பான் என்பது பெறப்படுகிறது.எல்லாம் தெரிந்த இறைவனுக்கு ஒன்று மட்டும் தெரியாது.அதாவது கெட்டது செய்யத் தெரியாது என்பதை இங்கு கவனத்தில் இருத்திக்கொள்ளவும்.இவ்விரக்கத்தின் ஒரு அங்கமே தான்தருமம் என்பதாகும்..மனிதன் செய்யும் தீமைகளயும் அல்லாத செயல்களயும் தான தருமம் செய்தால் அவைகளை புண்ணியச் செயல்களாக மாற்றிவிடும். என்பது கண்கூடு.மகாபாரதத்தில் வரும் கர்ணன் செய்த பாவங்களை எல்லாம் புண்ணியமாக மாற்றி அவனை மோட்ச உலகுக்கு அனுப்பி வைத்தது அவன் செய்த தானமும் தருமமும் ஆகும்.
திருவடிப்பேறு :-இறைவனது பொன்மலர்ப் பாதங்களை திருவடி என்கிறோம்.பிறந்துவிட்ட உயிர்கள் இறுதியில் பெற நினைப்பது அல்லது சேரத்துடிப்பது இறைவனுடைய திருவடியே ஆகும். திரு + அடி = திருவடி
திரு --அழகிய செல்வம் பொருந்திய மேன்மை உடையது
அடி -- பாதம் ,தொடக்கம், பதிதல் என்பது பொருள்.
பேறு என்பது மேலே உள்ள சிறப்புக்கள் வாய்க்கப்பெற்றதுவாகும்.ஒருகட்டிடத்துக்கு அடித்தளம் போல் ஆன்மாக்களுக்கு அடைக்கலம் தருவது இறைவன் திருவடி
" அடியைக் குறியாது அறியாமையினால்
முடியக்கெடவோ முறையோ முறையோ "
( கந்தர் அநுபூதி )
அடியை அறியாதது அவலமே. எவராலும் காணமுடி

யாதது இறைவன் திருவடி.மாலும் அயனும் தேடிக்காண முடியாத திருப்பாதங்கள் அடியார்கள் எளிதில் பற்றும் படி அமைந்ததாகும்..தன்தோழர் ஆன சுந்தரருக்காக திருவாரூர் தெருவில் பதிந்த பாதங்கள் இறைவனது திருப்பாதங்கள் ஆகும்..இறைவனது திருவடி சதகோடி சூரியர்கள் பிரகாசிக்கும் திருவடி என்கிறது திருப் புகழ்.இப்படிப்பட்ட திருவடியை உயிர்கள் அடைந்து பயன் பெருவதே கலத்தல் எனப்படும் ( முக்தி ) மாந்தர்கள் திருவடியை அடைய கடைப்பிடிக்க வேண் டிய மார்க்கங்கள் இரண்து.1.உபய மார்க்கம்.2.உண்மை மார்க்கம்.

உபயமார்க்கம் என்பது இவ்வுலகசுகபோகங்களில் பற்று வைத்து அதனை அடைவதற்க்கு இறைவனை வழிபட்டு நிற்றல்.

உண்மை மார்க்கம் என்பது இவ்வுலகசுகபோகங்களில் மனம் வைக்காது இறைவனை அடைவதில் மட்டுமே குறியாக இருந்து வழிபடுதல்.

" பக்தியும் முக்தியும் பயப்பது திருவடி
பரவசம் சேர்க்கும் பாங்காவது திருவடி
நலமும் பலமும் நல்குவது திருவடி
நலிந்தோர் நாளும் நவில்வது திருவடி " (பழம்பாடல்)

ஆகவே இப்பிறப்பிலேயே நாம் எப்படியாவது இறைவன் திருவடியடைய முயல வேண்டும்.

தொகுப்புரை :-எடுத்திட்ட இப்பிறப்பில் இன்பம் நுகர்வதே உயிர்கள் பெரும் சிறப்பு ஆகும்.இதற்க்கு துணை புரிவது திருவருள். திருவருள் பெற்றால் எதனையும் சாதிக்கலாம் மனிதர்களுடைய பிறவிகள் இறைவனுடைய பட்டோலை யில் எழுதப்பட்ட குறிப்பின் படியே நடகிறது.உயிர்கள் மலநீக்கம் பெற்றால் இறைவனது திருவருள் கிடைக்க ஏதுவாகிறது..இறைவன் கரைகாண முடியாதவன். HE IS ONLY THE LORD AND END TO THE END .முதலும் முடி வும் இல்லாத இறைவனுடன் நாம் முறையாக கலக்க முயற்ச்சிக்க வேண்டும்.இறைவனோடு கலக்கும் உறவே உண்மையான உறவு.அதுவே திருவருள் / முக்தியாகும்

ஞானம் மனிதர்களுக்கு கைவரப்பெறும்போது இறைவன் தீப ஒளியாக நம் உள்ளும் புறமும் நின்று ஒளிர முனை கிறான்.இறைவனுடைய திருவடியைப் பற்றி பிறப்பு அறுப் பதும் அமைதி யடைவதும் நமது முதன்மையான லட்சி யம் ஆகும்.உல்கெங்கும் உள்ள செல்வந்தர்களும் ஆன்ம லாபம் கருதுபவர்களும் இந்தியாவில் உள்ள ஆசிரமங் களைத்தேடி வந்து அடைக்கலமாக வாழ்ந்துகொண்டு இருக்கிறார்கள்.இதற்க்கு உதாரணம் இராமகிருஷ்ண ஆசிரமம்.ரமணமகரிஷி ஆசிரமம்.சித்பவானந்த ஆசிரமம் இப்படிப்பல சொல்லிக்கொண்டெ போகலாம்.முறையான நெறிப்படுத்தப் பட்ட வாழ்க்கை வாழ்பவர்களுக்கு திரு வருள் எந்தநேரத்தில் எப்படிப்பட்ட ரூபத்தில் வரும் என்று சொல்ல முடியாது..இதனை அடைவதற்க்கு காத் திருக்க வேண்டும்..இதைத்தான் பசித்திரு -- விழித்திரு தனித்திரு என்றார்கள்.இறையருள் பெறும் பசியோடு இருத்தல்,இறையருள்பெற தூங்காது விழித்திருத்தல் இறையருள் பெறுவதர்க்கு தனிமையில் இருத்தல் என் பது பொருள்படும்.

இதற்க்கு உதாரணம் சிதம்பரத்தில் உள்ள கோவில் மடைப்பள்ளிக்கு விறகு கொண்டுவந்து போடும் வேலைக் காரன் ஆன பெற்றான் சாம்பன் பெற்ற சிறப்பும் வரலாறு ஆகும்.பெரும்பாண்மையான அருளாளர்களும் அடியார் களும் திருவருளைப் பெற்றதும் இறைவனைக் கண்டதும் இரவில்தான்.

அடுத்து திருவருளைப்பெற உதவுபவர் குரு. கு--என்றால் ஒளி ,ரு--என்றால் இருள், ஆக குரு என்பவர் இருளை நீக்கி ஒளியைத்தருபவர் என்பது பொருள்.அறியாமை என்னும் இருளை நீக்கி ஞானம் என்னும் ஒளியைத் தருபவர் குரு என்பது புலப்படும்.தன்முனைப்பு அற்று மலநீக்கம் பெற்ற ஆன்மாக்களுக்கு இறைவன் குருவாக வருவான் என்பது சித்தாந்தம் காட்டும் தெளிவு.மணி வாசகரை ஆட்கொள்ள இறைவன் குருவாக வந்தான்

இது திருப்பெருந்துறையில் நடந்த சம்பவம்.பொதுவாக உயிர்கள் இறைவன் குருவாக வருவதைத்தான் விரும்பு கிறன என்பது உண்மை. அதனால்தான் அருணகிரி நாதர் குருவாய் வருவாய் அருள்வாய் குகனே என்று முருகனிடம் இறைஞ்சுகிறார். குருவருள் கிடைத்தால் திருவருளும் கிடைத்துவிடும். என்பது நம்பிக்கை. சைவர்களுக்கு சிவச்சின்னங்கள் மூன்று. மந்திரம் திருநீறு உருத்திராக்கம் அணிதல் ( கண்டிகை ) இம்மூன்றும் வாழ்வில் கைக்கொண்டால் போதும் திரு வருளைக் கூடிவிடலாம்.

நாம் ஒரு தினத்தில் ஒருமுறையாவது ஆலயம் செல்ல வேண்டும்,அவன் திருநாமத்தைச் சொல்ல வேண்டும் அவன் பெருமைகளைப் பேச வேண்டும் உண்பதர்க்கு முன்பு மலரிட்டு வணங்க வேண்டும்.நெற்றியில் அவன் திருநீரு பூசவேண்டும்.இவ்வைந்தினையும் நாம் கைக் கொண்டால் நமக்கு பிறவி இல்லை.இதில் ஏதாவது ஒன்றையாவது கடைப்பிடிக்க வேண்டும்.அப்படி இல்லா தவர்கள் மீண்டும் மீண்டும் மண்ணில் பிறப்பார்கல் இறப்பார்கள் என்று திருநாவுக்கரசர் சொல்கிறார்.பெற் றிட்ட இப்பிறவி எத்தகையது என்பதை மீண்டும் சொல் கிறார் பாருங்கள்.

" வளைத்து நின்று ஐவர் கள்வர் மனத்திடை
துயரஞ் செய்து
தளைத்து வைத்து உலையில் ஏற்றி தழலெரி
மடுத்த நீரில்
திளத்து நின்று ஆடுகின்ற ஆமைபோல்
தெளிவு இலாதேன்
இளைத்து நின்று ஆடுகின்றேன் என்
செய்வேன் தோன்றினேனே " ( திருமுறை )

இங்கே பிறவிக்கும் உயிருக்கும் ஆமையை உதாரணம் காட்டி விளக்கி இருப்பது மிக மிக அருமையாகும்.தான் மடியப்போகிறோம் என்று உணராமல் மகிழ்ச்சியாக விளையாடுகிறதாம் அந்த ஆமை.விளக்கம் பாருங்கள்

அடுப்பு என்னும் மூன்று கற்கள் = வாதம் பித்தம்
சிலேத்துமம் என்பது
இரும்புக்கொப்பரை = தேகம்
சுத்தநீர் = ஆசை
ஐந்து பேர்கள் = சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம்
ஆமை = ஆத்மா ( உயிர் )
தாம்பளம் = பந்த பாசம்
விறகு = பிறவி
அக்கினி = வினைகள்
பார்த்தீர்களா நாம் இப்பிறவியை எவ்வாறு சுகித்துக் கொண்டிருகிறோம் என்பது இதன் மூலம் நன்கு புரியும் எனவேதான் காரைக்கால் அம்மையாரும் பிறவிவேண்டாம் என்றார்கள்;அருணகிரியார் நம்முடனேயே இருந்து நமக்கு குழி பறிப்பவர்கள் ஐம்புலன்கள் எனும் கருவிகள் எனவே இறைவனை சிந்தித்து வந்தித்து வழிபட வகுப் போமேயானால் அதற்க்கு எளியேனது திருவருள் நூல் துணை செய்யுமேயானால் நாம் பாக்கியம் பெற்றவர்கள் ஆவோம் எனக்கூறி இந்நூலினை நிறைவு செய்கின்றேன் எல்லாரும் இறைவனை வணங்குவோம்-வளம்பெறுவோம் வாழ்வோம்.

கண்கவர் பூக்களால் கட்டுவது கதம்பம்
மண்வந்த மானிடர்க்கு மதிப்புடனே -- வண்ணமென
திருவருள்சேர நூலிதனை திருவருளால் ஆக்கினேன்
மருவியே படித்து மகிழவே. " ( ஆசிரியர் )

## இந்நூல் உருவாக துணை வந்த நூல்கள்

1. 14 சாத்திர நூல்கள்
2. நாலாயிர திவ்ய பிரபந்தம்
3. திருமுறைகள்
4. திருக்குறள்
5. தொல்காப்பியம்
6. ஔவையார் பாடல்கள்
7. பட்டினத்தார் பாடல்கள்
8. நீதிநெறி நூல்கள்
9. அறநெறிச்சாரம்
10. விவேகசிந்தாமணி
11. சித்தர் பாடல்கள்
12. சிலப்பதிகாரம்
13. திருப்புகழ்
14. செவிவழி கேட்ட செய்திகள்
15. வில்லிபாரதம்
16. கம்பராமாயணம்
17. திருப்பாவை
18. பரிபாடல் & மற்றும் பல.

இப்புத்தகம் அழகுடன் உங்கள்
கைகளில் அடைய அரும்பெரும்
முயற்சியும் ஆவனசெய்தும் தந்த
அருள் உள்ளங்களாகிய மேன்மை
சால் திருச்சிராப்பள்ளி அன்பர்
சிவத்திரு மலையாண்டி
மற்றும் ஹாசன் அன்பர்
சிவத்திரு சின்னாண்டி(ரவி )
அவர்களுக்கும் அடியேன் நன்றி
செலுத்தி அவர்கள் இறையருளால்
பல்லாண்டு பல்லாண்டு வாழ எல்லாம்
வல்ல ஆடவல்லான் திருப்பாதங்களை
சிந்தித்து வந்தித்து வணங்குகின்றேன்
வாழ்க வாழ்க வளர்க வளர்க
நன்றி நன்றி நன்றி
தங்கள் அன்புக்குரிய சிவத்தொண்டன்
சிவத்திரு சோமசுந்தரப் பெருமாள்
ஆசிரியர் --- கர்நாடகமாநிலம்

# நூலாசிரியர்



கவிஞர் புலவர் சித்தாந்தநன்மணி

சிவத்திரு. சோமசுந்தரப் பெருமாள்

அர்க்கல்கூடு-517102

ஹாசன் மாவட்டம் கர்நாடகா.